# பொருளாதார மற்றும் குடிவாழ்க்கைப் புள்ளியியல்

# (ECONOMIC AND VITAL STATISTICS)

கெ. ஆர். இராஜகோபாலன்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ) வரிசை எண்— 843

# பொருளாதாரம் மற்றும் குடிவாழ்க்கைப் புள்ளியியல்

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

கெ. ஆர். இராஜகோபாலன், பி.எஸ்ஸி.(ஆனர்ஸ்),
புள்ளியியல்துறை பேராசிரியர்,
சென்னை கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—March, 1979

Number of Copies—2000

T.N.T.B.S. (C.P.) No. 843



**ECONOMIC AND VITAL STATISTICS**

K. R. RAJAGOPALAN

*Price Rs.* **8-20**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture) New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*

A. S. Printers,
Madras—600 018

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்பு வரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும், தமிழிலேயே கற்றுவந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதவியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான பொருளாதாரம் மற்றும் குடிவாழ்க்கைப் புள்ளியியல் என்னும் இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 843 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 878 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூகநல அமைச்சகத்தின், 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள் அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக.

செ. அரங்கநாயகம்

# பொருளடக்கம்

# 1. குடிவாழ்க்கைப் புள்ளிவிவரங்கள்

## (Vital Statistics)

**1.1. முன்னுரை :** ஒரு நாட்டு மக்களின் பிறப்பு, இறப்பு விவரங்கள், அவர்களின் வயதுப் பிரிவுகள் எப்படி உள்ளன, அவர்கள் சாதாரணமாகத் திருமணம் செய்துகொள்ளும் வயது என்ன, மணமுறிப்பு விவரங்கள் (Divorce), அந்நாட்டில் பரவலாக இருக்கும் வியாதிகள் முதலியவை நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிப்பதால், அவற்றைப்பற்றி நன்கு அறிந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் அந்நாட்டு அரசாங்கத்திற்கு உள்ளது. ஒரு நாட்டின் தரம் அந்நாட்டு மக்களின் தரத்தைப் பொறுத்துள்ளது. மேற்கூறிய பல அம்சங்கள் மக்களின் தரத்தைப் பாதிக்கக் கூடும் என்பதால், அவற்றைப் பற்றிய விவரங்களைச் சரிவரக் கணித்து வேண்டியன செய்வது அரசின் கடமையாகிறது.

புள்ளியியல் துறைகளிலேயே மிகவும் தொன்மை வாய்ந்த பகுதி மேற்கூறிய விவரங்களைச் சார்ந்ததுதான். முன்காலத்திலும் நாட்டின் மக்கள்தொகை என்ன, அதில் எவ்வளவு இளைஞர்கள் போர் வீரராவதற்கு ஏற்றவர் என்பன போன்ற விவரங்கள் ஒவ்வொரு நாட்டு அரசனுக்கும் தேவைப்பட்டன. இவைகளைக் கணிக்க வேண்டியதன் அவசியத்தை, சாணக்கியரும் தன் 'அர்த்த சாஸ்திரம்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இவ்விவரங்கள் நாட்டிற்கு மிகவும் தேவையானவை எனக் கருதப்பட்டதால், அவைகட்கு அடிப்படைப் புள்ளியியல் விவரங்கள் (Vital Statistical information) என்ற பெயர் வந்தது. இவ் விவரங்களைக் கொண்ட துறை அடிப்படைப் புள்ளியியல் (Vital Statistics) எனப்பட்டது.

இத்தகைய புள்ளி விவரங்கள் நாட்டின் பலதரப்பட்ட மக்களுக்கும், நிறுவனங்களுக்கும், அரசாங்கத்திற்கும் பயன்படுபவை. மற்றும் பன்னாட்டு நிறுவனங்களுக்கும் (International Agencies) பயன்படுபவை. தனி மனிதனுக்கு அவனுடைய பிறப்புச் சான்றிதழ் (Birth Certificate) வாழ்க்கையில் மிகவும் தேவைப்படும். பள்ளியில் சேரவும், பின் கல்லூரியிலும், வேலையில் சேரும் பொழுதும் அவனுக்குத் தன் பிறந்த சான்றுகள் தேவைப்படும். அதேபோல் ஒருவனுக்குத் திருமணமான தேதி முதலியன ஒரு

பிறப்பின் முறைமை (Legitimacy) நிலையை நிர்ணயிக்க உதவும்; அன்றியும் திருமணத்தையே சட்டத்துக்குட்பட்டதாக்கவும் (Legitimatice) உதவும்.

நாட்டில் ஒரு தொற்றுநோய் பரவுகின்றது என்றால், எந்தப் பகுதிகளில் அந் நோய் அதிகமாகவும், எங்கெங்கு குறைவாகவும் உள்ளது என்ற விவரங்கள் சுகாதார அதிகாரிகளுக்குத் தேவை யானவை. இந்த விவரங்களை இறப்பு புள்ளி விவரங்களிலிருந்தும் அறியலாம். தொற்று வியாதி பரவத் தொடங்கியவுடன் அந்த இடத்தில் உள்ள தனியார் அல்லது அரசு மருத்துவர்கள் அந் நோயைப்பற்றிய விவரங்களை உடனுக்குடன் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கவேண்டும் என்ற விதியிருந்தால்தான், உடனடியான தடுப்பு முயற்சிகள் எடுத்துக்கொள்ள முடியும். அதேபோல், மணமுறைகளில் ஒரு புதிய முறை தோன்றினால் அதனைச் சட்டப் படி உரியதானதாகச் செய்யாவிடில், பின்னர் பலவித இன்னல்கள் பட வேண்டியிருக்கும்.

அரசாங்கம் தற்காலத்தில் ஈடுபட்டிருக்கும் பற்பல துறை களிலும், இத்தகைய அடிப்படை விவரங்கள் தேவையானவை. எந்த ஓர் அரசாங்கத் துறையும் இவ் விவரங்கள் இன்றிச் செவ்வனே செயல்பட முடியாது. பன்னாட்டு உதவி நிறுவனங் களுக்கும், எந்த ஒரு குறிப்பிட்ட நாட்டிற்கு எப்படிப்பட்ட உதவி தேவை என்பதை அறிய, இத்தகைய பிறப்பு இறப்பு விவரங்களே பயன்படுகின்றன.

நாட்டின் பல்வேறு துறைகளின் ஆராய்ச்சியாளர்களுக்கும் இவ் விவரங்கள் பயன்படும் என்பது சொல்லாமலே விளங்கும். குறிப்பிட்ட நாட்டின் மக்கள்தொகை எவ்வாறு குறைந்தோ அதிகரித்தோ வருகிறது; மக்கள் எப்பகுதிகளிலிருந்து எவற்றிற்குக் குடியேறுகின்றனர்; நாட்டின் மக்கள்தொகை பத்து அல்லது இருபது ஆண்டுகளில் என்ன மாற்றமடையும் என்ற விவரங்களுக்கு விடை காண, ஆராய்ச்சியாளர் நாடுவது அடிப்படைப் புள்ளி விவரங்களைத்தான்.

**1.2.** அடிப்படைப் புள்ளி விவரங்களைப் பெறுவதற்கு நாம் சாதாரணமாக மூன்று முறைகளைக் கையாளலாம்: (1) பதிவு முறை, (2) சென்ஸஸ் அல்லது மக்கள்தொகை கணிப்பு முறை, (3) அறிவியல் முறை.

## 1. பதிவு முறை

நாட்டில் நாள்தோறும் ஏற்படும் பிறப்பு-இறப்பு விவரங்களை அவ்வப்போதே பதிவு செய்வதென்பது ஓர் இன்றியமையாத செயலாகக் கருதப்பட வேண்டும். ஒவ்வொரு குழந்தை பிறந்தவுடன் அதற்கான தகவல்களைப் பதிவாளர்களிடம் பதிவு செய்ய வேண்டியது அக் குழந்தையைச் சார்ந்தவரின் கடமையாகும்; அவ்வாறே இறப்பு பற்றிய தகவல்களும் தெரிவிக்கப்பட வேண்டும். பல நாடுகளில் பிறப்பு இறப்பு தகவல்களைத் தாக்கல் செய்து அவற்றிற்கான அத்தாட்சிப் பத்திரம் பெறுவது பற்றிய கட்டாயச் சட்டம் உள்ளது. சட்டத்தை மீறியவர்களுக்குக் கடுமையான தண்டனை வழங்கப்படுகிறது. நம் நாட்டிலும் அத்தகைய சட்டங்கள் உண்டு என்றாலும், அவற்றை வலியுறுத்தி நடைமுறைப் படுத்தப்படாததால், நம் நாட்டின் அடிப்படைப் புள்ளிவிவரங்கள் அவ்வளவு திருத்தமாக உள்ளன எனக் கூற முடியாது. ஒவ்வொரு கிராமந்தோறும், நகரந்தோறும் பிறப்பு-இறப்பு பதிவு அதிகாரிகள் இருப்பினும், விவரங்கள் திருத்தமாகக் கணிக்கப்படுகின்றன என்று கூற முடியாது. இத்தகைய விவரங்கள் நாட்டிற்கு மிகவும் அடிப்படைத் தேவை என்ற உணர்ச்சி மக்களிடையே பரவ வேண்டும். அப்போதுதான் விவரங்களைத் திருத்தமாகச் சேகரிக்க முடியும். நமக்கு வேண்டிய பிறப்பு விவரங்களை மருத்துவமனைகளின் பதிவுக் குறிப்புகளிலிருந்து பெற்றால், வீட்டிலேயே நிகழும் பிறப்புகள் கணக்கில் வருவதில்லை. அவ்வாறே இறப்புகள் எல்லாமே இடுகாட்டிற்கு வந்துவிடும் என்றும் கூற முடியாது.

## 2. மக்கள்தொகை கணிப்பு முறை

ஒவ்வொரு நாட்டிலும் 10 ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்கள் தொகை கணிப்பு அல்லது சென்ஸஸ் எடுப்பது வழக்கமாக உள்ளது. அப்போது அந் நாட்டு மக்களைப்பற்றிப் பற்பல விவரங்கள் சேகரிக்கப் பெறும். (இவற்றைப் பற்றிப் பின்னர் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.) இந்த விவரங்களிலிருந்தும் பிறப்பு இறப்பு விவரங்களைப் பெற முடியும். ஆனால், இவை சென்ஸஸ் எடுக்கப்படும் அந்த ஆண்டிற்கு மட்டுமே உரியனவாக இருக்கும். ஒரு கணிப்பு ஆண்டுக்கும் அடுத்த கணிப்பு ஆண்டிற்கும் இடையில் உள்ள காலத்தின் விவரங்கள் இம்முறையினின்று தெளிவாகக் கிடைக்காது.

குறிப்பிட்ட ஒரு துறையைப் பற்றிய விவரங்கள் வேண்டுமாயின், அதற்காகத் தனியாக ஒரு கணக்கெடுப்பு செய்வது நன்று.

உதாரணமாக, நாட்டில் அம்மை நோய் எவ்வாறு குறைந்துள்ளது என்பதைக் காண, ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை கணிப்பு எடுக்கலாம்.

## 5. அறிவியல் முறை

இரு சென்ஸஸ் ஆண்டுகளில் கிடைத்த விவரங்களைக் கொண்டு இடையேயுள்ள ஆண்டுகளுக்கான விவரங்களைக் கணக்கிடலாம். இம்முறையே அறிவியல் முறை எனப்படும். ஆனால், இம்முறையைப் பின்பற்றி வருங்காலத்திற்குத் தேவையான விவரங்களைத்தான் கணிக்கலாமே அன்றி, நடப்பு ஆண்டிற்கோ அல்லது சென்ற ஆண்டுகளுக்கோ தேவையான விவரங்களைப் பெற முடியாது.

இங்கு உபயோகிக்கப்படும் சூத்திரம் பின் வருமாறு :

$$P_t = P_0 + B - D + I - E \qquad \ldots (1)$$

$P_t$—t'ஆண்டின் மக்கள்தொகை—கணக்கிட வேண்டியது.

$P_0$—கடைசியாக மக்கள் கணிப்பு நடந்த ஆண்டின் மக்கள்தொகை.

B—இடைவெளியில் உண்டான பிறப்புகள்.

D—இடைவெளியில் நேர்ந்த இறப்புகள்.

I—இடையாண்டுகளில் ஏற்பட்ட குடியிறக்கம்.

E—இடையாண்டுகளில் ஏற்பட்ட குடியேற்றம்.

எனவே, அடிப்படைப் புள்ளி விவரங்களை அறியச் சிறந்த முறை பதிவு முறையே எனக் கொள்ளலாம்.

**1.3 உயிர்நிலை நிகழ்ச்சிகள் (Vital Events):** பிறப்பு, இறப்பு, மணவாழ்க்கை மூன்றையும் உயிர் நிலையான நிகழ்ச்சிகள் என்று கூறுவது வழக்கம். எனவே, அத்தகைய நிகழ்ச்சிகளின் விதத்தை (Rate) கண்டுபிடித்தல் அவசியமாகிறது. பொதுவாக ஓர் உயிர் நிலை நிகழ்ச்சியில் மொத்தம் பங்கு பெறுவோர் N என்றும், நிகழ்ச்சி ஏற்பட்ட நபர்களின் எண்ணிக்கை n என்றும் வைத்துக் கொண்டால், விதம் $= \frac{n}{N}$. இது ஓர் ஊக அளவை (probability) என்பது தெளிவு. சாதாரணமாக, விதத்தை 1000-க்கு இவ்வளவு என்று கூறுவது வழக்கமாதலால்,

$$\text{வீதம்} = \frac{n}{N} \times 1000 \text{ என்போம்} \quad \ldots \quad (2)$$

## 1. பிறப்பு வீதங்கள்

குறிப்பிட்ட நாட்டின் மக்கள்தொகை எவ்விதமாக மாறிக் கொண்டிருக்கிறது என்பதனைக் கணக்கிட பிறப்பு வீதங்கள் பயன் படும். அவைகளில் பல வகைகள் உண்டு. அவை (அ ) திருந்தாத பிறப்பு வீதம் (crude birth rate), (ஆ.) சிறப்பு கருவள (fertility) வீதம், (இ.) சாதாரண அல்லது பொதுக் கருவள வீதம், (ஈ.) முழுமையான கருவள வீதம். இவைகளைப் பற்றித் தனித் தனியே விளக்குவோம்.

### (அ) திருந்தாத பிறப்பு வீதம்

பிறப்பு வீதங்களில் இதுதான் மிகவும் எளிதானது. குறித்த ஆண்டில் ஒரு நாட்டில் உள்ள சராசரி மக்கள் தொகை P என்றும், அதே ஆண்டு அந்நாட்டில் பிறந்த குழந்தைகளின் எண்ணிக்கை B என்றும் இருந்தால், திருந்தாத பிறப்பு வீதம் (CBR) கீழ் வருமாறு :

$$CBR = \frac{B}{P} \times 1000 \quad \ldots \quad (3)$$

இங்கு P என்பது சராசரி மக்கள் தொகையே தவிர, ஒரு குறித்த நாளில் அந்நாட்டிலுள்ள மக்கள்தொகை அன்று. இதனைச் சாதாரணமாக ஆயிரத்துக்கு இவ்வளவு வீதம் என்று கூறுவது வழக்கமாதலால் 1000-ல் பெருக்கியுள்ளோம். 1000 மக்களுக்கு ஆண்டொன்றுக்கு இவ்வளவு குழந்தைகள் உள்ளன என்ற விவரம் இந்த வீதத்தினுல் கிடைக்கிறது. இதன் மதிப்பு, சாதாரணமாக 10—55 வரை இருக்கும்.

இந்த வீதத்தைக் கணக்கிடும்போது நாம் மக்கள் தொகையி லுள்ள வயதுப் பிரிவுகளையும், இனப்பிரிவுகளையும் கருத்தில் கொள்வதில்லை. பெண்ணிற்குத்தான் குழந்தை பிறப்பதால், ஆண்களையும் சேர்த்து P கணக்கிடுதல் சிறந்ததன்று; மேலும் பெண்கள் சாதாரணமாக 15—49 வயதிற்குள் தான் குழந்தை பெறுவர். எனவே, இவ் வீதத்தில் பல திருத்தங்கள் ஏற்படுத்த வேண்டியுள்ளது.

### (ஆ) சிறப்புக் கருவள வீதம் (Specific fertility rate)

எந்த ஒரு வீதத்தைக் கணக்கிடும்போதும் ஒரு குறிப்பிட்ட சிறப்பு உடைய மக்களையே கருத வேண்டியிருக்கலாம்; பிறப்பு

வீதத்தைப் பெண்களுக்கு மட்டுமே கணக்கிட வேண்டியிருக்கலாம் (சிறப்பு-இனம்). நாய் இருமல் (whooping cough) குழந்தைகளுக்கு மட்டுமே வரக்கூடிய வியாதி. அதற்கான வீதம் கணக்கிட, நாம் 15-வயதுக்குள் இருக்கும் சிறுவரின் எண்ணிக்கையை மட்டும் கருத வேண்டும் (சிறப்பு-வயது). இதேபோல், மதம், கிராம-பட்டினம், மணமானவர் - மணமாகாதவர் என்ற குறிப்புகளேயும் சிறப்பு அம்சங்களாகக் கொள்ளலாம்.

எனவே, சிறப்பு பிறப்பு வீதங்களைக் கணக்கிடும்போது நாம் குறிப்பாக இனம் மற்றும் வயது என்பன போன்ற சிறப்பியல்பு களைக் கருதுவோம். பெண்களின் வயதுக்கேற்ப அவர்கள் குழந்தை பெறும் வீதமும் மாறுகிறது. 18—28 வயதுள்ளவர்களுக்கு 38—48 வயதுள்ள பெண்களைவிட அதிகமாகக் குழந்தைகள் பிறக்கக்கூடும். எனவே, சிறப்பு கருவள வீதம் (SFR) என்பதனைக் கீழ்வருமாறு நிறுவுவோம்:

$$SFR_x = \frac{B_x}{P_{fx}} \times 1000 = i_x \qquad \ldots (4)$$

$B_x$ = அந்த ஆண்டு, அந்த வயதுக்குட்பட்ட பெண்களுக்குப் பிறந்த உயிருள்ள குழந்தைகளின் எண்ணிக்கை (Live-births).

$P_{fx}$ = அந்த இடத்தில் அந்த ஆண்டில் அந்த வயதுப் பெண் களின் எண்ணிக்கை (நடு ஆண்டிற்கானது).

இந்த வீதத்தை ஒவ்வொரு வயதிற்கும் தனித்தனியே கணக்கிடலாம். சில வேளைகளில் மக்கள்தொகை வீதங்களை ஐந்தாண்டுப் பிரிவுகளுக்காகவும் கணக்கிடுவது உண்டு. அப்போது x வயதிலிருந்து (x+n) வயதுக்குள்ளிருக்கும் பெண்களின் சிறப்பு கருவள வீதம் ${}_ni_x$ எனலாம்.

வாய்பாடு $${}_ni_x = \frac{{}_nB_x}{{}_nP_{fx}} \times 1000 \text{ என்று வரும்} \qquad \ldots (5)$$

இங்கு ${}_nB_x$ = x-லிருந்து (x + n—1) வயது வரையுள்ள பெண் களுக்குப் பிறந்த உயிருள்ள குழந்தைகளின் எண்ணிக்கை.

${}_nP_{fx}$—அதே வயதுள்ள பெண்களின் எண்ணிக்கை. சாதா ரணமாக இந்த வீதங்கள் 15 வயதிலிருந்து அதிகரித்து சுமாராக 20—29 வயதுகட்கு ஒரு பெருமத்தை அடைந்து, பிறகு சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டே வரும். எனவே, வீதங்களுக்கான வளைகோடு நேர் கோட்டமுடையது. நம் நாட்டின் கருவள வீதங்கள் கீழ்வருமாறு:

**அட்டவணை 1:** அடிப்படை ஆண்டு 1957–1958. விவரங்கள் கிராமங்களுக்கானவை.

| தாயின் வயது | வீதம் |
|---|---|
| 15—19 | 143·9 |
| 20—24 | 263·6 |
| 25—29 | 244·3 |
| 30—34 | 188·3 |
| 35—39 | 127·9 |
| 40—44 | 49·6 |
| 45—49 | 17·6 |




படம் 1.

இந்த வீதம் இடத்திற்கு இடம் மாறும். அதேபோல் வருடத்திற்கு வருடமும், வயதுக்கேற்றவாறும் மாறும். இதில் உயிருள்ள பிறப்புகளையேதான் நாம் கணக்கிடுகிறோம் என்பதும் குறிப்பிடத் தக்கது.

**எடுத்துக்காட்டு 1:** கீழ்க்கண்ட பட்டியலிலிருந்து சிறப்புக் கருவள வீதங்களைக் கண்டுபிடி.

| வயது | பெண்களின் எண்ணிக்கை (1000-களில்) | உயிருள்ள பிறப்புகள் |
|---|---|---|
| 15—20 | 30 | 900 |
| 20—24 | 28 | 1,800 |
| 25—29 | 18 | 2,000 |
| 30—34 | 15 | 1,500 |
| 35—39 | 12 | 500 |
| 40—44 | 7 | 200 |
| 45—49 | 3 | 20 |
| **Total** | 113 | 6,920 |

இப்போது ஒவ்வொரு வயது தொகுப்பிற்கும் தனித்தனியே SFR கணக்கிடுவோம்:

வயது 15—20 SFR $= \frac{900}{30,000} \times 1000 = 30.0$

வயது 20—24 SFR $= \frac{1,800}{28,000} \times 1000 = 64.3$

வயது 25—29 SFR $= \frac{2,000}{18,000} \times 1000 = 111.1$

வயது 30—34 SFR $= \frac{1,500}{15,000} \times 1000 = 100.0$

வயது 35—39 SFR $= \frac{500}{12,000} \times 1000 = 41.7$

வயது 40—44 SFR $= \frac{200}{7,000} \times 1000 = 28.6$

வயது 45—49 SFR $= \frac{20}{3,000} \times 1000 = 6.7$

இவ் விடைகளை, பட்டியலிலேயே பொருத்தலாம்:

| வயது | SFR |
|---|---|
| 15—19 | 30.0 |
| 20—24 | 64.3 |
| 25—29 | 111.1 |
| 30—34 | 100.0 |
| 35—39 | 41.7 |
| 40—44 | 28.6 |
| 45—49 | 6.7 |

**இ. பொதுக் கருவள விதம் (GFR)**

**மேற்கண்ட எடுத்துக்காட்டில், ஒவ்வொரு வயது தொகுப்புக்கும் தனித்தனியே விதங்கள் கணிக்கப் பெற்றுள்ளன. ஆனால் மொத்தமாக, எல்லா (15—49) வயதுள்ள பெண்களையும் சேர்த்து ஒரு கருவள விதம் இல்லை. அத்தகைய விதத்தைப் பொதுக் கருவள விதம் என்று அழைப்பர்.**

இதனைக் கணிக்க வாய்பாடு,

$$GFR = \frac{B_l}{P_s} \times 1000 \qquad \ldots \quad (6)$$

இங்கு $P_s$ = அந்த இடத்தில் அந்த ஆண்டிலுள்ள பெண்களின் சராசரி எண்ணிக்கை (நடு ஆண்டிற்கானது) 15–49 வயதுக் குட்பட்டவர்கள்). சில வேளைகளில் 15 வயது பெறாத பெண்களும், 49 வயதைத் தாண்டிய பெண்களும் குழந்தைகள் பெறுவதுண்டு. இனப்பெருக்கம் நடைபெறும் வயதுகள் என்ன எனக் கூறுவது சற்றுக் கடினமே. எனினும், பொதுவாக அதனை (15—49) என்று கருதுவது தவறாகாது.

மேற்கூறிய எடுத்துக்காட்டில்,

$$GFR = \frac{6,920}{113,000} \times 1000 = 61.2$$

**(ஈ) முழுமையான கருவள வீதம் (Total fertility rate):**

ஒரு பெண் 15 வயதிலிருந்து 49 வயது வரை மண வாழ்க்கையில் வாழ்ந்து அந்தக் காலத்தில் முழுதும் மக்கட்பேறு பெற்று வந்தால், அவளுக்குப் பிறந்த சராசரி மக்களின் எண்ணிக்கையை நாம் முழுமையான கருவள வீதம் எனலாம். இதில் அவள் தன் முழு இனப்பெருக்கக் காலத்திலும் (entire reproductive period) ஒரே சீராக கருவளம் பெற்றிருந்தாள் என்று கருதுகிறோம். எனவே 15 வயதின் SFR–லிருந்து, 49—வயதின் SFR வரை கணக்கிட்டு எல்லாவற்றையும் கூட்டினால், நமக்கு TFR கிடைக்கும். இந்த வீதம், குறிப்பிட்ட இடத்தில் குறித்த ஆண்டுகளில் உள்ள கருவள விவரங்களை அளவிடப் பயன்படுகிறது. இது ஒரு பொதுப்படையான வீதம்தான். நாம் கணக்கில் எடுக்கும் ஆயிரம் பெண்களில் ஒருவரும் இனப்பெருக்கம் நடைபெறும் வயதுக்குள் சாகாமலும், அதே விதமான சூழ்நிலையிலும் (இனப்பெருக்கத்தைப் பொறுத்தவரை) வாழ்ந்தவர்களானால், அவர்களுக்குச் சராசரியாக எவ்வளவு குழந்தைகள் பிறக்கக்கூடும் என்பதனைக் காட்டுவதே இந்த வீதத்தின் பயனாகும்.

**எடுத்துக்காட்டு 2:** எடுத்துக்காட்டு 1-ல் உள்ள விவரங்களுக்கு TFR கணக்கிடு.

| வயது | $SFR_x$ | $SFR_x \times 5$ | மொத்தப் பிறப்புகள் |
|---|---|---|---|
| 15 | 30·0 | 150·0 | 150·0 |
| 20 | 64·3 | 321·5 | 471·5 |
| 25 | 111·1 | 555·5 | 1027·0 |
| 30 | 100·0 | 500·0 | 1527·0 |
| 35 | 41·7 | 208·5 | 1735·5 |
| 40 | 28·6 | 143·0 | 1878·5 |
| 45 | 6·7 | 33·5 | 1912·0 |
| | | 1912·0 | |

எனவே, ஆயிரம் பெண்களுக்கு TFR = **1912·0**

பொதுவாகக் கூறின், 1000 பெண்கள் 15—50 வயதுவரைக்கும் ஒரே மாதிரியான இனப்பெருக்க முடையவர்களாயிருந்து, அக் கால இடைவெளியில் சாவு முதலியன நிகழாமலிருந்தால், அவர்களுக்கு சராசரி 1912 குழந்தைகள் பிறக்கக்கூடும் என்பதனை இந்த விதம் கூறுகின்றது.

## II. இனப்பெருக்க விதங்கள் (Reproduction rates)

முன்கண்ட பகுதியில் நாம் பெண்களின் வயது வேற்றுமைகளையே கருத்தில் கொண்டோம். இனப்பெருக்க விதிகளைக் கணிக்க இவற்றை மட்டும் கருத்தில் எடுத்துக் கொண்டால் போதாது. ஏனென்றால் 15 வயது முதல் 49 வயது வரை உள்ள ஆண்டுகள் அனைத்திலும் ஒவ்வொரு பெண்ணும் பிள்ளை பெறுவதில்லை. நடுவில் அப் பெண்ணிற்கு மரணம் ஏற்படலாம். மற்றும் பிறக்கும் சேய் பெண்ணாக இருந்தால்தான் அதுவும் மக்கள் தொகையை அதிகம் செய்ய முடியும். ஒவ்வொரு தாயும், தனக்குப் பின்னர் தாயாகக் கூடியவளைப் பெற்றால்தான் நாட்டின் ஜனத் தொகை குறையாமலிருக்க வாய்ப்புண்டு. இவ்விரண்டு குறிப்புகளையும்—மரணம் மற்றும் பிறக்கும் பெண்கள்—மனத்தில் வைத்து, இப்போது நாம் இனப்பெருக்க விதங்களைக் கணக்கிடுவோம். இவை இரண்டு வகைப்படும்: (1) மொத்தமான இனப்பெருக்க விதம் (GRR), (2) நிகர இனப்பெருக்க விதம் (NRR).

இவ்விரண்டு விதங்களையும் பயன்படுத்தி, பற்பல நாடுகளில் மற்றும் ஒரே நாட்டில் பற்பல ஆண்டுகளில் உள்ள இனப்பெருக்க விதங்களை ஒப்பிடலாம்.

**(க) மொத்தமான இனப்பெருக்க வீதம் (GRR)**

SFR-களைக் கணக்கிடும்பொழுது, நாம் இதுவரையில் பெண்-ஆண் இரு பிறப்புகளையுமே கருதி வந்தோம். அப்படிச் செய்யாமல், பெண் பிறப்புகளை மட்டுமே கருதி, அதே போல் SFRகளைக் கணக்கிட்டு மொத்தமாக்கினால் கிடைக்கும் வீதத்தை 'மொத்தமான இனப் பெருக்க வீதம்' (GRR) என்றழைப்போம். இவ் வீதமானது, தற்போழுது உயிருடன் இருக்கும் தாய்மார்கள் எவ்வளவு அளவிற்குத் தங்கள் பெண் குழந்தைகளால் ஈடு செய்யப்படுகிறார்கள் என்பதனை அளவிடும். இது SFR-ஐவிடச் சற்றுத் திருத்தமான அளவை ஆகும். ஏனென்றால் இது பெண் பிறப்புகளை மட்டுமே கணக்கில் வைக்கிறது. அதாவது,

$$GRR = \frac{\text{பெண் பிறப்புகளின் எண்ணிக்கை}}{\text{மொத்தப் பிறப்புகளின் எண்ணிக்கை}} \times (TFR) \quad \ldots (7)$$

என்று கணக்கிடலாம்; அல்லது

$$GRR = \sum_{15}^{49} \left( {}_{f}i_x \right) \quad \ldots (7A)$$

என்றும் நிறுவலாம். இங்கு ${}_{f}i_x$=பெண் குழந்தைகளுக்கு மட்டுமான சிறப்பு கருவள வீதம்.

அல்லது, M எண்ணிக்கையுள்ள தாய்மார்களுக்குப் பிறந்த பெண் குழந்தைகளின் எண்ணிக்கை $F_m$ என்றால்

$$GRR = \frac{F_m}{M} \times 1000 \text{ என்றும் நிறுவலாம்.} \quad \ldots (7B)$$

சில வேளைகளில் ஐந்தாண்டு வயது பிரிவுகளுக்கு SFR வீதங்கள் தனியே பெண்களுக்குத் தரப்பட்டிருக்கும். அப்பொழுது

$$GRR = \sum (SFR\text{—பெண்}) \times 5 \quad \ldots (8)$$

என்று வரும். கோட்பாடு வழியில் GRR-ன் மதிப்பு 0—5 ஆக இருக்கலாம்.

**(ங) நிகர இனப்பெருக்க வீதம் (NRR)**

GRRஎன்பது சற்றே திருத்தமான அளவையானாலும், அதனைக் கணக்கிடும் பொழுது தாய்மார்களிடையே நிகழும் மரணங்களைப் பற்றிக் கருதவில்லை ஆதலால் அவ்வளவு சிறப்பானதாகாது. எல்லாப் பெண்களுமே தங்கள் 15—49 வயது வரையில் வாழ்வதில்லை. சிலர் அந்த வயதுப் பிரிவுக்குள்ளேயே இறந்துவிடுகிறார்கள். எனவே, எவ்வளவு தாய்மார்கள் இறக்கக்கூடும் என்பதனையும்

கருத்தில் கொண்டு கணக்கிடவேண்டும். அத்தகைய விதம்தான் நிகர இனப் பெருக்க விதம் என்கிற NRR.

NRR-ன் மதிப்பு 'ஒன்று' ஆக இருந்தால், தற்போது உள்ள கருவள அமைப்பு-நிலைமைகளுக்குட்பட்டுப் பிறப்புகள் நிகழ்ந்து வருமேயானுல், அந்நாட்டின் மக்கள்தொகை குறையாது அதே அளவில் இருக்கிறது என்பதைக் குறிப்பிடும். மதிப்பு ஒன்றைவிடக் குறைவாக இருப்பின், அந்நாட்டின் மக்கள்தொகை தன்னைத் தானே ஈடு செய்து கொள்ளாது என்று கொள்ள வேண்டும். ஒன்றைவிட மேலான மதிப்பு இருக்குமானுல், நாட்டின் மக்கள் தொகை அளவுமீறி அதிகரித்துக் கொண்டிருக்கிறது என்று பொருள். உடனே அதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்பதனை NRR-ன் மதிப்புகள் சுட்டிக் காட்டும்.

இதனைக் கணக்கிடும் முறையை விளக்குவோம். பெண் குழந்தைகள் சில தாய்களுக்குத்தான் பிறக்கின்றன. (எல்லாத் தாய்களுக்கும் பெண்கள் பிறக்காமலிருக்கலாம்.) மற்றும் சில பெண்கள் மரணத்தால் (அல்லது வேறு காரணங்களால்) தமது இனப் பெருக்கம் செய்யக்கூடிய காலம் முழுவதையும் பயன்படுத்தாது இருக்கலாம். எனவே, ஒவ்வோர் ஆண்டும் எவ்வளவு தாய்கள் உயிருடன் இருக்கிறுர்கள் என்பதை நாம் கணக்கில் வைத்துக் கொள்வது நல்லது. அதாவது 1000 ($l_0$) தாய்களில் குறித்த வயதில் (x-வயதில்) எவ்வளவு பேர்கள் உயிருடன் இருக்கின்றனர் என்பதனை $l_x$ என்றுல்,

$$\text{NRR} = \sum_{15}^{49} b_x \left(\frac{l_x}{l_0}\right) \qquad \ldots(9)$$

[$l_0$ மற்றும் $l_x$—ன் மதிப்புகளை இறப்புப் பட்டியலிலிருந்தும் பெறலாம். இப் பட்டியலைப்பற்றிய விவரங்களுக்கு வேறு அத்தியாயத்தைக் காணவும்.] வாய்பாட்டில் $b_x$—x வயதுடைய பெண்களுக்குப் பிறந்த பெண் குழந்தைகளின் எண்ணிக்கை $l_x$—x வயதுடைய தாய்களின் எண்ணிக்கை $l_0$ இனப் பெருக்கம் செய்யக்கூடிய காலத்தின் ஆரம்பத்தில் உள்ள தாய்களின் எண்ணிக்கை (சாதாரணமாக $l_0 = 1000$ எனக் கொள்வர்).

அல்லது NRR =

$$\frac{\Sigma(\text{பெண் பிறப்புகளின் எண்ணிக்கை} \times \text{பெண்பிறப்பிற்கான விதம்})}{1000} \qquad \ldots(10)$$

இவ்விரண்டு வாய்பாடுகளில் இரண்டாவதே எளிதானது என்பது எடுத்துக்காட்டின் மூலம் தெளிவாகும்.

இந்த வீதமும் மிகத் திருத்தமானது என்று கூற முடியாது. மனிதர்களின் பழக்க வழக்கங்கள் மாறிக்கொண்டே உள்ளன. உதாரணமாக, சுமார் 20 ஆண்டுகளுக்குமுன் அதிகமாக உபயோகப்படுத்தப்படாத குடும்பக் கட்டுப்பாட்டுக் கருவிகள் இன்று பரவலாகக் கையாளப்பட்டு வருகின்றன. பெண்கள் அறுவை சிகிச்சை செய்து கொள்வதாலும் அவர்களது இனப்பெருக்கக் காலம் முழுவதும் பயன்படுத்தப்படாது கழிந்துவிடுகிறது. NRR கணக்கெடுப்பின்போது இவ் விவரங்களை நாம் கணக்கெடுப்பதில்லை. மேலும், நாட்டு மக்கள் மற்றொரு நாட்டுக்குக் குடியேறினாலோ, அல்லது வேற்று நாட்டிலிருந்து இங்குக் குடிவந்தாலோ இனப்பெருக்க வீதங்கள் பாதிக்கப்பட்டுவிடும். எனவே, NRR மற்ற வீதங்களை விடச் சிறந்தது என்றாலும், அதிலும் சில குறைபாடுகள் உண்டு என்பதனை நாம் மறக்கலாகாது.

**எடுத்துக்காட்டு 3 :** கீழ்க்கண்ட பட்டியலுக்கு GRR, NRR கணக்கிடு:

| வயதுத் தொகுப்பு | 1000-பெண்களுக்குப் பிறந்த பெண்களின் எண்ணிக்கை | 1000 நபர்களில் பிழைத்திருப்பவர்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 15—20 | 50 | 850 |
| 20—25 | 180 | 800 |
| 25—30 | 450 | 750 |
| 30—35 | 500 | 700 |
| 35—40 | 300 | 650 |
| 40—45 | 100 | 600 |
| 45—50 | 40 | 500 |
| மொத்தம் | 1620 | — |

$$NRR = \frac{\frac{50X850}{1000}+\frac{180X800}{1000}+\frac{450X750}{1000}+\frac{100X600}{1000}+\frac{40X500}{1000}}{1000}$$

$$= 1\cdot149$$

GRR கணக்கிட நாம் 1, 2-ஆம் வரிசைகளை மட்டும் பயன்படுத்த வேண்டும்.

$$GRR = \frac{1620}{1000} = 1\cdot620$$

எப்போதும் GRR, NRR ஐவிட அதிகமாகத்தான் இருக்கும்

**எடுத்துக்காட்டு 4:** கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து GRR, NRR கணக்கிடு.

| வயது | பெண் மக்கள் தொகை $P_f$ | உயிருள்ள பெண் பிறப்புகள் $B_{if}$ | பிழைப்பதற்கான வீதம் S |
|---|---|---|---|
| 15—19 | 1,399 | 15,133 | ·9694 |
| 20—24 | 1,422 | 94,155 | ·9668 |
| 25—29 | 1,521 | 102,676 | ·9632 |
| 30—34 | 1,756 | 72,490 | ·9584 |
| 35—39 | 1,451 | 31,402 | ·9519 |
| 40—44 | 1,689 | 10,640 | ·9424 |
| 45—49 | 1,667 | 700 | ·9279 |

(B.Com., Bombay '72)

$$GRR = \Sigma \left(\frac{B_{if}}{P_f}\right) \times 5 = \left(\frac{15133}{1399} + \frac{94155}{1422} + \cdots \frac{700}{1667}\right) \times 5$$
$$= 1.0709$$

$$NRR = \Sigma\left[\left(\frac{B_{ifo}}{P_f}\right) \times S\right] \times 5 = \left[\frac{15133}{1399} \times \cdot9694 + \frac{94155}{1422} \times \cdot9668 + \frac{700}{1667} \times \cdot9279\right] \times 5 = 1.0301$$

விடையிலிருந்து நாட்டில் மக்கள்தொகை அதிகரித்துக் கொண்டுள்ளது என அறியலாம்.

**எடுத்துக்காட்டு 5:** அட்டவணை 1-ல் உள்ள விவரங்களிலிருந்து GRR ஐக் கணக்கிடு. அந்த ஆண்டில் 105 ஆண் குழந்தைகளுக்கு 100 பெண் குழந்தைகள் பிறந்தன என்று வைத்துக்கொள்.

இங்கு பெண் குழந்தைகளின் எண்ணிக்கை நேரடியாகத் தரப்படவில்லை. பெண் குழந்தை பிறப்பு வீதத்தை நாம் கணக்கிடலாம். அது $\frac{100}{205}$. எனவே, GRR கணக்கிட எல்லா வீதங்களையும் கூட்டி, அதனை 5ஆல் பெருக்கி, $\frac{100}{205}$ ஆல் மறுபடியும் பெருக்க வேண்டும்.

$$\therefore \; GRR = 1035{\cdot}2 \times 5 \times \frac{100}{205} = 2525$$

இந்த வீதம் 1000 பெண்களுக்கானதால், ஒரு பெண்ணிற்கு GRR = 2·5.

எனவே GRR = TFR × K. K = பெண் பிறப்புகளின் வீதம் $= \frac{B_{fx}}{B_x}$. வீதத்தை ஒரு பெண்ணிற்கு உரியதாகத் தரவேண்டும் என்பதை நினைவில் வைக்க வேண்டும்.

**(ச) திருமணஞ் சார்ந்த நிகர இனப்பெருக்க வீதம் (Nuptial Net Reproduction Rate)*—NNRR**

திருமணமானவர்களுக்கும், திருமணமாகாத பெண்களுக்கும் தனித்தனியே கணக்கிட்ட நிகர இனப்பெருக்க வீதங்களின் கூட்டுத் தொகையே இந்த வீதம். அதாவது,

$$NNRR = \left[ \sum_{15}^{50} b_x . l_x . n_x + \sum_{15}^{50} b_x . l_x \, (1n—_x) \right] \quad \ldots \quad (11)$$

இங்கு $n_x$ = xவயதில் திருமணமான பெண்களின் விகிதம்.

இந்த வீதங்களைக் கணக்கிடுவதற்குத் தேவையானவை, திருத்தமாகத் திரட்டப்பட்ட அடிப்படைப் புள்ளிவிவரங்கள்தாம். ஒரு நாட்டின் அடிப்படைப் புள்ளிவிவரங்களைச் சரிவரத் திரட்ட ஓர் அமைப்பு இல்லையென்றால், அந் நாட்டின் புள்ளிவிவரங்களே பயன்படாமல் போய்விடலாம். தற்போது நம் நாட்டில் அடிப் படைப் புள்ளி விவரங்களை எவ்வாறு சேகரிக்கின்றனர் என்று பார்ப்போம்.

## III. இந்தியாவின் அடிப்படைப் புள்ளி விவரங்கள்

1.4 நாட்டின் அடிப்படைப் புள்ளி விவரங்கள் என்பவைப் பிறப்புகள், இறப்புகள், உயிரில்லா பிறப்புகள், முதிர்கரு சாவுகள் (foetal deaths), திருமணங்கள், மகவேற்புகள் (adoptions), திருமண நீக்கங்கள், விவாக ரத்துகள், மண அங்கீகாரங்கள், மணப்பிறிதல் கள், சட்டத்துக்குட்பட்ட பிறப்புகள் ஆகியவை. அதாவது, ஒரு தனி மனிதனின் வாழ்க்கை அமைப்பை ஒட்டிய எல்லாப் பதிவு களும், சமுதாயத்துக்குரிய நிலைகளில் உண்டாகி வரும் மாறுதல் களைப் பற்றிய விவரப்பதிவுகளும் அடிப்படைப் புள்ளி விவரங்கள் எனப்படும்.

* காண்க : Lecture Notes (Official Statistics) Training Division—CSO—Ministry of Planning, N. Delhi. (Mimeographed) 1974.

நாட்டின் மக்கள்தொகை கணிப்பு, அந்நாட்டு மக்கள்தொகை ஒரு குறிப்பிட்ட ஆண்டில் எவ்வாறுள்ளது என்ற விவரங்களைத் தரும். அடிப்படைப் புள்ளி விவரங்களோ, அந்நாட்டின் மக்கள் தொகை நடப்பு ஆண்டுதோறும் எவ்வாறு உள்ளன என்ற விவரங்களைத் தரும். எனவே, இவ்வாறு தொடர்வாரியாக ஏற்படும் மாற்றங்களைக் கணக்கிடப் பயன்படுவது திருத்தமான பதிவுமுறையொன்றே.

நம் நாட்டில் முதன் முதலில் பதிவான விவரங்கள் இறப்பு விவரங்கள் மட்டும்தான். ஏனெனில், அப்போது நாட்டின் சுகாதார அமைப்புகளை அளவிட்டுச் சரிசெய்ய, இறப்பு வீதங்களே பயன்பட்டன. ஆண்டொன்றுக்கு எவ்வளவு நபர்கள் காலரா, அம்மை, பிளேக் முதலான நோய்களால் இறக்கின்றனர் என்ற விவரங்கள் சேகரிக்கப்பட்டன. இவ் விவரங்களும் திருத்தமாகத் திரட்டப்படவில்லை. எனவே, இந்திய அரசாங்கத்தின் சுகாதார (Sanitary) கமிஷனர் 1873-ல் இறப்பைப்பற்றிய எந்தெந்த விவரங்கள் திரட்டப்பட வேண்டுமென்பதற்கான பட்டியலைத் தயாரித்தார். அப்போதும் பிறப்புகளைப்பற்றிய பதிவுகள் தொடங்கவில்லை.

1880-ல் வெளியான இந்திய வரட்சிக் கமிஷனின் அறிக்கையிலிருந்துதான் நம் நாட்டின் அடிப்படைப் புள்ளிவிவரப் பதிவுகள் தொடங்கின. இந்த அறிக்கையை ஒட்டியே 1886-ல் பிறப்பு இறப்பு-திருமணங்களின்-பதிவுச் சட்டம் தாக்கல் செய்யப்பட்டது. தனி நபர்கள், இச் சட்டத்துக்குட்பட்டுத் தாங்களாகவே முன் வந்து இந்த விவரங்களைக் குறிப்பிட்ட அதிகாரிகளிடம் பதிவு செய்ய வேண்டும் என்பது அச் சட்டத்தின் நோக்கம். ஆனால், நடைமுறையில் இப் பதிவுமுறை அவ்வளவு சிறப்பாக இயங்கவில்லை. அவ்வப்போது நம் நாட்டில் ஏற்படுத்தப்பட்ட பல கமிட்டிகள் இந்தப் பதிவுமுறையில் உள்ள குறைகளைச் சுட்டிக் காட்டி, திருத்தங்களும் செய்துவந்தன. இவற்றில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை போர்க் கமிட்டியும் (1948), 1951-லுண்டாக்கப்பட்ட 'Registrar General of India' என்ற பதவியும்தான்.

இச்சமயத்திலும் நாட்டில் முழுவதற்கும் பொதுவான ஒரு பதிவுச்சட்டம் இருக்கவில்லை. நாட்டின் ஆறு லட்சம் கிராமங்களில் திரட்டப்படவேண்டிய விவரங்களைக் கவனிப்பது, மற்ற அலுவல்களில் ஈடுபட்டிருக்கும் நபர்களின் வேலையாயிருந்தது. எனவே, விவரம் திரட்டுதல் சீராக இல்லை. அப்போது 50 சதவீதம் விவரங்கள்தாம் திரட்டப்பட்டன என்றால், அம்முறைகளில் உள்ள (விவரம் திரட்டப் பயன்படும் முறைகளின்) குறைபாடு புலனாகும்.

1961-இல் ரிஜிஸ்டிரார் ஜெனரல், மாநிலப் பிரதிநிதிகளையும் கலந்தாலோசித்து, நாடு முழுவதற்கும் பயன்படுத்தக்கூடிய திருத்தமான முறையைப் பற்றி விவாதித்தார். இந்த கூட்டத்தில் பங்கெடுக்க வெளிநாட்டு நிபுணர்களும் வந்திருந்தனர். இங்கு நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை ஒட்டி, சில மாநிலங்களில் 1963-66 வரையில் பல மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. இம்முறைகளை மற்றுமொரு தடவை பரிசீலிக்க 1967இல் ஒரு மாநாடு நடைபெற்றது. இதன் விளைவாக 'பிறப்பு-இறப்பு-பதிவுச்சட்டம்' (1969) பிறந்தது. இச்சட்டத்தின் கீழ் பிறப்பு இறப்பு விவரங்களைப் பதிவுசெய்வது கட்டாயமாக்கப்பட்டது. பிறப்பு இறப்பு சான்றுகள் வழங்குவது முறையில் வந்தது. பதிவு செய்யாதிருந்தால், ஒருவன் பெறக்கூடிய தண்டனைகளைப் பற்றியும் இச்சட்டம் எடுத்துக் காட்டுகிறது. மிசோரம், பாண்டிச்சேரி பகுதிகளைத் தவிர, மற்ற எல்லா மாநிலங்களிலும் இச்சட்டம் அமுலாக்கப் பட்டது. இதனுல் பொதுப்படையான பதிவு முறைகள் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் நடைபெறுவது சீராகியது. நம் எல்லோருடைய கடமையும், அடிப்படைப் புள்ளி விவரங்கள் திருத்தமாகவும், சரியாகவும் திரட்டப்பட வேண்டும் என்ற நிலையை அடைவதுதான்.

அடிப்படை விவரங்களைப் பற்பல இலாகாவினரும் சேர்ந்து திரட்ட வேண்டியிருப்பதால், பற்பல துறைகளிடையே (interdepartmental) கமிட்டிகள் தொடங்கப்பெற்று வருகின்றன. நாட்டில் ஐந்து கோட்டங்கள் ஏற்படுத்தப்பட்டு, ஒவ்வொரு கோட்டத்திற்கும் தனி அலுவலகங்கள் நிறுவப்பட்டு வருகின்றன. மக்களிடையே இவ்விவரங்களின் முக்கியத்துவத்தைப் பரப்புதற்காக ஆல் இந்தியா ரேடியோவின் எல்லா அலைகளிலும் இத்தகைய பதிவின் முக்கியத்துவத்தையும், இன்றியமையாத் தன்மையையும் வலியுறுத்துமாறு வானொலி நிலைய இயக்குனர்கள் கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கிறுர்கள். அவர்கள் கிராமீய ஒலிபரப்புகளின் போது அடிக்கடி இவ்வேண்டுகோள் செய்து வருகின்றனர். எனவே கூடிய சீக்கிரத்திலேயே நம் நாட்டின் அடிப்படை புள்ளி விவரங்களைத் திரட்டும் முறைகள் குறையின்றிச் செம்மையாக அமைந்துவிடும் என்று எதிர்பார்க்கலாம்.

## IV. இறப்பு விதங்களை அளவிடுதல்

(அ) **திருந்தாத இறப்பு விதம்** : (Crude Death rate) CDR

$$CDR = \frac{D}{P} \times 100 \qquad \ldots (12)$$

D = குறித்த காலத்தில் (குறித்த ஆண்டில்) மக்களிடையே நேர்ந்துள்ள இறப்புகளின் எண்ணிக்கை.

P = அதே காலத்தில் அப் பகுதியில் உள்ள மக்கள் தொகை.

இவ் வீதத்தைக் கணக்கிடுவதும் எளிது. ஒரு மனிதனின் இறப்பு யூக அளவையே CDR ஆகும். (ஆயிரத்தால் பெருக்குவது சவுகரியத்திற்காகத்தான்). இதன் குறைகள் CBRன் குறைகளைப் போன்றவைதான். நாட்டின் பற்பல பகுதிகளிலும் இறப்பு வீதம் ஒன்றாக இருக்காது. பலதரப்பட்ட மக்களின் வீதங்களும் வெவ் வேறாக அமையும். எனவே, பிறப்பு வீதங்களுக்குக் கணக்கிட்டவாறே, இப்போதும் சிறப்பு இறப்பு வீதங்களை (specific death rate) கணக்கிட வேண்டும். இவைகளைப் பலவாறாக ஏற்படுத்தலாம்.

**(ஆ) வயதைச் சிறப்பாகக் கொண்ட இறப்பு வீதங்கள் mx :**

$$m_x = \frac{D_x}{P_x} \times 1000 \qquad \dots (13)$$

$P_x$—x வயதுள்ள மக்களின் எண்ணிக்கை.

$D_x$—n அந்த மக்களிடையே அந்த ஆண்டு உண்டான இறப்புகளின் எண்ணிக்கை

ஒரு குறித்த ஆண்டை மட்டும் கருதாமல், xலிருந்து (x + n — 1) என்ற வயதுள்ள மக்களைக் கணக்கிட்டு, அதில் பெறும் வீதத்தை $_nm_x$ என்று நிறுவலாம்.

$$_nm_x = \frac{_nD_x}{_nP_x} \times 1000 \qquad \dots (14)$$

$_nD_x$ — x வயதிலிருந்து (x + n — 1) வயது வரையுள்ள-அதாவது n ஆண்டுகளில் உண்டான இறப்புகளின் எண்ணிக்கை.

$_nP_x$— அதே வயதுள்ள மக்களின் தொகை.

**(இ) இனத்தைச் சிறப்பாகக் கொண்ட இறப்பு வீதங்கள்:**
(sex specific death rates)

ஆண்கட்கான சிறப்பு இறப்பு வீதத்தை $m_m$ என்றும், பெண்களுக்கானதை $m_f$ என்றும் குறிப்பிடலாம்.

இவ்விரண்டு வீதங்களையும் சேர்த்துக் கீழ்வருமாறும் நிறுவலாம்:

$_nm_mx$ = இன வயது சிறப்பு வீதம் (ஆண்கட்கு)

$$= \frac{_nD_{mx}}{_nP_{mx}} \qquad \dots (15)$$

$_nD_{mx}$ = x லிருந்து (x + n — 1) வயதுவரை உள்ள ஆண்க ளிடையே நிகழ்ந்த இறப்புகளின் எண்ணிக்கை.

$_nP_{mx}$ = அதே வயதுக்கு உட்பட்ட மக்கள் தொகையில் ஆண் களின் எண்ணிக்கை.

இறப்புப் பட்டியல் அமைக்க முக்கியமாகத் தேவைப்படுவது இத்தகைய சிறப்பு இறப்பு வீதங்கள்தாம். NRR கணக்கிடுவதற் கும் இவைகள் தேவைப்படும் என்பதையும் நாம் அறிவோம். எல்லா மாநிலங்களுக்கும், ஜில்லாக்களுக்கும் இந்த வீதத்தைக் கணக்கிட்டுப் பின்னர் அந்தந்தப் பகுதிகளின் இறப்புத் தன்மைகளை ஒப்பிட முடியும்.

இவ்வீதங்களைக் கொண்டு நகரம்—கிராம மக்கள், ஏழை— பணக்காரர்; பற்பல மதத்தினர்கள்: ஆகியோருக்கு இடையே உண்டாகும் இறப்புகளையும், சிறப்பு இறப்பு வீதங்களைக் கொண்டு கணக்கிடலாம். ஆனால், இக்காரணத்திற்காக இறப்பு வீதங்களை அவ்வளவாகப் பயன்படுத்துவது இல்லை.

கீழ்க்கண்ட பட்டியல், நாட்டின் கிராமப்புறங்களுக்கு மட்டு மான இறப்பு வீதங்களைத் தருகிறது.

அட்டவணை 2 : இறப்பு வீதங்கள் (கிராம இந்தியா 1957-58)

| வயது | மொத்தம் | ஆண் | பெண் |
|---|---|---|---|
| 0 | 190.3 | 198.0 | 182.5 |
| 1-4 | 44.0 | 42.6 | 45.4 |
| 5-14 | ·5.5 | 5.5 | 5.5 |
| 15-24 | 4.5 | 3.5 | 5.4 |
| 25-34 | 5.3 | 4.2 | 6.4 |
| 35-44 | 5.6 | 5.8 | 5.4 |
| 45-54 | 10.5 | 12.8 | 8.0 |
| 55-64 | 26.6 | 32 2 | 21.0 |
| 65- | 63.5 | 72.9 | 54.7 |
| மொத்தமாக | 19.2 | 19.6 | 1.68 |

(இது NSS ரிபோர்ட் 76 லிருந்து எடுக்கப்பட்டது.)

கடைசி வரியிலுள்ள முதல் வீதம்தான் CDR. எனவே அந்த ஆண்டில், கிராமப்புறங்களில் ஏற்பட்ட மொத்த இறப்பு வீதம் 1000 மக்களுக்கு 19.2. இவ் வீதத்தையே இன-சிறப்புப் படுத் தினுல், ஆண்களிடையே 19.6 ஆகவும், பெண்களிடையே 18.6 ஆகவும் இறப்புவீதம் உள்ளதைக் காண்கிறோம். மற்றும், சுமார் ஐந்தில் ஒரு பங்கு குழந்தைகள் ஒரு வயது முடியுமுன்பே மடிந்து

விடுகின்றன என அறிகிறோம். ஆண்களிடையே இறப்பு வீதம் சில வயதுத் தொகுப்புகளில் பெண்களினத்தை விடக் குறைவாகவும், வேறு சிலவற்றில் அதிகமாகவும் உள்ளது. 35 வயதுக்கு மேல் பெண் இறப்புவீதம் ஆண் இறப்புவீதத்தை விடக் குறைவாக உள்ளது. 15-35 வயதுகளிடையே பெண் இறப்பு வீதமே அதிக மாக உள்ளது. அதன் காரணம் அவ்வயதுகளுக்கு உட்பட்டு மகப் பேறுகள் பெரும்பாலாக நடைபெறுகின்றன என்பதுதான். பொதுவாக ஆண் இறப்பு வீதங்கள் பெண்களுடையதைவிட எல்லா நாடுகளிலுமே அதிகமாகத்தான் இருக்கும்.

(ஈ) **தரப்படுத்தப்பட்ட இறப்பு வீதம்**- (Standardised death rate-SDR)

நாட்டிலுள்ள பல பகுதிகளிடையே இறப்பு வீதங்களை ஒப் பிட்டுப் பார்க்கச் சிறப்பு வீதங்களை மற்றும் பயன்படுத்துதல் போதாது. ஒரு பகுதியின் இறப்பு வீதங்கள் சில வயதுகளில் அதிக மாகவும், சிலவற்றில் குறைவாகவும் அமைந்துவிடும். எனவே, ஒப்பிடுதலுக்கு நாம் வேறு ஒரு முறையைக் கையாள வேண்டும்.

A, B என்ற இரு பகுதிகளிடையே பல வயதுகளில் உள்ள மக்கள் தொகை வெவ்வேறாக அமையும். எனவே, முதலில் நாம் இருபகுதிகளுக்கும் வயது சிறப்பு இறப்பு வீதங்களைக் கணக்கிட வேண்டும். அப்போது இரு பகுதிகளுக்குமான SDR களைப் பின் வருமாறு நிறுவலாம்:

A பகுதியில் x வயதில் உள்ள மக்கள் தொகை $P_x{}^a$

B பகுதியில் x வயதில் உள்ள மக்கள் தொகை $P_x{}^b$

A பகுதியில் x வயதுள்ள மக்களிடையே சிறப்பு இறப்பு வீதம் } $m_x{}^a$

B பகுதியில் x வயதுள்ள மக்களிடையே சிறப்பு இறப்பு வீதம் } $m_x{}^b$

$$\therefore \text{SDR (for A)} = \frac{\Sigma m_x{}^a P_x{}^b}{\Sigma P_x{}^b} \quad ...(17A)$$

$$\text{SDR (for B)} = \frac{\Sigma m_x{}^b P_x{}^b}{\Sigma P_x{}^b} = m^B \quad ...(17B)$$

அதாவது B பகுதிக்கான ஒரு இறப்பு வீதத்தை $m^B$ எனக் குறிப்பிட்டுள்ளோம். A பகுதியிலும், B பகுதியிலும் உள்ள

மக்கள் தொகை ஒன்ருகயிருந்தால், Aன் இறப்பு வீதம் எவ்வா றிருக்கும் என்பதுதான் SDR (A) ஆகிறது. இது ஒரு நிறையிட்ட சராசரி—நிலறகள் B பகுதியின் மக்கட்தொகை விவரங்கள்.

இவ்வாறன்றி, Aன் இறப்பு வீதத்தை $_{m}A$ என்று கணக்கிட்டு, அதன் அடிப்படையில் B பகுதிக்கான தரப்படுத்தப்பட்ட இறப்பு வீதத்தை (SDR-B) கணக்கிடலாம். அதற்கு வாய்ப்பாடுகள்:

$$_{m}A = \frac{\Sigma m_x^a P_x^a}{\Sigma P_x^a} ; \quad SDR\ (B) = \frac{\Sigma m_x^a P_x^a}{\Sigma P_x^a} \qquad ...(18)$$

(குறிப்பு $_{m}A$ $_{m}B$ என்பவை CDR-களே)

இரு பகுதிகளைத் தரப்படுத்தி ஒப்பிடும்போது, அவற்றில் ஒன்றைத் தரமாக வைத்து, மற்றொன்றின் இறப்பு வீதத்தையும், தரமாக்கப்பட்ட பகுதியின் இறப்பு வீதத்தையும் ஒப்பிடுகிறோம். அவ்வாறன்றி, இவ்விரு பகுதிகளைத் தவிர மற்றொரு அளவைத் தரமாக வைத்தும் இறப்பு வீதங்களை ஒப்பிடலாம். அவ்வாறு பயன்படுத்தப்படும் தரங்களின் விவரங்கள் 1) அந்த நாட்டின தாகவோ, 2) இவ்விரண்டு பகுதிகளின் மொத்தமாகவோ 3) முற்றிலும் புதிய கற்பனை விவரங்களாகவோ இருக்கலாம். அப் போது,

$$SDR\ (A) = \frac{\Sigma m_x^a P_x^s}{\Sigma P_x^s} ; \quad SDR\ (B) = \frac{\Sigma m_x^b P_x^s}{\Sigma P_x^s} \qquad ...(19)$$

$\left[\frac{P_x^s}{P_x^s}\right.$ என்பது புது தரத்தின நிறைகள் $\left.\right]$

——என்ற வாய்பாடுகள் கிடைக்கும். எந்தப் பகுதியின் SDR குறைவாக உள்ளதோ, அப்பகுதியின் மக்கள்தான் அதிக ஆரோக்யமாக உள்ளனர் என்று அறியலாம்.

எடுத்துக்காட்டு 6: கீழ்க்கண்ட பட்டியலிலிருந்து SDR களைக் கணக்கிடு:

| வயது | A பகுதி மக்கள் | A பகுதி இறப்புகள் | B பகுதி மக்கள் | B பகுதி இறப்புகள் |
|---|---|---|---|---|
| 0—5 | 140 | 3 | 400 | 12 |
| 5—15 | 510 | 2 | 1200 | 8 |
| 15—55 | 1190 | 12 | 3140 | 19 |
| 55— | 160 | 12 | 260 | 21 |
| மொத்தம் | 2,000 | 29 | 5,000 | 60 |

$$\text{CDR (A பகுதிக்கு)} = \frac{29}{2000} \times 1000 = 14.5$$

$$\text{CDR (B பகுதிக்கு)} = \frac{60}{5000} \times 1000 = 12.0$$

எனவே, இவ்விரண்டு பகுதியிலுள்ள மக்களில் B பகுதியினரே அதிக ஆரோக்கியமாக உள்ளனர் என்பது தெரிகிறது.

மேற்கண்ட எடுத்துக்காட்டிற்கு மற்ற இறப்பு வீதங்களைக் கணக்கிடுவோம்:

| வயது | $m_x^a$ | $m_x^a\ P_x^a$ | $m_x^b$ |
|---|---|---|---|
| 0—5 | $\frac{3}{140}$ | $\frac{3}{140} \times 400$ | 12/400 |
| 5—15 | $\frac{2}{510}$ | $\frac{2}{510} \times 1200$ | 8/1200 |
| 15—55 | $\frac{12}{1190}$ | $\frac{12}{1190} \times 3140$ | 19/3140 |
| 55— | $\frac{12}{160}$ | $\frac{12}{160} \times 260$ | 21/2160 |
| மொத்தம் | | 64.4 | |

$$\text{SDR (A)} = \frac{\Sigma m_x^b\ P_x}{\Sigma P_x^b} = \frac{64.4}{5000} \times 1000 = \underline{12.8}$$

இதை $\frac{\Sigma m_x^a\ P_x^b}{\Sigma P_x^b}$ =12.0 உடன் ஒப்பிட்டால் B பகுதி மக்களே அதிக ஆரோக்கியமாக உள்ளனர் என அறியலாம். அதாவது, இந்த முடிவு நாம் முன்பு திருத்தாத அளவைகளைப் பயன்படுத்திப் பெற்ற முடிவிற்கு நேர் எதிரான முடிவாக இருப்பதனைக் காண்கிறோம். முதல் விடை திருத்தப்படாததால் அது சரியானதாகாது; இரண்டாம் விடையே திருத்தமானது என்று கருதவேண்டும்.

**எடுத்துக்காட்டு 7:** தரப்படுத்தப்பட்ட மக்கள் தொகையை அடிப்படையாகக் கொண்டு 1890, 1937 ஆகிய இரு வருடங்களில் உள்ள சுகாதாரத்தின் தரத்தை ஒப்பிடுக.

| வயது | இறப்பு வீதம் 1890 ல் | | இறப்பு வீதம் 1937 ல் | | தரப்படுத்தப்பட்ட மக்கள் தொகை | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| 0 | 63,4 | 53.5 | 17.1 | 13 | 15032 | 14664 |
| 5 | 03 8 | 3 9 | 1.9 | 1.9 | 16050 | 15764 |
| 10 | 2 2 | 2 3 | 1.3 | 1.1 | 16943 | 16548 |
| 15 | 3.5 | 3.3 | 2.0 | 1.7 | 16540 | 16589 |
| 20 | 4.8 | 4.1 | 2.8 | 2 3 | 17090 | 17803 |
| 25 | 6.3 | 5 5 | 2.9 | 2.5 | 31463 | 33902 |
| 35 | 10.7 | 8.5 | 4.5 | 3.5 | 24932 | 29374 |
| 45 | 17 6 | 13 9 | 10.2 | 3 9 | 23018 | 26478 |
| 55 | 33.2 | 26.7 | 23.0 | 15.3 | 18088 | 20188 |
| 65 | 140 3 | 59 5 | 24 1 | 39.4 | 9842 | 12188 |
| 75 | 282.6 | 126 0 | 130.1 | 100.4 | 2999 | 4540 |
| 85 | 282.6 | 209 0 | 263.8 | 236.5 | 322 | 673 |
| மொத்தம் | | | | | 394,579 | 416,490 |

வரிசை 2ல் உள்ள நிறைகளை $m^a_{mx}$ என்றும், மூன்றை $m^b_{fx}$ என்றும், 4,5ல் இருப்பவற்றை முறையே $m^b_{mx}$, $m^b_{fx}$ என்றும், 6,7ல் உள்ளவற்றை $P^s_{mx}$, $P^s_{fx}$ என்றும் குறித்துக் கீழ்க்கண்ட பட்டியலைக் கணக்கிடலாம்:

| வயது | ஆண்கள் 1890 ல் | ஆண்கள் 1937 ல் | பெண்கள் 1890 ல் | பெண்கள் 1937 ல் |
|---|---|---|---|---|
| | $m^a_{mx} P^s_{mx}$ | $m^b_{mx} P^s_{mx}$ | $m^a_{fx} P^s_{fx}$ | $m^b_{fx} P^s_{fx}$ |
| 0 | 953,028.8 | 257,047.2 | 784,524 0 | 197,964.6 |
| 5 | 60,990.0 | 30,495 0 | 61.479 6 | 29,951.8 |
| 10 | 37 274 6 | 22.025 9 | 38 060.4 | 18,202.3 |
| 15 | 57,890.0 | 33,180.0 | 54,743.7 | 28,201 3 |
| 20 | 82,032 0 | 47,852.0 | 72,992.3 | 40,946.9 |
| 25 | 198,216.9 | 91,242 7 | 186,461.0 | 84,755.0 |
| 35 | 266.772.4 | 112,194 0 | 253.929.0 | 104.559.0 |
| 45 | 405,116 8 | 234,783.6 | 368,044 2 | 103 264.0 |
| 55 | 600 521.6 | 416,024.0 | 539,019.6 | 308,876.4 |
| 65 | 1,380,832.6 | 235,192.2 | 725,186 0 | 480,207.2 |
| 75 | 847,517.4 | 390,169.9 | 572 040.0 | 455,816.0 |
| 85 | 90,997 2 | 84,943.6 | 140,657.0 | 159,164.5 |
| மொத்தம் | 5,530,100.3 | 1,955,050.1 | 3,797,136.8 | 2,011,908.9 |

ஆண்களுக்கான விவரங்கள்:

1890 ல் SDR $= \frac{5,530,100.3}{394579} = 14.02$

1937 ல் SDR $= \frac{1,955,050.1}{394,579} = 6.24$

பெண்களுக்கான விவரங்கள் :

1890 ல் SDR $= \frac{3,797.136.8}{416,490} = 9.12$

1937 ல் SDR $= \frac{2.011.908\ 9}{416,490} = 4.83$

1937-ஆண்டிற்கான ஆண்களின் இறப்பு வீதங்கள் 1890ல் இருந்ததில் சுமார் பாதியளவுதான் உள்ளது. பெண்களுக்கான வீதங்களும் அப்படியே.

இரு பாலர்களிடையே ஒரு ஆண்டிற்கான இறப்பு வீதங்களைக் கவனிப்போம். (1890ம் ஆண்டிற்கு என வைத்துக் கொள்வோம்.) 0–வயதில் ஆண் இறப்பு வீதம் பெண்ணினத்தைக் காட்டிலும் அதிகம். அடுத்த மூன்று ஆண்டுகளில், இரு விகிதங்களும் சுமாராக, சமமாகவே உள்ளன. அதற்குப் பிறகு எல்லா வயதுகளிலும் ஆண் வீதத்தைக் காட்டிலும், பெண் இறப்பு வீதம், குறைவாகவே இருப்பதைக் காணலாம். அதிகமான வயதுகளில் பெண் இறப்பு வீதம், ஆண் இறப்பு வீதத்தில் சுமார் அரைப் பங்கே இருப்பதைக் கவனிக்கலாம்.

**எடுத்துக்காட்டு 8:** கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து A, B என்ற பகுதிகளுக்குத் தரப்படுத்தப்பட்ட இறப்பு வீதங்களைக் கண்டு பிடித்து ஒப்பிடு.

| வயது | A பகுதி இறப்பு வீதம் $m_x^a$ | B பகுதி இறப்பு வீதம் $m_x^b$ | தரப்படுத்தப்பட்ட மக்கள் தொகை $P_x^s$ |
|---|---|---|---|
| 0-10 | 100/3 | 66/2.5 | 200 |
| 10-45 | 100/7 | 100/7.5 | 600 |
| 45க்குமேல் | 100/3 | 134/5 | 200 |
| மொத்தம் | 20 | 20 | 1000 |

CDR (A) = 20 CDR (B) = 20. எனவே இரு பகுதிகளின் இறப்பு விகிதங்களும் ஒன்றே.

| $m_x^a P_x^s$ | $m_x^b P_x^s$ |
|---|---|
| 6666.7 | 5280.0 |
| 8571.4 | 8000.0 |
| 6666.7 | 5360.0 |
| 21904.8 | 18640.0 |

எனவே $SDR(A) = \frac{21904.8}{1000} = 21.905$

$$SDR(B) = \frac{18640}{1000} = 18.640$$

ஆக, B பகுதி மக்களின் சுகாதாரம் உயர்ந்த ரகத்தில் உள்ளது.

(உ) ஏனைய விதங்கள் :

(i) **குழந்தை இறப்பு விதம்**: (Infant mortality rate—MR)

ஒரு ஆண்டுக்குக் குறைவான வயதுள்ள குழந்தைகளின் சிறப்பு இறப்பு விதமே, குழந்தை இறப்பு விதம் எனக் கூறப்படும். அதன் வாய்பாடு:

$$IMR = \frac{D_1}{P^1} \times 1000 \qquad \ldots (20)$$

$P_1$—குறித்த பகுதியில் குறித்த ஆண்டில் பிறந்த உயிருள்ள குழந்தைகளின் எண்ணிக்கை.

$D_1$—அதே பகுதியில் அவ்வாண்டில் 1 வயதுக்குள் இறந்த குழந்தைகளின் எண்ணிக்கை.

எனவே IMR என்பது (1000 காரணியை நீக்கினால்) ஒரு பிறந்த குழந்தை ஓர் ஆண்டுக்காலம் வாழ உள்ள ஊக அளவையை மதிப்பிடும். இத்தகைய விதங்களைத் தனித்தனியே ஆண்களுக்கும் பெண்களுக்கும் கணக்கிடுவர். சாதாரணமாக நம் நாட்டில் இந்த விதங்களின் மதிப்பு மிக அதிகமாக உள்ளது. இவைகளைக் குறைப்பது சுகாதாரத் துறையினரின் முக்கிய காரியமாக கருதப்படுகிறது. இதையொட்டி அமைந்த வேறு இரு விதங்களையும் கவனிப்போம்:

(ii) **பிறப்பைச் சார்ந்த இறப்பு விதம்**: (Neo Natal mortality rate NNMR) :

இதன் வாய்பாடு:

$$NNMR = \frac{D^1}{P_1} \times 1000 \qquad \ldots (21)$$

$D^1$ = அந்த ஆண்டில் ஒரு மாதங்கூட வாழாது இறந்துவிட்ட குழந்தைகளின் எண்ணிக்கை. $P_1$ முன்போலவே.

இதுவும் ஒரு வயது-சிறப்பு இறப்பு விதம்தான். இது ஒரு பிறந்த குழந்தை ஒரு மாதமேனும் வாழ்வதற்கான யூக அளவையை மதிப்பிடும். குழந்தை இறப்பு விதத்தை அளவிட இவ்விரண்டு விதங்களும் பயன்படும். இத்தகைய இறப்புகளைப் பற்றிப் பலபேர் பதிவு செய்வதில்லை. அதனால், இவற்றைப் பற்றிய பதிவுகள் அவ்வளவு திருத்தமாகவும், முழுமையாகவும் இராது.

**(iii) தாய் சார்ந்த இறப்பு விதம்:** (Maternal mortality rate) MMR

$$MMR = \frac{D^{11}}{P_1} \times 1000 \qquad ...(22)$$

$D^{11}$ = பிறப்பைச் சார்ந்த இறப்புகளின் எண்ணிக்கை—(அப் பகுதியில், அந்த ஆண்டிற்கு).

பற்பல நாடுகளில் பிறப்பைச் சார்ந்த தாய்களின் இறப்புகளைக் குறிக்கும் முறைகள் வெவ்வேருக இருக்குமாதலால், இவ் விதங்களை ஒப்பிடுதலில் அதிகக் கவனம் செலுத்தவேண்டி வரும். நம் நாட்டில் இவ்விதங்களின் மதிப்பும் அதிகமாகவே உள்ளது.

இதேபோன்று குடியேற்றம், குடியிறக்கம் முதலியவற்றிற்கும் விதங்கள் கணக்கிடலாம்.

**(iv) பொது நிலை அதிகரிப்பு விதம்:** (Natural increase Rate)

திருந்தாத பிறப்பு விதத்திலிருந்து, திருந்தாத இறப்பு விதத்தைக் கழித்தால் வருவதுதான், பொதுநிலை அதிகரிப்பு விதம் எனப்படும்.

$$NIR = CBR - CDR \qquad .(23$$

இந்திய நாட்டிற்கான (1947லிருந்து 1958 வரை நடந்த விவரங்களுக்கான) சில விதங்கள் கீழ்க்கண்ட பட்டியலில் உள்ளன:

**அட்டவணை 5: இந்தியாவின் பிறப்பு, இறப்பு, குழந்தை இறப்பு, முதலிய வீதங்கள்**

| ஆண்டு | உயிருள்ள பிறப்பு வீதம் (1) | இறப்பு வீதம் (2) | குழந்தை இறப்பு வீதம் (3) | பொதுநிலை அதிகரிப்பு வீதம் (4) |
|---|---|---|---|---|
| 1947 | 26.6 | 19.7 | 146 | 6.9 |
| 1948 | 26.2 | 17.0 | 130 | 8.2 |
| 1949 | 26.4 | 15.8 | 123 | 10.6 |
| 1950 | 24.9 | 16.1 | 127 | 8.8 |
| 1951 | 24.9 | 14.4 | 130 | 10.5 |
| 1952 | 25.4 | 13.8 | 123 | 11.6 |
| 1953 | 24.8 | 13.0 | 125 | 11.8 |
| 1954 | 24.4 | 12.5 | 114 | 11.9 |
| 1955 | 27.0 | 11.7 | 103 | 15.3 |
| 1956 | 21.6 | 9.8 | 102 | 12.8 |
| 1957 | 21.5 | 11.0 | 98 | 10.5 |
| 1958 | 25.1 | 11.3 | 92 | 13.8 |

இப்பட்டியலிலிருந்து கீழ்க்கண்ட விவரங்களைச் சுட்டிக் காட்டலாம். பிறப்பு வீதங்கள் (உயிருள்ள பிறப்புகளுக்கு மட்டும்) அவ்வளவாகக் குறையவில்லை. ஆனால் இறப்பு வீதங்கள் மிகவும் குறைந்துள்ளன. 19லிருந்து 11 வரை இவ்வீதம் குறைந்துள்ளது. எனவே 4-ம் நேர் வரிசையிலுள்ள நிறைகள் அதிகரித்துக் கொண்டிருப்பதைக் காணலாம். (இறப்பு குறைவதால், அதிகரிப்பு வீதம் அதிகரிக்கிறது.) 3-ம் வரிசையிலுள்ள வீதங்களும் இறங்குமுகமாகவே உள்ளன. 1947ல் பிறந்த குழந்தைகளில் ஏழில் ஒன்று நிச்சயமாக ஒரு வயதிற்குள் இறந்து விட்டிருக்கும். ஆனால் 1958ல் சுமார் 11 குழந்தைகளில் 10 குழந்தைகள் ஒரு வயதுவரை நிச்சயமாக வாழும் என்று கூறலாம்.

கீழ்க்கண்ட பட்டியலில், 1901-'70க்கான NIR விவரங்களைக் காணலாம்.

| வருடம் | CBR | CDR | NIR |
|---|---|---|---|
| 1901-10 | 49.2 | 42.6 | 6.6 |
| 1911-20 | 48.1 | 47.2 | 0.9 |
| 1921-30 | 46.4 | 36.3 | 10.1 |
| 1931-40 | 45.2 | 31.2 | 14.0 |
| 1941-50 | 39.9 | 27.4 | 12.5 |
| 1951-60 | 41.7 | 22.8 | 18.9 |
| 1961-70 | 37.0 | 16.0 | 21.0 |

குழந்தை இறப்பு வீதங்களைப் பல நாட்களுக்கு இடையே ஒப்பிட உதவுகிறது கீழ்க்கண்ட பட்டியல்;

**அட்டவணை 4: குழந்தை இறப்பு விதங்கள்**

| நாடு | இறப்பு வீதம் | நாடு | இறப்பு வீதம் |
|---|---|---|---|
| எகிப்து | 119.0 | சிலோன் | 47.7 |
| எதியோப்பியா | 84.2 | பாகிஸ்தான் | 142.0 |
| அமெரிக்கா ஐக்கிய நாடுகள் | 19.8 | ஃபிரான்சு | 15.1 |
| | | இங்கிலாந்து | 18.3 |
| கானடா | 19.3 | ஆஸ்திரேலியா | 17.9 |
| அர்ஜன்டீனு | 58 3 | நியூஜிலாந்து | 16.7 |
| பர்மா | 195-300 | ருசிய நாடுகள் | 24.4 |
| இந்தியா | 139 | | |

(**ஆதாரம்**: International year Book 1971) மேலை நாடுகளில் இறப்பு வீதம் மிகவும் குறைவாக உள்ளதை அறியப் பெறுகிறோம்.

(V) **இனவீதம்**: (Sex Ratio) SR

இதனைக் கணக்கிட இரு முறைகள் உண்டு. ஒன்றில் 1000 ஆண்களுக்கு எவ்வளவு பெண்கள் உள்ளனர் என்பதைக்காண்பது; மற்றதில் 1000 பெண்களுக்கு எவ்வளவு ஆண்கள் இருக்கிறார்கள் என்று அறிவது. நம் நாட்டில் முதல் முறையே அதிகமாக வழக்கில் உள்ளது. எனவே,

$$SR = \frac{\text{பெண்களின் எண்ணிக்கை}}{\text{ஆண்களின் எண்ணிக்கை}} \times 1000 \qquad \ldots(24)$$

ஒரு குறித்த ஆண்டிற்கோ, ஒரு குறித்த பகுதிக்கோ இவ் வீதத்தை நாம் கணக்கிடுகிறோம்.

பல நாடுகளில் உள்ள இன வீதத்தை அடுத்துவரும் அட்டவணையில் காண்பித்துள்ளோம்.

**அட்டவணை 5: பல நாடுகளில் இன வீதம்***

| நாடு | இன வீதம் | நாடு | இன வீதம் |
|---|---|---|---|
| எகிப்து | 982 | இந்தியா | 932 |
| நைஜீரியா | 980 | பாகிஸ்தான் | 900 |
| அமெரிக்கா | | இங்கிலாந்து | 1600 |
| ஐ.நா | 1055 | | |
| கானடா | 991 | ஆஸ்திரேலியா | 988 |
| அர்ஜென்டீனு | 1014 | நியூஜிலாந்து | 1000 |
| பர்மா | 962 | சோவியத் நாடுகள் | 1170 |

*(**ஆதாரம்**): Statistical year Book 1971-United Nations)

தம் நாட்டின் பல மாகாணங்களில் உள்ள இன விதங்கள் பின் வருமாறு:

அட்டவணை 6: பல இந்திய மாநிலங்களில் இனவிதம்*

| மாநிலம் | இன விதம் | மாநிலம் | இன விதம் |
|---|---|---|---|
| ஆந்திரம் | 981 | மகாராஷ்டிரம் | 936 |
| அஸ்ஸாம் | 876 | மைசூர் | 959 |
| பீஹார் | 994 | ஒரிஸ்ஸா | 1001 |
| குஜராத் | 940 | பஞ்சாப் | 864 |
| ஜம்மு, காஷ்மீர் | 872 | ராஜஸ்தான் | 908 |
| கேரளம் | 1022 | உத்திரப்பிரதேசம் | 909 |
| மத்தியப் பிரதேசம் | 953 | மேற்கு வங்காளம் | 878 |
| தமிழ்நாடு | 992 | | |

*(ஆதாரம் — Indian Census—1961 Volume)

தமிழ்நாட்டின் ஜில்லாக்களில் 1961இலும் 1971இலும், இனவிதம் எப்படி இருக்கிறது என்பதனை அடுத்த அட்டவணை விளக்கும்.

அட்டவணை 7: தமிழ்நாடு ஜில்லாகளின் இனவிதம்:

| ஜில்லா | 1961 | 1971 |
|---|---|---|
| சென்னை | 900.8 | 903.6 |
| செங்கல்பட்டு | 960.0 | 947.5 |
| வட ஆற்காடு | 989.0 | 971.2 |
| தென் ஆற்காடு | 984.4 | 969.4 |
| தர்மபுரி | 968.2 | 998.6 |
| சேலம் | 982.2 | 963.2 |
| கோயம்புத்தூர் | 965.9 | 956.6 |
| நீலகிரி | 914.1 | 944.0 |
| மதுரை | 998.0 | 986.1 |
| திருச்சி | 1008.3 | 991.5 |
| ராமநாதபுரம் | 1059.7 | 1041.8 |
| திருநெல்வேலி | 1052.5 | 1041.7 |
| கன்னியாகுமரி | 979.0 | 972.2 |

1961-1971 இடையிலுள்ள பத்து ஆண்டுகளில் ஒன்றிரண்டு விலக்குகளைத் தவிர மற்றவற்றில் இனவிதம் குறைந்துள்ளதைக் காண்கிறோம். நீலகிரி மாவட்டத்தில் மட்டும் இனவிதம் குறிப்பாக அதிகரித்துள்ளது.

**1.5 உயிர்நிலை புள்ளியலில் நுண்படியளவு முறைகள் : (Graduation fomula)**

**(அ) மக்கட்தொகை விவரங்களை நுண் படியளவாக்குதல் :**

பிறப்பு, இறப்பு வீதங்களைக் கணக்கிடுவதற்கு நமக்கு நடு ஆண்டிற்கான மக்கள்தொகை தேவைப்படுகிறது. இத்தகைய மதிப்பீடுகளைப் பெறுவதற்கும், பின்பு ஏற்படக்கூடிய மக்கள் தொகையினையும் மதிப்பிடுவதற்கும் நமக்கு வசதியான நுண்படிவு வாய்பாடுகள் தேவை. அத்தகைய வாய்பாடுகளுக்குள், பர்ல்-ரீட் வளைகோடு அல்லது லாஜிஸ்டிக் வளைகோடு என்பது முக்கிய மானது. இதனைப் பயன்படுத்தி மக்கள் தொகையின் வளர்ச்சியை நன்கு அளவிடலாம்.

**(ஆ) லாஜிஸ்டிக் வளைகோடு :**

t-என்ற காலத்தில் மக்கள் தொகை P என்று இருந்தால் P-ஐ t-ன் சார்பலனைக் கண்டுபிடிப்பது மக்கள் தொகை வளர்ச்சியை அளவிட உதவும்.

அப்போது

$$\text{சார்பியல் (Relative) வளர்ச்சி வீதம்} = \frac{dp/dt}{p} = \frac{1}{p}\frac{dp}{dt}$$

முதல் தோராயமாக இதனை r (ஒரு மாறிலி) எனக் கூறுவோம்

அதாவது $\frac{1}{p}\frac{dp}{dt} = r$ ...(25)

$$d(\log P) = rdt$$

தொகையிட $\log P = a + rt$ (a ஒரு மாறிலி)

எனவே $P = Ae_{rt}$ ...(26)

இங்கு A என்பது ஒரு நேர் (+ve) மாறிலி. அதாவது சார்பியல் வளர்ச்சி வீதம் ஒரு மாறிலி என்று கொண்டால், P என்பது கூட்டு வட்டி விதியைப் பின்பற்றும். t என்பது $(-\alpha)$ஐ அணுகும் போது $P \longrightarrow \alpha$ இது சரிதான்; ஆனால் $t \longrightarrow \alpha$ என்றால் $P \longrightarrow \alpha$

என்று வருகிறது. இது சரியென்று தோன்றவில்லை. ஏனென்றால் மக்கள் தொகை எண்ணிலியாக இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது (P—ஒரு நாட்டின் மக்கள் தொகை தானே.)

ஒரு நாட்டில் மக்கள் தொகையின் சார்பியல் வளர்ச்சி வீதம் காலம் செல்லச் செல்ல குறைந்து கொண்டே வரும் என்று கொள்வது பொருத்தமாக இருக்கும். அத்தகைய எளிதான ஒரு சார்பலன் r(1—KP) என்பது. t-அதிகரிப்பதற்கு ஏற்றவாறு Pயும் அதிகரிக்கும். இங்கும் r, K இரண்டும் நேர் மாறிலிகள்.

அதாவது $$\frac{1}{P}\frac{dp}{dt} = r(1-KP) \qquad \ldots(27)$$

$$\frac{1}{P(1-KP)}\frac{dp}{dt} = r$$

அல்லது $$\left\{\frac{1}{P} + \frac{K}{1-KP}\right\}\frac{dp}{dt} = r$$

$$\frac{1}{P}\frac{dP}{dt} + \frac{K}{1-KP}\frac{dp}{dt} = r$$

தொகையிட $$\log P - \log(1-KP) = rt + C$$

$$\log\left\{\frac{P}{1-KP}\right\} = rt + c$$

$$\frac{P}{1-Kp} = Ae^{-rt}$$

எனவே $$P = \frac{1}{K + \frac{1}{A}e^{-rt}} \qquad \ldots(28)$$

இங்கு $t \to -\infty$, என்றால் $P \to 0$ (முன்போலவே. ஆனால் $t \to +\infty$ என்றால் $P \to \frac{1}{K}$ அதாவது ஒரு குறிப்பிட்ட உயர் மட்டத்தை எட்டுகிறது என்றுகிறது; இந்த உச்சவரம்பினை L என்று குறிப்பிடுவது வழக்கம். அப்போது,

$$P = \frac{L}{1+\frac{L}{A}e^{-rt}}$$

$P = \frac{L}{2}$ என்னும்போது $t = \beta$ எனக்கொள்வோம். அதாவது

$$\frac{L}{2} = \frac{L}{1+\frac{L}{A}e^{-r\beta}}$$

$$1+\frac{L}{A}e^{-r\beta} = 2 \text{ அல்லது } A = Le^{-r\beta}$$

இதனை மேலே உள்ள (4)ல் பொருத்திடில்

$$P = \frac{L}{1+c^{r(\beta t)}} \qquad \ldots(29)$$

இந்த வடிவத்தில் விதியை லாஜிஸ்டிக் வளைகோடு என்று குறிப்பிடுவோம். முதன் முதலில் இதனைப் பற்றி ஆராய்ந்தவர்கள் 'பர்ல்' மற்றும் 'ரீட்' என்ற விஞ்ஞானிகள். எனவே இது பர்ல் ரீட் (Pearl Reed) வளைகோடு என்றும் அழைக்கப்படுகின்றது. இதனை $Y = \frac{A}{1+be^{P^n}}$ என்றும் எழுதுவ துண்டு. ...(30)

**இதன் தன்மைகள் :**

(i) Pன் வகை சமன்பாட்டைச் சற்று மாற்றி எழுதுவோம்.

$$\frac{dp}{dt} = Pr\,(1-KP) = pr\left(1-\frac{P}{L}\right)$$

இங்கு P, r, $1-\frac{P}{L}$ எல்லாம் நேர் எண்கள். ஆதலால்,

$\frac{dp}{dt} > 0$. எனவே P என்பது காலத்துடன் எப்போதும் அதிகரித்துக்கொண்டே இருக்கும்.

ii மறுமுறை வகையிட,

$$= r\left[1 - \frac{2P}{4}\right]\frac{dP}{dt}$$

எனவே $P > \frac{L}{2}$ என்றால் $\frac{d^2P}{dt^2} < o$

$P = \frac{L}{2}$ என்றால் $\frac{d^2P}{dt^2} = o$

$P > \frac{L}{2}$ என்றால் $\frac{d^2P}{dt} > o$

எனவே $P = \frac{L}{2}$ என்பதுதான் மாறுநிலை (critical Point). இந்நிலை $t = \beta$ என்னும்போது நிகழ்கிறது என்று முன்பே கூறியுள்ளோம். இந்த புள்ளியில் லாஜிஸ்டிக் வளைகோட்டிற்கு ஒரு குழிவு மாற்றுப் புள்ளி (Point of inflexion). அதற்கு முன்பு $(t < \beta)$ அது உட்குழிவாகவும், பிறகு மேற்குவிவாகவும் இருக்கும். எனவே, அதன் தோற்றம்:




(iii) இவ் வளைகோட்டிற்கும் இரண்டு தொடு கோடுகள் உண்டு $t = o$, $P = o$ ; $t = \infty$ ; $P = L$ என்பவை.

## (இ) மற்ற வளர்ச்சி வளைகோடுகள்

### (1) மாற்றப்பட்ட அடுக்கு வளைகோடு

முன்பே அடுக்கு (exponential) வளைகோட்டைப் பற்றிக் கூறியுள்ளோம்; இது கூட்டுவட்டி விதியென்றும், வளர்ச்சி விதியென்றும் வழங்கப்பெறும். இதனைச் சற்று வேறுபடுத்தி ஒரு மாற்றிய அடுக்கு வளைகோட்டை நிறுவலாம்.

$$Y = a + be^{Px} \qquad \ldots(31)$$

என்பது அந்த வளைகோடு.

## (2) காம்பர்ட்ஸ் வளைகோடு (Gompertz Curve)

இங்கு $Y = AB^{q^x}$ என்று எழுதுவோம். ...(32)

அதாவது $\text{Log } Y = \text{Log } A + q^x \text{ Log } B = a + cq^x$

இதனை வகையிட $\frac{1}{y} \cdot \frac{dy}{dx} = C\,q^x (\log q) = dq^x$.

இங்கு Y என்பதை $l_x$ என்று வைத்தால்

$$\frac{1}{lx} \frac{dlx}{dx} = dq^x \text{ என வரும்.}$$

$$\mu_x = \frac{-1}{lx} \cdot \frac{dlx}{dx} \text{ என்று அறிவோம்}$$

எனவே $\mu x = -\, dq^x$ என்றாகிறது. அல்லது $d' = -d$ என்று வைத்தால் அதாவது காம்பர்ட்ஸ் வளைகோட்டில் $\mu_x = -dq^x$. இங்கு $\mu x$ என்பது ஒரு குறைந்துவரும் சார்பலனாக கருதப்பட்டுள்ளது.

## (3) மேக்ஹம்ஸ் வளைகோடு : (Makeham's Curve)

இங்கு $\mu_x = A + \frac{B}{B/Ce^{-rx}}$ ...(34)

$$r > 0, \quad A, B > o.$$

தொகையிட $\log lx = -\int \mu_x dx = -F - A \times - B^1c^x/\log$

$$\text{எனவே } lx = e^{-F - Ax - Dc^x}$$

$$Y = Ks^x gc^x$$

அதாவது $Y = Ks^x{}_g c^x$ ...(35)

என்பதை மேக்ஹாமின் விதியென்று கூறுவோம்.

இறப்பு ஏற்பட இரு காரணங்கள் உண்டு. அவை—1) தற்செயலாக நிகழக்கூடிய விபத்துகள் முதலிய நிகழ்ச்சிகளால் ஏற்படுபவை. இத்தகைய அபாய நேர்வுகள் (Risks) ஒரு மனிதனின் ஆயுட்காலம் முழுவதும் ஒரே மாதிரியாக இருக்கும் என்று கொள்ளலாம். அதாவது ஒரு மாறிலி (A) எனலாம். (2) மனித உடம்பில் வியாதிகளைத் தடுப்பதற்கான சக்தி குறைந்து வருதல்.

அத்தகைய சக்தியை g(x) என்று வைத்தால், அது ஆண்டு தோறும் சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டே வரும் என்பது மேக்ஹாமின் கொள்கை.

எனவே

$$\frac{1}{g(n)} \frac{d\, g(x)}{dx} = -r \qquad (r > o)$$

ஆக $g(x) = {}_{co}e^{-rx}$ என்றுகிறது. இதுதான் மேக்ஹாமின் ஆரம்ப கோட்பாடுகள். இவைகளிலிருந்து (35) ஏற்படுகிறது.

இந்த வளைகோட்டிலிருந்து காம்பர்ட்ஸ் வளைகோட்டைப் பெறுவது எளிது. $A = o$, $s = 1$ என்றால் $Y = Kg^{cx}$ என்று வந்து விடும்.

## 1. 6. கண்டறிந்த விவரங்களுக்கு இவ் வளைகோடுகளைப் பொருத்துதல்

### க. லாஜிஸ்டிக் வளைகோட்டைப் பொருத்தும் முறை :

கால இடைவெளியில் $t = o, 1, 2$ (n-1) என்ற t மதிப்புகளுக்கு அந்நாட்டின் மக்கள் தொகை விவரங்கள் $P_o$ $P_1$, $P_2 \ldots P_{n-1}$ என்று கொடுக்கப்பட்டுள்ளன என்று கருதுவோம்.

வளைகோட்டைப் பொருத்துவதற்கு, L, r, B என்ற மூன்று தொகைகளை மதிப்பிட வேண்டும். மூன்று குறித்த புள்ளிகளி னூடே $(t, P_t)$ அந்த வளைகோடு செல்லுமாறு இவற்றின் மதிப் பைக் கணக்கிடுவோம். கொடுக்கப்பட்ட காலத்தை இந்த மூன்று புள்ளிகளிலும் ஏறத்தாழச் சமமாக அடக்கம் செய்திருக்க வேண்டி யது அவசியம். இப்புள்ளிகளை முறையே $(o, P_o)$ $(n, P_n)$, $(2n ; P_{2n})$ என்று குறிப்பிடுவோம்.

அப்போது
$$\frac{1}{P_o} = \frac{1 + e^{r\beta}}{L} = \frac{1}{L} + \frac{e^{r\beta}}{L}$$

$$\frac{1}{Pn} = \frac{1+e^{r(\beta - n)}}{L}$$

$$\frac{1}{P_{2n}} = \frac{1+e^{r(\beta - 2n)}}{L}$$

எனவே $\frac{1}{Po} - \frac{1}{Pn} = \frac{1}{L} e^{r\beta} (1-e^{-rn}) = d_1$ (என்போம்)

$$\frac{1}{Pn} - \frac{1}{P_2n} = \frac{1}{L} e^{r(\beta - 2n)} (1-e^{-rn}) = d_2 \text{(என்போம்)}$$

அப்போது $\frac{d_1}{d_2} = e^{rn}$ அல்லது $r = \frac{1}{n}(\log d_1 - \log d_2)$ (i)

என்று வருகிறது.

$$\frac{d_1}{1-d_2/d_1} = \frac{\frac{1}{L} e^{r\beta} (1-e^{-rn})}{1-e^{-rn}} = \frac{1}{L} e^{r\beta}$$

அதாவது $\frac{1}{L} e^{r\beta} \quad \frac{d_1^2}{d_1-d_2}$

ஆனால் $\frac{1}{Po} - \frac{1}{L} = \frac{e^{r\beta}}{L}$ ஆதலால்

$$\frac{1}{Po} - \frac{1}{L} = \frac{d_1^2}{d_1-d_2}$$

அல்லது $\frac{1}{L} = \frac{1}{Po} - \frac{d_1^2}{d_1-d_2}$ (ii)

(i), (ii) ஆகிய சமன்பாடுகளிலிருந்தும் நாம் r, L என்பவற்றை மதிப்பிடுவோம்.

$\beta$—வை மதிப்பிட

$$e^{r\beta} = \frac{L}{P_o} - 1$$

அல்லது $\beta = \frac{1}{r}. \log \left(\frac{L}{Po} - 1\right)$ (iii)

என்ற சமன்பாட்டை உபயோகிப்போம்.

இவைகள் அவ்வளவாக திருத்தம் பெற்ற மதிப்புகள் என்று கூற முடியாது. இவைகளைத் திருத்தமாக்க கீழ்வரும் முறை பயன் படும்.

மேற்கூறியவாறு கிடைக்கும் மதிப்புகளை $L_0$, $\beta_0$, $r_0$ என்று கூறி, திருத்தமான மதிப்புகளை $L$, $\beta$, $r$ என்போம்.

அதாவது $L = L_0 + \delta L$ ; $\beta = \beta_0 + \delta B$ ; $r = r_0 + \delta r$

$\delta L$ $\delta B$ $\delta r$ என்பவை அம்மதிப்புகளில் உள்ள பிழைகள்.

அப்போது

$$P = f(L, r, B) = f(L_0, r_0, B_0) \ldots\ldots$$

$$+ \delta_L \left(\frac{\delta f}{\delta L}\right)_o + \delta_r \cdot \left(\frac{\delta f}{\delta r}\right)_o + \delta_\beta \left(\frac{\delta f}{\delta B}\right)_o$$

என்பது தோராயமான விரிவாக்கம் (டையலரின் வாய்ப்பாடு)

எனவே $P = c + \delta_1 \cdot x + \delta r \cdot y + \delta\beta \cdot z$ என்போம்.

இப்போது $\delta_1$, $\delta_r$ $\delta\beta$ என்பவற்றை மதிப்பிட குறைந்த வர்கள் முறையை (method of Least Squares) பயன்படுத்துவோம்

இங்கு $(P\text{-}fo)$ $\delta_1 n_i + \delta_r yi + \delta^b z_i$ எனக் கொள்வோம்.

எனவே $P = fo + \delta L^x + \delta r . y + \delta\beta ; \cdot z_i$ என்போம்.

$(P-fo) = \delta L . xi + \delta r . yi + \delta\beta . zi$ எனக் கொள்வோம்.

எனவே,
$$\left.\begin{aligned} \Sigma x_i (P_i - fo) &= \delta (\Sigma x_i^2) + \delta r (\Sigma x_i y_i) + \delta\beta(\Sigma x_i z_i) \\ \Sigma y_i (P_i - fo) &= \delta z(\Sigma x_i y_i) + \delta r (\Sigma y_i z) + \delta\beta(\Sigma z_i y_i) \\ \Sigma z_i (P_i - fo) &= \delta L(\Sigma x_i z_i) + \delta r (\Sigma y_i z_i) + \delta\beta)\Sigma z_i^2) \end{aligned}\right\} \text{(iv)}$$

என்ற இயல்பான சமன்பாடுகள் கிடைக்கும்.

இவைகளிலிருந்து

$$x_i = \left(\frac{dp_i}{dL}\right)_o = \frac{1}{1 + e^{ro(\beta_0 - i)}}$$

$$Y_i = \left(\frac{dP_i}{dr}\right)_o = \frac{Lo}{[1 + e^{ro(\beta_o - i)}]^2} (\beta_o - i) e^{ro(\beta_o - i)}$$

$$Z_i = \left(\frac{dPi}{d\beta}\right)_o = \frac{-L_o r_o \quad (\beta_o - i)}{[1 + e^{ro(\beta_o - i)}]^2}$$

இங்கு $i = o, 1, 2, \ldots (N-1)$ என்றாகும்.

இதிலிருந்து வரும் மதிப்புகளை மறுபடியும் $L_0$, $r_0$, $B_0$, எனக் குறித்து, மறுமுறை இதேபோல் அவற்றைச் செம்மையாக்கிக் கொண்டே வரலாம்.

இது மட்டுமல்லாது, லாஜிஸ்டிக் வளைகோட்டைப் பொருத்துவதற்கு ரோட்ஸ் முறை (Method of Rhodes) ஒன்றும் உள்ளது.

## (ங) மாற்றப்பட்ட அடுக்கு வளைகோட்டைப் பொருத்தும் முறை :

இங்கு $y = a + b_c p^x$

இப்போது x-க்கு, x-b, x x + b என்ற மூன்று சம இடைவெளி யுள்ள மதிப்புகளைத் தருவோம்.

அதாவது

$$Yo = a + b_e^{p(x-b)}$$

$$Y_1 = a + b_e^{p(x)}$$

$$Y_2 = a + b_e^{(x+b)}$$

$$Yo + Y_2 - Y_1^2 = \left[a+be^{p(x-b)}\right]\left[a+be^{P(x+b)}\right] - \left[a+be^{px}\right]^2 = ab\left[e^{P(x-b)} + c^{P(x+b)} - 2e^{px}\right]$$

மற்றும்

$$Yo + Y2 - 2Y_1 = b\left[e^{P(x-b)} + e^{P(x+b)} - 2e^{P^x}\right]$$

எனவே
$$a = \frac{YoY2 - Y_1^2}{Yo + Y2 - 2Y_1^2}$$

இந்த சமன்பாட்டிலிருந்து a ஐ மதிப்பிடலாம்.

இப்போது (y — a) மதிப்புகளை அரை-அடுக்கு மூலக் காகிதத்தில் (Semi-logarithmic paper) பொருத்துவோம். அப்போது புள்ளிகள் எல்லாம் சுமாராக ஒரு நேர்கோட்டில் அமைந்திருக்கும். a-ன் மதிப்பைச் சற்று மாற்ற வேண்டியிருந்தால், மாற்றலாம்)

இந்த நேர்கோட்டிற்கு n = o என்கிறபோது இருக்கும் குத்துக் கோடு (ordinate) தான் b ; x-ன் ordinate $y^1$ என்றும் $x_n$ புள்ளி யின் குத்துக்கோடு $y^{11}$ என்றும் வைத்தால்,

$$\frac{Y^{11}}{Y^1} = q^{x_n - x_1}$$

எனவே q-ஐ கண்டுபிடிக்கலாம்.

இவைகளை முதநிலை மதிப்புகளாக்கி, மேற்கூறிய முறைகளில் அவைகளை மேலும் செம்மையாக்கலாம்.



படம்-2 (i)



படம்-2(ii)



படம்-2 (iii)



படம்-2 (iv)



படம் (v)

## 1.7 வயது பட்டைக் கூம்புருவம் (Age Pyramid)

ஒரு நாட்டின் மக்கள்தொகையை வயதையொட்டியும் இனத்தையொட்டியும் பாகுபாடு செய்யலாம். இந்த விவரங்கள் அனைத்தையும் ஒரு வடிவ முறையில் பொருத்தினால் கிடைக்கும் படத்தை மக்கள்தொகை பட்டைக் கூம்புரு அல்லது வயது பட்டைக் கூம்புரு என்றும் கூறுவார்கள். எல்லாப் புள்ளி விவரப் படங்களைப் போலவே இந்தப் படமும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடியதாக இருக்கும். புள்ளி விவர வல்லுநர்களேயன்றி ஏனைய மக்களும் விவரங்களை எளிதில் அறிந்துகொள்ளும் வகையில் இந்தப் படம் அமையும். அடுத்த பக்கங்களில் மூன்று வெவ்வேறு நாடுகளின் கூம்புருப் படங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. படம் 6-இந்தியாவினது படம் 5—ஜப்பான் நாட்டினது படம் —3; அமெரிக்க ஐக்கிய நாடுகளுடையது.

இந்தப் படங்களின் தன்மைகளை சிறிது ஆராய்வோம்:

கீழ் மட்டத்தில் 0–4 வயதிலிருந்து தொடங்கி, மேலே செல்ல, வயது அதிகரித்துக்கொண்டே வருகிறது. இடது பக்கம் ஆண்கள், வலது புறம் பெண்கள் நம்நாட்டில் குழந்தைகள் எண்ணிக்கை மிக அதிகம். வயதானவர்களின் எண்ணிக்கை குறைவு. எனவே படம் 2—(i) இந்த வடிவில் அமைந்துள்ளது. இந்தப் படம் பொதுவாக முன்னேறிவரும் நபடுகளின் ஜனத்தொகைக்குப் பொருத்தமாக இருக்கும். அவைகளில் கருவள வீதம் குறையாததாலும், குழந்தைகளின் இறப்பு வீதம் குறைந்து வருவதாலும், குழந்தைகளின் எண்ணிக்கை மிக அதிகமாக இருக்கும். 15 வயதிற்குப் பிறகு சாய்வு அதிகமாக இருந்து நுனி கூராக அமைந்திருக்கும்.

இரண்டாவது வகை நாடுகளில் படம் 2-(iii) போல் அமையும். இவைகளின் பிறப்பு விதங்கள் குறைவு. எனவே அடிப்பாகம் படம் ஒன்றைவிட குறுகலாக இருக்கும். இறப்பு விகிதங்கள் குறைவானதால், ஜனத்தொகை வெகு நிதானமாகவே குறைந்து வரும். சுமாராக மேலைய ஐரோப்பிய நாடுகளின் வயதுப் படங்கள் இவ்வாறுதான் அமையும். இந்நாடுகளில் பிறப்பு இரண்டுமே கட்டுப்படுத்தப்பட்டுள்ளன.

மூன்றுவது படம் 2-(iv) மணியைப்போல் அமைந்திருக்கும். அண்மையில் அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா போன்ற நாடுகளில் இத்தகைய உருவம்தான் உள்ளது.

வெகு நாட்களாக (சுமார் 100 ஆண்டுகளாக) குறைந்து வரும் பிறப்பு, இறப்பு விகிதங்களைக் கொண்ட ஒரு நாட்டுல், பிறப்பு விகிதம் மட்டும் அதிகரித்து, இறப்பு விகிதம் குறைவாகவே இருப்பதால் ஏற்படும் மாற்றங்கள் படமாகியுள்ளன. இது தற்காலிகமானதுதான். இரண்டாம் உலகப் போருக்குப் பிறகுதான் அமெரிக்காவின் பிறப்பு விகிதங்கள் திடீரென்று அதிகரித்தன.

(படம்—2v) இந்த உருவம் தற்சமயம் ஜப்பான் நாட்டில் அமைந்துள்ளது. வெகுவாக குறைந்து வரும் பிறப்பு விகிதங்களும், கருவள விகிதங்களும் கொண்டது. இப்போக்கு இன்னமும் நீடிக்குமானல் விரைவில் அந்நாட்டின் ஜனத்தொகை குறைந்து விடக்கூடும். மேற்கு ஐரோப்பிய நாடுகளில் 1930-ஆண்டுகளில் இவ்வாறுன படங்கள்தான் கிடைத்தன. இந்நிலையும் தற்காலிகமானதுதான். கடைசியாக அகலமான அடிப்பாகத்தையும், சிறுகச் சிறிதே குறைந்து வரும் சரிவுகளைக் கொண்டதுமான கூம்புப்படம்.

படம்-2 (v)ப்போல் அமையலாம். இத்தகைய நாடுகளின் பிறப்பு, இறப்பு விகிதங்கள் இரண்டுமே அதிகமாக இருக்கும் இரண்டும் கட்டுக்கடங்காமல் இருக்கும். விஞ்ஞான முன்னேற்ற மடையாத நாடுகளின் நிலைதான் இது. 17, 18, ஆம் நூற்றாண்டு களில் எல்லா நாடுகளுமே இந்நிலையில்தான் இருந்தன. இப்பொழுது வெகுசில நாடுகளே இந்நிலையில் உள்ளன.

அடுத்த பக்கங்களில் நான்கு நாடுகளின் வயது. பட்டை கூம்புருவப் படங்கள் உள்ளன.




படம்—3 அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வயது பட்டை கூம்புருவப்படம் (சதவீத அளவில்)

(இறப்பு பட்டியல் விவரங்களிலிருந்து)




படம்—4 வயது பட்டைக் கூம்புருவம் இலங்கை நாட்டினது
(சதவீத அளவில்)




படம் 5. வயது பாட்டைக் கூம்புருவம்: ஜப்பான் நாட்டினது (சதவீத அளவில்

60 வயதுக்குமேல் உள்ளவர் = 8.92 %.

15—59 வயதுக்குட்பட்டவர் 61.06%.

0.14 வயதுக்குட்பட்டவர் 30.02%




படம் 6 வயது பட்டைக் கூம்படிவம்—இந்தியா நாட்டினது (சத வீத அளவில்)

60 வயதுக்குமேல் உள்ளவர் 5—86%

15—55 வயதுக்குட்பட்டவர் 56—89%

0.14 வயதுகளில் 37.44%

## மாதிரிக் கணக்குகள்

**எடுத்துக்காட்டு 9.** கீழ்க் கண்ட விவரங்களுக்கு $y = \frac{1}{a+bc^t}$ என்ற லாஜிஸ்டிக் வளைகோட்டை பொருத்துக.

(பி.எஸ்ஸி 75)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டு | 1962 | '63 | '64 | '65 | '66 | '67 | '68 | '69 | '70 |
| ஜனத்தொகை | 521 | 539 | 550 | 568 | 574 | 593 | 610 | 625 | 648 |

முதலில் a, b, c களுக்கு மதிப்புகளைக் கணக்கிடும் முறைகளை வகுப்போம். கொடுக்கப்பட்ட விவரங்கள் 9-எனவே அவைகளை 3-பகுதிகளாகப் பிரிப்போம்–முதல் மூன்று ஆண்டுகள்; இரண்டாம் மூன்று ஆண்டுகள்; கடைசி மூன்று ஆண்டுகள்; அவைகளை முறையே 1, 2, 3...3k என்று குறிப்பிடுவோம். இந்த உதாரணத்தில் K=3.

$$\frac{1}{y_i} = a + bc^i$$

எனவே $S_1 = \sum_{i=1}^{K} \left(\frac{1}{y_i}\right) = \sum (a+bc^i = ka+bc\,(1+c+c^2 \ldots c^{k-1})$

$$= ka+bc\left(\frac{1-c^k}{1-c}\right)$$

அதே போல் $S_2 = \sum_{i=k+1}^{2k} \left(\frac{1}{y_i}\right) = \sum_{i=k+1}^{2k} \left(a+bc^i\right) = Ka+bc^{k+1}\left(\frac{1-c^k}{1-c}\right)$

மற்றும் $S_3 = \sum_{i=2k+1}^{3k} \left(\frac{1}{y_i}\right) = \sum_{2K+1}^{3k} \left(a+bc^i\right) = Ka+bc^{2k+1}\left(\frac{1-c^k}{1-c}\right)$

எனவே $S_1 = Ka+bc\left(\frac{1-c^k}{1-c}\right)$

$$S_2 = Ka+bc^{k+1}\left(\frac{1-c^k}{1-c}\right)$$

$$S_3 = Ka+bc^{2k+1}\left(\frac{1-c^k}{1-c}\right)$$

இப்பொழுது $d_1 = s_1 - s_2 = bc\left(\frac{1-c^k}{1-c}\right)(1-c^k) = bc\frac{(1-c^k)^2}{(1-c)}$

$$d_2 = s_2 - s_3 = bc^{k+1}\left(\frac{1-c^k}{1-c}\right)(1-c^k) = bc^{k+1}\frac{(1-c^k)^2}{(1-c)}$$

என்று வருகிறது.

எனவே $\frac{d2}{d1} = c^k$ அல்லது $c = (d2/d_1)^{1/k}$ (i)

எனவே $ka = s_1 - bc\frac{(1-c^k)}{1-c} = s_1 - \frac{d1}{1-c^k}$

அப்போது $b = \frac{d_1\,(1-c)}{c(1-ck)^2}$ (ii)

அதாவது $a = \frac{1}{k}\left[s_1 - \frac{d_1}{1_c k}\right]$ (iii)

இப்பொழுது (i), (ii), (iii) என்ற சமன்பாடுகளிலிருந்து முறையே c, b, a களின் மதிப்புகளைப் பெறலாம்.

குறிப்பு: a-ன் மதிப்பை $s_2$. $s_3$-களிலிருந்தும் பெறலாம்,

$$a = \frac{1}{k}\left[s_2 - \frac{d_1c^k}{1-c^k}\right] = \frac{1}{k}\left[s_3 - \frac{d_1c^2k}{1-c^k}\right] = \frac{1}{k}\left[\frac{s_1s_3 - s_2^2}{s_1 - 2s_2 + s_3}\right]$$

இப்பொழுது கொடுக்கப்பட்ட கணக்கிற்கு இந்த முறைகளை பொருத்துவோம்.

| ஆண்டு i | மக்கள் தொகை yi | 1/yi | Si |
|---|---|---|---|
| 1 | 521 | ·0019193 | |
| 2 | 539 | ·0018552 | |
| 3 | 550 | ·0018181 | $S_1$ = ·0055926 |
| 4 | 568 | ·0017605 | |
| 5 | 574 | ·0017402 | |
| 6 | 593 | ·0016863 | $S_2$ = ·0051870 |
| 7 | 610 | ·0016393 | |
| 8 | 625 | ·0016000 | |
| 9 | 648 | ·0015432 | $S_3$ = ·0047825 |

$d_1 = s_1 - s_2 = .0055926 - .0051870 = .0004056$

$d_2 = s_2 - s_3 = .0051870 - .0047825 = .0004045.$

எனவே $$C = \left(\frac{d_2}{d_1}\right)^{\frac{1}{3}} = \left(\frac{.004045}{.004056}\right)^{\frac{1}{3}} = (.997288)^{\frac{1}{3}} = \underline{.9991}$$

அதாவது $c^3 = .997288 \quad c = .9991 \quad 1 - c^3 = .002712$

$$b = \frac{d_2(1-c)}{c\,(1-c^3)^2} = \frac{(.0004056)\,(.0009)}{(.9991)\,(.002712)^2} = \underline{.04967}$$

$$a = \frac{1}{3}\left(s_1 - \frac{d_1}{1-c^3}\right) = \frac{1}{3}\left(.0055926 - \frac{.0004356}{.002712}\right)$$

$$= \frac{1}{3}\,[.0055926 - .1496] = -\,0.0480024$$

எனவே $c = .9991$ ; $b = .0497 \quad a = -.0480$

அதாவது லாஜிஸ்டிக் வளைகோடு: $$y = \frac{1}{(-\cdot 480) + (.0497)c^t}$$

இந்த வளைகோட்டின் சமன் பாட்டிலிருந்து t=1, t=9 என்று பொருத்தி y-மதிப்பீடுகளைப் பெறலாம்.

அப்பொழுது $y_1 = 615.4$ ; $y_9 = 793.7$ என்று வருகிறது. இந்த மதிப்பீடுகள் கொடுக்கப்பட்ட மதிப்புகளிலிருந்து மிகவும் வேறு பட்டுள்ளன. எனவே லாஜிஸ்டிக் வளைகோடு அவ்வளவு பொருத்தமானதில்லை என்றே கூறவேண்டும்.

**எடுத்துக்காட்டு 10:** கீழ்க்கண்ட விவரங்களுக்கு

$$y_t = k\,(1 + be^{-at})$$

என்ற லாஜிஸ்டிக் வளைகோட்டைப் பொருத்துக.

| ஆண்டு | 1901 | 1911 | 1921 | 1931 | 1941 | 1951 | 1961 | 1971 |
|---|---|---|---|---|---|---|---|---|
| மக்கள் தொகை | 238.3 | 252 | 251.2 | 278.9 | 318.5 | 361.5 | 439.1 | 547 |

இங்கு 8-ஆண்டுகளின் மதிப்புகளே கொடுக்கப்பட்டுள்ளன. எனவே முன் எடுத்துக்காட்டில் செய்ததுபோல் மூன்று சம பாகங்களாக விவரங்களைப் பிரிக்கமுடியாது. இதற்கு யூலின்

(Yule's) சம-இடைவெளி மதிப்புகளின் முறையை (Equidistant, Values) பயன்படுத்துவோம்.

சம இடைவெளியுள்ள மதிப்புகளை $y_0$, $y_3$, $y_6$ என்றழைப்போம். அதாவது 1901ன் மதிப்பு $y_0$; 1931ன் மதிப்பு $y_3$; 1961-ன் மதிப்பு $y_6$. இந்த மூன்று மதிப்புகளிலிருந்து வளைகோட்டைப் பொருத்துவோம்.

இப்பொழுது $d_1 = \frac{1}{y_0} - \frac{1}{y_3}$ என்றும். $d_2 = \frac{1}{y_3} - \frac{1}{y_6}$ என்றும் வரையறுப்போம்.

அப்பொழுது $\frac{1}{y_t} = \frac{1+be^{-at}}{k}$ ஆதலால்

$$d_1 = \left(\frac{1+be^{o}}{k}\right) - \left(\frac{1+be^{-3a}}{k}\right) = \frac{b}{k}\left(1-e^{-3a}\right)$$

அதேபோல் $d_2 = \frac{b}{k}\left(1-e^{-3a}\right)e^{-3a}$ என்று வருகிறது.

எனவே $\frac{d_2}{d_1} = e^{-3a}$ அல்லது $a = \frac{-1}{3}[\log d_2 - \log d_1]$

மற்றும் $\frac{d_1^2}{d_1-d_2} = \frac{b}{k}$ அல்லது $b = \frac{kd_1^2}{d_1-d_2}$

மற்றும் $\frac{1}{k} = \frac{1}{y_o} = \frac{b}{k} = \frac{1}{y_o} - \frac{d_12}{d_1-d2}$. அல்லது $\frac{1}{k} = \frac{1}{y_0} - \frac{d_1^2}{d_1-d_2}$

இந்த மூன்று சமன்பாடுகளிலிருந்து a, b, k, களுக்குத் தீர்வுகளைப் பெறலாம்.

**குறிப்பு:** சம இடைவெளியுள்ள மதிப்புகளை $y_0$, $y_3n$, $y_6n$ என்று பொதுவாக எழுதினால்- $\frac{d_2}{d_1} = \frac{-an}{c}$ அல்லது

$$a = \frac{-1}{n}[\log d_2 - \log d_1] \text{ என்றும்,}$$

$$b = \frac{kd_1^2}{d_1-d_2}, \frac{1}{k} = \frac{1}{y_0} - \frac{d_1^2}{d_1-d_2}$$ என்றும் வரும்.

இப்பொழுது குறிப்பிட்ட விவரங்களுக்கு கணக்கிடுவோம்.

$$\frac{1}{y_o} = \frac{1}{238.3} = .00420; \quad \frac{1}{y_3} = \frac{}{278\ 9} = .00359; \quad \frac{1}{y_6} = \frac{}{4391.1} = .00228$$ எனவே $d_1 = .00061$; $d_2 = .00131$

$$a = -\frac{1}{3} \log \left(\frac{.00131}{.00061}\right) = -.1108$$

$$\frac{1}{k} = \frac{1}{yo} - \frac{d_1^2}{d_1 - d_2} = .00420 + .00053 = .00473$$

எனவே $k = 211.4$

ஆக $b = \frac{kd_1^2}{d_1 - d_2} = (211.4)\ (-.00053 = -.112642$

வளைகோடு சமன்பாடு $yt = \frac{211.4}{1 - (.1120)\ e^{+.1108t}}$

இங்கு $t = (t - 1901)/10$ என்பதனை கவனிக்க வேண்டும்.
$t = 0$ மதிப்பிட,

$$yt = \frac{211.4}{1 - (.112042)\ e^{+.1108t}}; \quad yt = \frac{211.4}{1 - (.1120)\ (2.1831)\ e^{+(.1108)(0)}} = 237.8$$

முதல் ஆண்டு, 1901-ஆண்டின் மதிப்பீட்டை சமன்பாட்டிலிருந்து பெறுவோம், $t = 0$. எனவே 1901ம் ஆண்டின் மதிப்பீடு 237.8 என்று வருகின்றது. இது கொடுக்கப்பட்ட விவரத்திற்கு ஒத்த தாக இருக்கின்றது.

$$y(1971) = \frac{211.4}{1 - (.1120)\ e^{(7708)(7)}} = \frac{211.4}{1 - (.1120)\ e^{.7756}} = \frac{211.4}{.7554} = 279.9$$

$y(1971) = 279.9$ இந்த மதிப்பீடு அவ்வளவு சிறந்ததாக இல்லை.

எடுத்துக்காட்டு . 11

கீழ்க்கண்ட விவரங்களுக்கு ஒரு லாஜிஸ்டிக் வளைகோட்டைப் பொருத்துக.

| ஆண்டு | மக்கள் தொகை | ஆண்டு | மக்கள் தொகை | ஆண்டு | மக்கள் தொகை |
|---|---|---|---|---|---|
| 1810 | 7.24 | 1960 | 31.44 | 1910 | 91.97 |
| 20 | 9.64 | 70 | 38.56 | 20 | 105.71 |
| 30 | 12.87 | 80 | 50.16 | 30 | 122.78 |
| 40 | 17.07 | 90 | 62.95 | 40 | 131,67 |
| 50 | 23.19 | 1900 | 75.00 | 50 | 150.70 |

ஆண்டுகளை 1லிருந்து 15 என்று கருதி, மக்கள் தொகையை $P_1 \ldots\ldots P_{15}$ என்று எழுதுவோம். அப்பொழுது,

$$S_1 = \sum_{t=1}^{5} \frac{1}{Pt} = 0.421261 \; ; \; S_2 = \sum_{t=6}^{10} \frac{1}{Pt} = 0.106721 \; ;$$

$$S_3 = \sum_{t=11}^{15} \frac{1}{Pt} = 0.042708$$

எனவே $c^k = .20351$ இங்கு $k = 5$ ஆக cன் மதிப்பு: 0.7273.

எனவே c= . 18589 மற்றும் a = .005272

எனவே லாஜிஸ்டிக் சமன்பாடு.

$$\frac{1}{Pt} = 0.005272 + 0.\ 18589_4\ (0.7273)^t$$

இங்கு t என்பது 1810ம் ஆண்டிற்கு 1 ஆகவும், 1950ம் ஆண்டிற்கு 15 ஆகவும் இருக்கும்.

இப்பொழுது t=1:......15என்று, வளைகோட்டு சமன்பாட்டில் பொருத்தி, மதிப்பீடுகளைக் கணக்கிட்டால், விவரங்கள் கீழ் வருமாறு அமையும்.

| ஆண்டு | மக்கள் தொகை | ஆண்டு | மக்கள் தொகை | ஆண்டு | மக்கள் தொகை |
|---|---|---|---|---|---|
| 1 | 7.11 | 6 | 30.51 | 11 | 91.99 |
| 2 | 9.65 | 7 | 39.56 | 12 | 107.11 |
| 3 | 13.02 | 8 | 50.45 | 13 | 121.45 |
| 4 | 17.46 | 9 | 63.05 | 14 | 134.66 |
| 5 | 23.20 | 10 | 77 10 | 15 | 146.22 |

இந்த விவரங்களையும், மதிப்பீடுகளையும் ஒப்பிட்டுப் பார்க்க, லாஜிஸ்டிக் வளைகோடு நன்முக பொருந்தியிருப்பதைக் காணலாம்.

## பயிற்சி கணக்குகள்

1. கருவளவீதங்கள் என்முல் என்ன? அவைகளை கணக்கிடும் வகைகளை வருணனை செய். (பி.எஸ்ஸி. ஏப்.74)

2. மொத்த மற்றும் நிகர இனபெருக்க வீதங்களை விளக்கி, அவைகளைக் கொண்டு எவ்வாறு மக்கட்தொகை வளர்ச்சியை அளவிடுவது என்று விளக்குக. (பி.எஸ்ஸி. ஏப்: 74)

3. திருந்தாத இறப்புவீதம், வயது சிறப்பு வீதம் இரண்டினையும் வறையறுத்து, அவைகளைக் கொண்டு இரு இடங்களின் சிறப்புச் சூழ்நிலையை ஒப்பிட முடியும் என்றுக காட்டுக. (பி.எஸ்ஸி. ஏப்: 74)

4. தரப்படுத்தப்பட்ட இறப்பு வீதங்களை எப்படி கணக்கிடுவது என்று விளக்குக. (பி.எஸ்ஸி. செப்: 74)

5. அடிப்படை புள்ளிவிவரங்கள் (குடிவாழ்க்கைப் புள்ளி விவரங்கள்) நம் நாட்டில் எவை? அவைகளின் வாய்ப்பெல்லை (Scope) மற்றும் வறையறைகள் என்ன என்பதனை, மக்கட்தொகை முன் கூட்டுப் பிரச்சினைகளை முக்கியமாகக்கொண்டு விளக்குக.

6. தரப்படுத்தப்பட்ட வீதங்கள் என்றால் என்ன? தரப் படுத்தப்பட்ட பிறப்பு வீதங்களை கண்டுபிடிக்க ஒருமுறையை விளக்குக. (பி.எஸ்ஸி 74)

7. A, B. என்ற இரு பகுதிகளில் எதில் ஆரோக்கியம் அதிகமாக உள்ளது?

| | பகுதி-A | | பகுதி-B | |
|---|---|---|---|---|
| வயது | மக்கள் | இறப்புகள் | மக்கள் | இறப்புகள் |
| 5-க்கு கீழ் | 4,500 | 135 | 4000 | 144 |
| 5—15 | 10,000 | 40 | 10,500 | 63 |
| 15—65 | 12,500 | 75 | 13,500 | 81 |
| 65-க்கு மேல் | 8,000 | 140 | 2,000 | 102 |
| மொத்தம் | 30,000 | 390 | 30 000 | 390 |

8. கீழ்கண்ட விவரங்களுக்கு SDR-ஐ கண்டுபிடி :

A-நகரம்

| வயது | மக்கள் | இறப்புகள் | வீதம் |
|---|---|---|---|
| 0—15 | 10,000 | 200 | 20.0 |
| 15—50 | 18,000 | 500 | 27.8 |
| 50-க்கு மேல் | 2,000 | 50 | 25.0 |

B–நகரம்

| வயது | மக்கள் | இறப்புகள் | வீதம் |
|---|---|---|---|
| 0-15 | 15,000 | 270 | 24.0 |
| 15—50 | 20,000 | 600 | 30.0 |
| 50-க்கு மேல் | 5,000 | 100 | 20.0 |

| வயது | இறப்பு—வீதம் போலந்து | இறப்பு—வீதம் ஸ்வீடன் | தரப்படுத்தப்பட்ட மக்கள்தொகை |
|---|---|---|---|
| 0—4 | 18.870 | 4.348 | 119,900 |
| 5—14 | 0.759 | 0.465 | 206,900 |
| 15—24 | 1.385 | 0.767 | 183,200 |
| 25—34 | 2.048 | 1.075 | 147,900 |
| 35—44 | 3.326 | 1.882 | 120,500 |
| 45—54 | 7.006 | 4.669 | 93,900 |
| 55—64 | 18.111 | 12.477 | 70 800 |
| 65—74 | 45.795 | 34.060 | 40,500 |
| 75—மேல் | 124.258 | 116.433 | 16,400 |

(iii)

| வயது | நகரம்—1 மக்கள் தொகை | நகரம்—1 இறப்பு வீதம் | நகரம்—2 மக்கள் தொகை | நகரம்—2 இறப்பு வீதம் |
|---|---|---|---|---|
| 5—க்குகீழ் | 15,000 | 24 | 40,000 | 25 |
| 5—30 | 20,000 | 20 | 52,000 | 20 |
| 30.க்குமேல் | 10,000 | 28 | 8,000 | 30 |

9. கீழ்கண்ட விவரங்களிலிருந்து தரப்படுத்தப்பட்ட மக்கள் தொகுதிக்கு பொதுவான வேலையின்மை வீதம் (unemployment rate)-ஐயும், இடம்-இ-யின் தரப்படுத்தப்பட்ட வேலையின்மை வீதத்தையும் அதே பகுதிக்கு திருந்தாத வேலையின்மை வீதத்தையும் கணக்கிடு.

தரப்படுத்தப்பட்டத் தொகுதி இடம்—இ

| வயது | மக்கள் | வேலையின்மை வீதம் | மக்கள் | வீதம் |
|---|---|---|---|---|
| 15—30 | 2,500 | 5 ச.வீ. | 3000 | 4 ச.வீ. |
| 30—45 | 3,500 | 8 ,, | 3000 | 9 ,, |
| 45—60 | 3,000 | 12 ,, | 3,500 | 12 ,, |
| 60—மேல் | 1,000 | 15 ,, | 500 | 20 ,, |
| மொத்தம் | 10,000 | — | 10,000 | — |

10 கீழ்கண்ட விவரங்களிலிருந்து ஒருதரப்படுத்தப்பட்ட பிறப்பு வீதத்தைக் கணக்கிடுக. ASFR—என்பது வயது சிறப்பு கருவளவீதம் (000-க்கு); $p_f$ என்பது அந்த மாவட்டத்தில் பெண்களின் எண்ணிக்கை (000-க்களில்); $p,_f$ என்பது அந்தக் கிராமத்திலுள்ள பெண்களின் எண்ணிக்கை.

| வயது | 15—19 | 20—24 | 25—29 | 30—34 | 35—39 | 40—44 |
|---|---|---|---|---|---|---|
| ASFR | 16 | 107 | 153 | 120 | 76 | 29 |
| $p_f$ | 6274 | 58435 | 5267 | 5044 | 4965 | 4807 |
| $p_{f,}$ | 527 | 498 | 469 | 427 | 389 | 331 |

—நீங்கள் கண்டுபிடிக்கும் வீதம், மாவட்ட அளவுடன் ஒப்பிடப்படுமாறு அமையவேண்டும். (பி.எஸ்.ஸி. ஏப்: 75)

11. மேற்கு, கிழக்கு என்ற இருபகுதிகளில் ஒரு குறிப்பிட்ட நோயில் இறந்தவர்களைப்பற்றிய விவரங்கள் கீழ்பட்டியலில் உள்ளன. ஒவ்வொரு வயதுப்பிரிவிற்கும் தனித்தனியே இறப்பு வீதங்களையும், இருபகுதிகளுக்கும் திருந்தாத இறப்பு வீதங்களையும் கண்டுபிடி. இருப்பகுதிகளையும் ஒன்றுக்கி, அதனைத்தரப்படுத்தப்பட்ட மக்கள் தொகையாக பாவித்து, இருபகுதிகளுக்கும் தனித்தனியே தரப்படுத்தப்பட்ட இறப்பு வீதங்களை கணக்கிட்டு ஒப்பிடு.

| வயது பிரிவு | கிழக்கு பகுதி மக்கள் | கிழக்கு பகுதி இறப்பு | மேற்கு பகுதி மக்கள் | மேற்கு பகுதி இறப்பு |
|---|---|---|---|---|
| 15—க்கீழ் | 310 | 40 | 108 | 13 |
| 15—39 | 189 | 21 | 264 | 40 |
| 40—மேல் | 162 | 61 | 375 | 157 |
| மொத்தம் | 661 | 122 | 747 | 210 |

—மற்றும் ஒவ்வொரு பகுதிக்கும், எதிர்பார்க்கப்படும் இறந்தவர்களின் எண்ணிக்கையை கணக்கிடு.

12. இல்லிநாய்ஸ் மாநிலத்தின் தரப்படுத்தப்பட்ட இறப்பு எண்ணிக்கையை கணக்கிடுக.

| வயது பிரிவு | அமெரிக்கநாட்டின் மக்கள் தொகை | அமெரிக்கநாட்டின் இறப்பு வீதம் | இல்லிநாய்ஸ் மாநிலத்தின் மக்கள் தொகை | இல்லிநாய்ஸ் மாநிலத்தின் இறப்பு வீதம் |
|---|---|---|---|---|
| 1—க்குகீழ் | 804 | 48.4 | 690 | 33.2 |
| 1—4 | 2876 | 2.4 | 2438 | 1.3 |
| 5—14 | 3360 | 0.7 | 2838 | 07 |
| 15—24 | 6817 | 2.0 | 5764 | 1.. |
| 25—34 | 7426 | 3.6 | 6416 | 1.9 |
| 35—44 | 7886 | 7.2 | 6909 | 3.8 |
| 45—54 | 6969 | 15.2 | 6128 | 9.8 |
| 55—64 | 5650 | 29.5 | 4982 | 23.0 |
| 65—74 | 4371 | 39.9 | 3848 | 48,4 |
| 75—க்குமேல் | 2992 | 72.8 | 2623 | 105.1 |

13. கீழ்க்கண்ட விவரங்களுக்கு வயதுசிறப்பு கருவளம் வீதம் மொத்த கருவள வீதம், மற்றும் மொத்த இனபெருக்க வீதங்களை கணக்கிடு.

| வயதுப் பிரிவு | உயிருள்ள பிறப்புகள் | பெண்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 15—19 | 800 | 25,000 |
| 20—24 | 2400 | 20,000 |
| 25—29 | 2000 | 18,000 |
| 30—34 | 1500 | 15,000 |
| 35—39 | 500 | 12,000 |
| 40—44 | 120 | 6,000 |
| 45—49 | 10 | 4,000 |
| மொத்தம் | 7.330 | 100,000 |

*14.* நியூஜீலாந்து நாட்டில் 1958-ம் ஆண்டு மக்கள் தொகை = 2285.8 ஆயிரங்கள் மற்ற விவரங்களைப் பட்டியலில் காணலாம்.

| வயதுப் பிரிவு | பெண்கள் எண்ணிக்கை(000) | பிறப்புகளின் எண்ணிககை |
|---|---|---|
| 15—19 | 84.79 | 2,343 |
| 20—24 | 70.01 | 14,541 |
| 25—29 | 72.66 | 16,736 |
| 30—34 | 75.92 | 10,218 |
| 35—39 | 75.10 | 5,134 |
| 40—44 | 71.62 | 1,422 |
| 45—49 | 66.66 | 93 |
| மொத்தம் | 516.76 | 50,487 |

இவைகளுக்கு, CBR, GFR, TFR. NRR, களைக் கணக்கிடுக.

*15.* கீழ்கண்ட விவரங்களுக்கு GRR, NRR, களைக்கணக்கிடுக:—

(அ)

| வயதுப்பிரிவு | வயது சிறப்பு கருவள வீதம் | பெண்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 15—19 | . 0157 | 4683.4 |
| 20—24 | . 1017 | 4666.1 |
| 25—29 | . 1410 | 4643.3 |
| 30—34 | . 1107 | 4614.7 |
| 35—39 | . 0722 | 4574.3 |
| 40—44 | . 0293 | 4521.2 |
| 45—49 | . 0027 | 4456.3 |

இனவிதம்: 105 பெண்கள் / 100 ஆண்கள்.

(ஆ)

| வயதுப் பிரிவு | கருவள விதம் (ஒரு பெண்ணிற்கு) | வாழ்க்கை விதம் Suival Rate) |
|---|---|---|
| 15—19 | .0108 | .969 |
| 20—24 | .0662 | .967 |
| 25—29 | .0675 | .963 |
| 30—34 | .0413 | .958 |
| 35—39 | .0216 | .952 |
| 40—44 | .0063 | .942 |
| 45—49 | .0004 | .928 |

(இ)

| வயதுப் பிரிவு | பெண்கள் தொகை(000-ல்) | பெண் பிறப்புகள் | வாழ்க்கை விதம் |
|---|---|---|---|
| 15—19 | 1600 | 19,000 | .921 |
| 20—24 | 1000 | 70,200 | .901 |
| 25—29 | 1685 | 90,600 | .885 |
| 30—34 | 1730 | 62,400 | .862 |
| 35—39 | 1725 | 32,500 | .850 |
| 40—44 | 1629 | 11,000 | .832 |
| 45—49 | 1510 | 800 | .812 |

(ஈ)

| வயது | 16-20 | 21-25 | 26-30 | 31-35 | 36-40 | 41-45 | 46-50 |
|---|---|---|---|---|---|---|---|
| இறப்புவிதம் | 120 | 180 | 150 | 200 | 220 | 230 | 250 |
| பிறப்புகள் | 150 | 1500 | 2000 | 800 | 500 | 200 | 100 |

இனவிதம்=ஆண் | பெண் = 52:48

(உ)

| வயது | பெண் பிறப்புகள் | பெண்கள் தொகை (000) | வாழ்க்கை விதம் |
|---|---|---|---|
| 5—9 | 15,133 | 1,399 | .9694 |
| 20—24 | 94,155 | 1,422 | .9668 |
| 25—29 | 102,676 | 1,521 | .9632 |
| 30—34 | 72,470 | 1,756 | .9584 |
| 35—39 | 31,420 | 14,51 | .9519 |
| 40—44 | 10,640 | 1,689 | .9424 |
| 85—49 | 700 | 1,667 | .9279 |

16. ஜப்பான் நாட்டின் பிறப்பு விதங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. மொத்த கருவள விதத்தை (ஒரு பெண்ணிற்கானது.) கணக்கிடு

| வயதுப் பிரிவு | 15.19 | 20.24 | 25.29 | 30.34 | 35.39 | 40.44 | 45.49 |
|---|---|---|---|---|---|---|---|
| கருவள வீதம் | 13.4 | 161.8 | 242 3 | 182.3 | 109.8 | 37.9 | 2.5 |

(000 பெண்களுக்கு)

17. கீழ்கண்ட விவரங்களுக்கு ஒரு லாஜிஸ்டிக் வளை கோட்டை பொருத்துக :—

(அ) ஆண்டு : 1911 1921 9931 1941 1951 1961
மக்கள் தொகை : 253 286 360 468 515 672

(பி.எஸ்ஸி. 1973)

(ஆ) ஆண்டு: 1890 1900 1910 1920 1930 1940 1950 1960 1970
மக்கள் தொகை : 62.95 76.00 91.97 105.71 122.78 131.67 150.70 179.32 204.88

(பி.எஸ்ஸி 1975)

(இ) ஆண்டு : 1911 1921 1931 1941 1951 1961
மக்கள் தொகை : 30.3 33.6 41.0 51.8 56.4 72.2

(பி.எஸ்ஸி 1974)

(ஈ) ஆண்டு : 1880 1890 1900 1910 1920 1930 1940 1950 1960
மக்கள் தொகை : 50.16 62.92 76.00 91.97 105.71 122.78 131.67 150.70 179.32

(பி.எஸ்ஸி 197

18. கீழ்கண்ட விவரங்களுக்கு $y = {}_aB^x$ என்ற வளை கோட்டை பொருத்தி 1975-ம் ஆண்டின் மதிப்பீட்டை பெறுக.

(க) ஆண்டு : 1901 1911 1921 1931 1941 1951 1961 1971
மக்கள் தொகை : 3.9 5.3 7.3 9.6 12.9 17.1 23.2 30.9

(பி.எஸ்ஸி 74)

(கா) $x$ : 3 5 7 9 11 13 15
$y$ : 16 23 30 39 49 64 83

(பி எஸ்ஸி 75)

(இ)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆண்டு | 1790 | 1800 | 1801 | 1820 | 1830 | 1840 |
| மக்கள் தொகை | 3.9 | 5.3 | 7.2 | 9.6 | 12.9 | 17.1 |
| ஆண்டு | 1850 | 1860 | 1870 | 1880 | 1890 | 1900 |
| மக்கள் தொகை | 23.2 | 31.4 | 38.6 | 50.2 | 62.9 | 76.0 |
| ஆண்டு | 1910 | 1920 | 1930 | 1940 | | |
| மக்கள் தொகை | 92.0 | 105.7 | 122.8 | 131.4 | | |

1950—1960-ம் ஆண்டுகளின் மதிப்பீடுகளையும் கண்டுபிடிக்கவும். உண்மை விவரங்களான 150.7, 178.5 என்பவைகளுடன் மதிப்பீடுகளை ஒப்பிடவும்,

## விடைகள்

7. CDR இரண்டிலும் சமம் = 13.00

   SDR (B) = 10.14 எனவே B-பகுதியே ஆரோக்கியமானது.

8. (i) A—நகரம் 24.5; B-நகரம் 26.75

   (ii) போலந்து = 9.210; ஸ்வீடன் = 5.754

   (iii) நகரம் 1 = 23.1 ; நகரம் 2 = 23.9

9. 91.5 ; 97.5 ; 91.0

10. திருந்தாத வீதங்கள் : மேற்கு 28.1 ; கிழக்கு 18.5
    தரப்படுத்தப்பட்ட வீதங்கள் : ,, 24.4 ; ,, 21.8

    வயது இறப்பு வீதங்கள் :—

    ,, 12.0, 15.1, 41.9; கிழக்கு 12.9, 11.1, 37.7
    எதிர்பார்க்கப்படும் இறப்பு எண்ணிக்கை :—

மேற்கு : 50.3, 68.6, 224.8

கிழக்கு : 53.9, 50.3, 202.2

12. 16.42

13. வயதுப் பிரிவுகளுக்கு சிறப்பு கருவள வீதங்கள்; முறையே — 32, 120, 11.1, 100, 41.7, 20.0, 2.5

பொதுவான கருவள வீதம் = 73.3.

மொத்த கருவள வீதம் = 2.138

மொத்த இனபெருக்க வீதம் = 1.17

14. CBR = 22.09 ; 97.70 ; 3,449.33 ; 1.69

15. (அ) GRR = 1.155 NRR = 1.068

(ஆ) GRR = 1.0705 NRR = 1.0296

(இ) GRR = .9905 NRR = .8755

(ஈ) GRR = 2.52 NRR = 2.078

(உ) 1.0709 ; 1.0301

16. 3.75

18. (கி) $P_t = \dfrac{184.00}{1+(66.69)\ (10^{-\cdot 1398t})}$

மதிப்பீடுகள் முறையே 1790லிருந்து 1960வரை ——3.7, 5.1, 7.0, 9.5, 12.8, 17.3, 23.0, 30.3, 39.3, 50.2, 62.8, 76.7, 91.4 106.1, 120.1, 132.8 ; 143.8, 153.0

1940—ம் ஆண்டுவரை மதிப்பீடுகள் உண்மை விவரங்களுடன் மிகவும் ஒத்திருக்கின்றன. ஆனால் 1960-ம் ஆண்டின் மதிப்பீடு வெகுவாக வித்தியாசப்பட்டுள்ளது 1950லும் வித்தியாசம் சற்று அதிகம் தான். எனவே லாஜிஸ்டிக் வளைகோடு 1940ம் ஆண்டுவரை தான் பொருத்தமாக உள்ளது. பிறகு இல்லை

# சென்ஸஸ் அல்லது மக்கள் மதிப்பீடு

எந்த ஒரு நாட்டிலுமே மிக பழமையான காலந்தொட்டு கண்டுபிடிக்கப்பட்டு வந்திருக்கும் புள்ளி விவரங்கள் அந்நாட்டு மக்கள் தொகையைப் பற்றியவைதாம். பழைய நாட்களில் ஒரு நாட்டின் பலம் அதன் படைபலத்தை பொறுத்திருந்தது; எனவே சண்டைகளின் மூலம் சாம்ராஜ்ய விஸ்தரிப்பு செய்ய அரசர்களுக்கு தேவைப்பட்டது ஆட்பலமே. அது எவ்வளவு கிடைக்கக் கூடும் என்ற விவரங்களை திரட்ட முயல்வது அரசின் முக்கிய வேலைகளில் ஒன்றாக இருந்திருக்கும் என்று கூறத் தேவையில்லை. மகா பாரத யுத்தத்தில் 18 அக்ஷோஹிணி படைகள் திரண்டிருந்தன என்ற விவரம் உள்ளது. ஓர் அக்ஷோஹிணியிலுள்ள காலாட் படைகளின் எண்ணிக்வக 1,09,350 அப்பொழுது மொத்த படை எண்ணிக்கை 19,68,300. அதாவது சுமார் 20 லட்சம் ஒரு வீட்டிற்கு ஒரு ஆள் படையில் வந்து சேர்ந்தான் என்று வைத்துக்கொண்டு ஒரு குடும்பத்தின் சராசரி மக்கள் எண்ணிக்கை 7 என்று வைத்தால் அந்த நாளின் ஜனத்தொகையின் தோராய மதிப்பீடு $1\frac{1}{2}$ கோடி என்று வருகிறது. இதுபோல் மக்கள் தொகையை மதிப்பிடுவதுதான் ஒரு நாட்டின் முதலான புள்ளியியல் திரட்டாகும்.

ஆனால் இப்பொழுது சுமார் ஒரு நூறாண்டு காலமாக கணக்கிடப்பெற்று வரும் சென்ஸஸ் அல்லது மக்கள் தொகை மதிப்பீடு வெறும் ஜனத்தொகையை மட்டுமின்றி, அந்த ஜனங்களைப் பற்றி பற்பல விவரங்களை வயது, இனம், மதம், வேலை விவரங்கள், சம்பாத்திய விவாங்கள் வீட்டு வச்தி, கல்வி அறிவு முதலியவற்றையும் சேகரித்து அவைகளை வெளியிட்டு வருகின்றன.

## 21. சென்ஸஸின் சில பொது பிரச்சினைகள் :

க்விபெக் என்ற மாகாணத்தில்தான் முதன் முதலில் சென்ஸஸ் கணக்கெடுப்பு நடந்தது—1666ல். பிறகு நோவாஸ் காடிய, நீயுஃபௌண்ட்லாந்து முதலிய இடங்களுக்கு அது பரவியது. பாரீஸ் நாட்டில் பொதுவாக வரி விதிப்பதற்கும், படை திரட்டுவதற்கும் உதவக்கூடிய விவரங்களே திரட்டப்பட்டன.

சீனவில் சுமார் 3000 கி.மு.விலேயே அத்தகைய கணக்கெடுப்புகள் நடந்தற்கு சான்றுகள் உள. பேபிலோனியா, எகிப்து நாடுகளி லும் வெகு தொன்மை காலத்திலேயே கணக்கெடுப்புகள் நடந் துள்ளன. அமெரிக்காவில் 1790ல் ஒரு கணக்கெடுப்பு நடந்தது. சுமார் 100 ஆண்டுகளுக்குப் பிறகு எல்லா ஐக்கிய அமெரிக்க நாடுகளிலும் அது முழுமையாக விஸ்தரிக்கப்பட்டது. 1902-ம் ஆண்டிலிருந்து ஒரு சென்ஸஸ் ப்யூரோ (Census Bureau) என்ற சாசுவதமான நிறுவனம் அமைக்கப் பெற்று அது சென்ஸஸ் கணக்கெடுப்பு பணிகளை தொடர்ச்சியாக செய்து வந்துகொண் டிருக்கிறது.

ஐரோப்பா கண்டத்தில் ஸ்வீடனில் 1749லேயே கணக் கெடுப்பு நடந்தது. இங்கிநாந்தில் 1801ல் தான் முதல் சென்ஸஸ் எடுக்கப்பட்டது. 1920 வரையில் ஒவ்வொரு சென்ஸஸிக்கும் தனித்தனியே சட்டம் இயற்றப்பட்டு இங்கிலாந்து மற்று வேல்ஸ், ஸ்காட்லாந்து வடக்கு அயர்லாந்து மற்றும் சுதந்திர ஐரிஷ் நாடு களுக்கு தனித்தனியாக கணக்கெடுப்புகள் நடந்து வந்தன. ஆனல் மூன்று பகுதிகளிலும் ஒரே மாதிரியான ஒப்பிடக்கூடிய தான தகவல்களே திரட்டப்பட்டன.

2.2. சென்ஸஸ் கணக்கெடுப்பில் பொதுவா இரண்டு முறைகள் உள்ளன — (1) (De facto method) நடப்பின்படி கணக்கெடுப்பு அதாவது குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட இடத்தில் எவ்வளவு மக்கள் இருக்கிறுர்கள் என்பது இதில் சாதாரணமாக அங்கு வசிப்பவர்களும் அங்கு தற்காலிகமாக தங்கியுள்ளவர்களும் சேர்க்கப்படுவார்கள். (2) சட்டப்படி கணக்கெடுப்பு (Dejme method) அங்கு வசித்து வரும் மக்கள் தொகை - இதில் தற்காலிகமாக வெளியில் சென்றிருப்பவர்களும் சேர்க்கப்பட்டிருப்பார்கள்; தற்காலிகமாக அந்த இடத்தில் வந்திருப்பவர்கள் விலக்கப்பட்டு இருப்பார்கள். முதல் முறையை "நாள்முறை" (Date System) எட்றும் இரண்டாவதை "கால முறை" (Period System) என்றும் குறிப்பிடுவது வழக்கம்.

**நடப்பின் முறை அல்லது நாள்முறை:** Defactor or date method) இம்முறையில் யார் எந்த இடத்தில் இருக்கிறுர்களோ அங்கங்கேயே கணக்கெடுக்கப்படுவார்கள். ஒரே ஒரு குறித்த நாளில் நாட்டின் எல்லா பகுதிகளிலும் கணக்கெடுப்பு நடக்கும். குறித்த நாளில் அந்நாட்டின் மக்கள் தொகை எவ்வளவு என்று திட்டவட்டமாக இந்த முறையில் தெரியும். ஆனல் இந்த முறையில் அந்நாட்டின் சாசுவதமான (permanent) ஜனத்

தொகை எவ்வளவு என்றோ நாட்டின் பல பகுதிகளில் எவ்வளவு மக்கள் வசிக்கிறார்கள் என்றோ பிழையின்றி கூறமுடியாது. தற்காலிகமாக வெளியே சென்றிருப்பவர்களை சந்தித்து விவரங்கள் திரட்டுவது சிரமமே. மற்றும் சென்ஸஸ் கணக்கெடுப்பு நாளில் பிரயாணம் செய்துகொண்டிருப்பவர்கள், போரில் சண்டைசெய்து கொண்டிருப்பவர்கள், காட்டிலாக்காவைச் சார்ந்து காட்டு உட்பகுதிகளில் வசிப்பவர்கள் முதலியவர்களை கணக்கெடுப்பதும் கடினமே. நிலைத்த வீடு வசதியற்று நாடோடிகளாகத் திரியும் நரிக்குறவர்கள் போன்ற இன மக்களைப் பற்றியும் விவரங்கள் அதிகமாக கிடைக்காது. சென்ஸஸ் நாளை குறிப்பிடும் பொழுது அது அதிக வெட்பமோ, குளிரோ, மழையோ இல்லாத நாளாக இருக்கவேண்டும்; அன்று பண்டிகை கேளிக்கைமுதலியன இருக்கக் கூடாது; நிலா நாளாக இருப்பது நல்லது ஏனென்றால் நம் நாட்டில் பற்பல கிராமங்களில் மின்சார வசதி கிடையாது. இதுவுமில்லாது, கணக்கெடுப்பு ஒரே நாளில் நடக்க வேண்டியிருந்பதால் மிக அதிகமான எண்ணிக்கையில் கணிப்பாளர்கள் (enumerators) தேவைப்படுவார்கள்.

இங்கிலாந்தில் 1931 வரை இதே முறையைத்தான் பின்பற்றினார்கள், அதன் கீழ் அடிமையாக இருந்த நம் நாட்டிலும் அதே முறைதான் அமுலில் இருந்தது. 1941ம் ஆண்டிலிருந்து "சட்டப்படி முறையை இருநாடுகளும் பின்பற்றி வருகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகள் மற்றும் கனடாவில் என்றும் சட்டப்படி முறைதான். பற்பல ஐரோப்பா நாடுகளில் இரு முறைகளும் கையாளப்படுகின்றன.

'சட்டப்படி' முறை அல்லது "காலமுறை" (Dejme or period method) வழக்கமாக ஒரு மனிதன் எங்கு வாழ்கிறானோ அந்த இடத்திலேயே அவனைப் பற்றிய விவரங்களை திரட்டுவதுதான் இம்முறையின் அடிப்படை. வழக்கமாக என்னும் போது எவ்வளவு காலம் என்பதனைக் குறிப்பிடவேண்டும். எனவே இதில் ஒரு கால இடை வெளியை சென்ஸஸ் இடைவெளி (census period) என்று குறிப்பிட வேண்டும். சாதாரணமாக இது இரண்டு மூன்று வாரங்களுக்குள் இருக்கும். எனவே ஒரு வீட்டில் தற்காலிகமாக வந்து தங்கியுள்ளவர்கள் அந்த வீட்டில் கணக்கெடுக்கப்பட மாட்டார்கள். ஆனால் தன் வீட்டிலிருந்து ஏதோ காரியமாக சில காலம் வெளியில் சென்று வருபவர்கள் அந்த வீட்டு மனிதர்களாகவே கருதப்படுவார்கள். எனவே முதல் முறையைக் காட்டிலும் இதனைச் சற்று எளிதான முறையென்று கூறவேண்டும். நாட்டின் பொருளாதார திட்டங்கள் ஆட்சிமுறை அலுவல்கள் முதலியன

வற்றிற்கு தேவையானது இத்தகைய மக்கள் கணிப்புதான் இதில் பிழைகள் ஏற்படுவதும் அவ்வளவு எளிதன்று. ஒரு கால இடைவெளியில்தான் கணக்கெடுப்பு நடப்பதை கணிப்பாளர்களை (முதல் முறையில் போல்) வெகு அதிகமாக நியமிக்க வேண்டிய தில்லை.




மற்றுமொரு பிரச்சினையும் எழுகிறது. சென்ஸஸ் தகவல்களை நேரே தருவதற்கு யார் பொறுப்பாளியாக வேண்டும் என்பதே வீட்டின் தலைவனையே பொறுப்பாளியாகக் கருதி (தலைவன் என்பது தலைவியையும் குறிக்கும்) அவனிடமிருந்து தகவல்களை திரட்டுவது வீட்டுடமையாளர் முறை (Householder method) எனப்படும். ஐரோப்பிய நாடுகளில் பொதுவாக இந்த முறை அமுலில் இருக்கிறது எனலாம்.

நம் நாட்டிலும் கனடா அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் சென்ஸஸ் கணிப்பாளர்கள் நியமிக்கப்பட்டு கணக்கெடுப்பு அத்தகையவர்களின் பொறுப்பாகக் கருதப்பட்டு வருகிறது. இதற்கு ஆதரவு தேடுபவர் முறை (Canvassar method) என்று பெயர் இம் முறையில் கணிப்பவர்கள் செவ்வனே வேலை செய்தாலன்றி திட்பமான தகவல்கள் கிடைக்காது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இந்த முறையில் கணிப்பாளர்கள் சிறப்பாக வேலை செய்வது இல்லை என்பதனை ஒத்துக் கொள்ளவே செய்கிறார்கள். நம் நாட்டின் நடை முறையை பிறகு விளக்குவோம்.

பொதுவாகக் கூறின் இந்த எல்லா முறைகளிலுமே குற்றங் குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. தகவல்களைத் தரும் தனி மனிதன் அவன் குடும்பத் தலைவனாக இருந்தாலும் சரி அல்லது கணிப்பாளனாக இருந்தாலும் சரி தனக்கு இடப்பட்ட வேலையின் முக்கியத்துவத்தை நன்குணர்ந்து சென்ஸஸ் கணக்கெடுப்பு தன் தலையாயக் கடமை என்பதையும் அறிந்து செயல்பட்டால்தான் திட்பமான விவரங்கள் திரட்டப்படக்கூடும்.

நம் நாட்டில் முதல் முதலில் 1867-72 ஆண்டுகளிடையே ஒரு மக்கள் தொகை கணிப்பு நடந்ததென்றாலும் முதல் சென்ஸ்ஸ் என்பது 1881ல் தான் தொடங்கப்பட்டதெனலாம். அதற்கு பிறகு ஒவ்வொரு பத்தாண்டிற்கு பிறகும் சென்ஸஸ் தொடர்ந்து எடுத்தார்கள். பற்பல விவரங்களை நாடு முழுவதும் சேகரிக்க வேண்டியிருப்பதால் சென்ஸ்ஸ் ஆண்டிற்கு பல ஆண்டுகளுக்கு முன்பே சென்ஸ்ஸ் வேலை தொடங்கிவிடும். அந்த ஆண்டிற்குப் பிறகும் வேலைகள் தொடர்ந்து நடந்து முழுவிவரங்களுக்கு அச்சில் வெளிவர மேலும் பல ஆண்டுகள் செல்லும். உலகிலேயே ஒரு பெரிய விரிவான கணக்கெடுப்பு நம் நாட்டின் சென்ஸஸ்தான் என்று கூறின் மிகையாகாது.

## 2.3 சுதந்திரத்திற்கு முன் :

பத்தாண்டிற்கு ஒரு முறை தற்காலிகமாக சென்ஸஸ் அதிகாரிகள் நியமிக்கப்படுகின்றனர். அந்த வேலைகள் முடிவடைந்தவுடன் அந்த அலுவலகமும் மூடப்பட்டுவிடும். ஒவ்வொரு சென்ஸஸ் நடப்பதற்கு முன்பும் மத்திய அரசாங்கம் ஒரு சென்ஸஸ் சட்டம் இயற்றி நாட்டிற்கு முழுவதும் ஒரு சென்ஸஸ் கமிஷனர் என்ற அதிகாரியையும் ஒவ்வொரு மாகாணத்திலும் சூப்பரின்டெண்டெண்ட் என்ற அதிகாரியையும் நியமிக்கும். இவர்கள் முழுநேர ஊழியர்களாக இருப்பார்கள். இவர்கள் தம் தம் மாகாணங்களில் தனி அலுவல்களை ஏற்படுத்தி அதிகாரிகளை நியமித்து அவர்களுக்குப் பயிற்சி அளித்து சென்ஸஸ் வேலையைச் செவ்வனே செய்ய ஆயத்தம் செய்வார்கள். ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஓர் அதிகாரி அவர் கீழ் ஒவ்வொரு தாலுகாவிலும் ஒரு அதிகாரி அவர்கள் கீழ் கோட்டங்கள் என்ற வட்டங்கள் (Circles) அவர்கள் கீழ் கணக்கெடுப்பவர்கள் (Enumerators) என்று நியமனம் ஆவார்கள். இவர்களில் பெரும்பாலோர் தம் தம் நிரந்தர வேலைகளுக்கிடையேதான் சென்ஸஸ் வேலையையும் கவனிக்க வேண்டியிருக்கும். அப்பொழுது நாட்டில் பிரிட்டிஷ் இந்திய, இந்திய சமஸ்தானங்கள் என்ற பாகுபாடு இருந்ததால் சென்ஸஸ் வேலைகள் இரு பகுதிகளிலும் தனித்தனியேதான் நடக்கும். 1941ம் சென்ஸஸ் வரை நாடு அடிமைப்பட்டிருந்தாலும் அன்னிய அரசாங்கம் ஆண்டு வந்திருந்தாலும் மக்கள் ஒத்துழைப்பு முழுமையாக அரசாங்கத்திற்கு கிடைத்தது என்று கூறமுடியாது. அதுவுமல்லாமல் நம் நாட்டில் அதிகம் பேர்கள் ஒரு குடும்பத்தில் இருக்கிறார்கள் என்று கூறினால் 'கண்பட்டு விடுமோ' என்ற பயமும் இருந்தது. எனவே பழைய சென்ஸஸ் மதிப்பீடுகளை உபயோகிப்பதற்கு முன் இக்குறைகளை மனதில் வைத்திருப்பது

நல்லது. 1881லிருந்து 1941ம் ஆண்டு வரை நம் நாட்டு மக்கள் தொகை விவரங்கள் பட்டியல் ஒன்றில் உள்ளன.

**அட்டவணை 1**

நம் நாட்டின் மக்கள் தொகை மதிப்பீடுகள் 1821-1841

| ஆண்டு | மக்கள் தொகை | 1000 ஆண்டுகளுக்கு பெண்கள் எண்ணிக்கை | சதவிகிதம் | | வித்தியாசம் சதவிகிதம் |
|---|---|---|---|---|---|
| | | | கிராமம் | மக்கள் | |
| 1881 | 2363 லட்சங்கள் | — | — | — | — |
| 1891 | 2359 | — | — | — | - .17 |
| 1901 | 23.62.81,245 | — | — | — | + .17 |
| 1911 | 25.21.22,410 | — | — | | + 5.73 |
| 1921 | 25,13,52,261 | 955 | 88 6 | 11.4 | - 0.31 |
| 1931 | 27,90,25,498 | 950 | 87.8 | 12.1 | + 11.01 |
| 1941 | 31.87,01,012 | 645 | 86.1 | 13.9 | + 14.22 |

எனவே 1921ம் ஆண்டிலிருந்து மக்கள் தொகை வெகு அதிகமாகிக் கொண்டு வருகிறது என்பது தெளிவு. அதற்கு முன்பு சில பத்தாண்டுகளில் குறைந்தும் சிலவற்றில் அதிகமாயும்' இருந்து வந்தது. பத்தாண்டு அளவில் வித்தியாசம் அவ்வளவாக இருந்தது என்று கூறமுடியாது 1901லிருந்து 1921 வரை இருபது லட்சமே வித்தியாசம். ஆனால் 1921 லிருந்து 1931 க்குள் 208 லட்சம் அதிகமாகிவிட்டது. 1921 லிருந்து தொடங்கிய இந்த மிகையான அதிகரிப்பு இன்றுவரை (1971) தொடர்க்து வந்துள்ளது! 1941-ம் ஆண்டில்தான் முதலில் சென்ஸஸ் கணக்குகளுக்கு இயந்திர வழி அட்டவணையிடும் முறை (Mechanical Tabulation) பயன்படுத்தப் பட்டது. ஆனால் முழுவதுமாக அல்ல. மற்றும் மாதிரி முறையை பின்பற்றி (அதாவது 2% மாதிரி எடுத்து) சென்ஸஸ் மதிப்பீட்டை சரிபார்க்கும் முறையும் 1941ல் தான் கையாளப்பட்டது.

## 2. 4. சுதந்திரத்திற்கு பிறகு :

1951ம் சென்ஸஸ் சுதந்திர இந்தியாவின் முதல் மக்கள் தொகை கணிப்பாகும். இந்தக் கணிப்பில் பற்பல மாற்றங்கள் செய்யப்பட்டன. பொருளாதார அடிப்படையில் விரிவான பல கேள்விகள் சென்ஸஸ் வினாத்தாளில் (Shedule or Question) இடம் பெற்றன. 1948ல் ஒரு சென்ஸஸ் சட்டம் இயற்றப்பட்டது இதனால் 10 ஆண்டுகளுக்கொரு முறை தனியே சட்டம் இயற்ற வேண்டிய நிர்ப்பந்தம் நீக்கப்பட்டது. சென்ஸஸ் அதிகாரிகளுக்குத் தவறில்லாத விவரங்கள் தருவதே ஒவ்வொரு குடி

மகனின் 'பொறுப்பு ஆகும். அப்படி தவறு நேர்ந்தாலோ அல்லது கேள்விகளுக்கு பதில் அளிக்க மறுத்தாலோ அவனைத் தண்டிக்கவும் இச்சட்டம் இடம் கொடுக்கிறது. மற்றும் சென்ஸஸிற்காகத் தரப்பட்ட விவரங்கள் வைத்துக் கொண்டு மற்ற எந்த சட்டத் தின் கீழும் அந்த நபரின் மேல் வழக்குப் போடக் கூடாது என்றும் சென்ஸஸ் விவரங்களை கோர்ட்டுகளில் தாக்கல் செய்யக்கூடாது என்றும் இச்சட்டத்தில் விதிகள் உள்ளன. எனவே எந்த குடிமகனும் பயமில்லாமல் சென்ஸஸ் அதிகாரிகளிடம் உண்மை யான விவரங்களைத்தான் கூறவேண்டும்; இது அவனது கடமை என்பதையும் உணர வேண்டும்.

1941ம் ஆண்டிலிருந்துதான் சட்டப்படி ஆதரவு தேடுபவர் முறை செயலாக்கப்பட்டது என்பதனை முன்பே குறிப்பிட்டோம். கணக்கெடுப்பு நடக்கும் குறிப்பிட்ட கால இடைவெளி 8-2-41 லிருந்து 28-2-41 வரையான மூன்று வாரங்கள். கணக்கெடுப்பை சரிபார்க்க மார்ச் 1ம் தேதியிலிருந்து 3ந் தேதி வரை வேலை. சென்ஸஸ் மதிப்பீடுகள் மார்ச் 1ம் தேதியையொட்டியதாக வெளியிடப்பட்டன. வேறு பல மாற்றங்களும் செய்யப்பட்டன. இவற்றைப் பற்றி விவரங்கள் இன்று (1975ல் அவ்வளவு அவசியமில்லை.)

1948ல் ஒரு சென்ஸஸ் ஆக்ட் என்ற சட்டம் இயற்றப்பட்டு அடிக்கடி சட்டம் இயற்றவேண்டிய வேலை நிறுத்தப்பட்டது. அதனால் கணிப்பு வேலைகளை தொடர்ந்து செய்வது சாத்திய மாகிறது. முன்பெல்லாம் இந்தியாவின் சென்ஸஸை 'பத்தாண்-டுக்கொருமுறை வந்து பலர் கவனிக்காமல் சென்று மறையும் ஒரு வால் நட்சத்திரம் என்று கூறுவது வழக்கம். 1951ம் ஆண்டி லிருந்து 'சென்ஸஸ் கமிஷனர் மற்றும் ரிஜிஸ்ட்ரார் ஜனரல் ஆஃப் இந்தியா என்ற ஒரு புது பதவி ஏற்படுத்தப்பட்டது. இவர் சென்ஸஸ் காலத்தில் சென்ஸஸ் கமிஷனராகவும் மற்ற நேரங் களில் ரிஜிஸ்டரார் ஜனரலாகவும் வேலை பார்ப்பார். அதாவது இந்த வேலை நிரந்தர வேலையாகக் கருதப்பட்டது. 'தேசீய குடி மக்கள் பதிவேடு (National Register of citizens) என்ற ஒரு புதிய பதிவேடும் இந்த சென்ஸஸ் காரணமாகத் தொடங்கப்பட்டது. ஒவ்வொரு கிராமத்திற்கு ஊரிற்கும் தனித்தனியே இது தயாரிக்கப் பட்டு தலைமை அலுவலகங்களில் வைக்கப்பட்டிருக்கும் இந்த பதி வேட்டினை யாவரும் பார்த்துவிட முடியாது. ஆனால் ஆராய்ச்சி யாளர்க்கு உத்தரவின் பேரில் இது கிடைக்க ஏற்பாடுகள் உண்டு. வாக்காளர் பட்டியல் தயாரிக்க இது பயன்படும். இந்த பதி

வேட்டினை கோர்ட்டுகளில் சாட்சிக்காக எடுத்து வரவும் முடியாது. பிறப்பு இறப்புகள் இந்த பதிவேட்டில் பதிவாக வேண்டும். முக்கிய மாக குடியிருப்பிடம் என்பதற்கு (House). குடும்பம் (Household) என்பதற்கும வித்தியாசம் ஏற்படுத்தப்பட்டது. இந்த 1951ம் கணிப்பில்தான், ஒரு தனியான பொதுவாசல் உடைய பகுதிக்கு ''குடியிருப்பிடம்'' என்றும் குடும்பம் என்றால் ஒரே சமையலறையி லிருந்து உணவு உட்கொள்பவர்கள் என்றும் வரையறுக்கப்பட்டது. சட்டப்படியுள்ள தாழ்த்தப்பட்ட சாதி (Scheduled Caste) தாழ்த் தப்பட்ட ஆதிவாசிகளைத் (Scheduled tribes) தவிர மற்ற ஜனங் களின் சாதி வித்தியாசங்களின் குறிப்புகள் விலக்கப்பட்டன. விவாகரத்து பெற்றவர்களின் விவரங்கள் அகதிகளைப் பற்றிய விவரங்கள் மற்றும் பொருளாதார அமைப்பு வேலையமைப்பு பற்றிய விவரங்களில் மாற்றங்கள் இந்தக் கணிப்பில் ஏற்படுத்தப் பட்டன 1961ம் மக்கள் தொகை கணிப்பு நடக்குமுன்-நாட்டின் மாநிலங்கள் ஒன்றியப் பகுதிகள் (Union territories) முதலிய வற்றின் எல்லைகளைச் சரிவர கவனித்து மாநிலங்களை சிறிய பகுதி களாக பிரித்து கணிப்பாளர் வட்டம் (enumeration block) வரை பாகுபடுத்தும் வேலை நடந்தது. சென்னை மாநிலம் தமிழ்நாடு ஆந்திராவாக 1953ல் பிரிக்கப்பட்டது. சுதந்திர நாடுகள் போன்ற பிரெஞ்சு பகுதிகள் மேற்கு வங்காளத்துடன் இணைக்கப்பட்டன. பம்பாய் மாகாணம் மஹாராஷ்ட்ரம் குஜராத் என்ற இரு மாநிலங் களாக 1960ல் பிரிக்கப்பட்டது. இவைகளே அல்லாது 1956ம் ஆண்டு மாநில மறு அமைப்பு சட்டத்தின் படியும் (States Reorganisation Act) பற்பல மாற்றங்கள் மாநில எல்லைகளில் ஏற்பட்டி ருந்தனவாதலால் முழுவதும் எல்லைகளை நிர்ணயித்து பாகுபடுத்த வேண்டிய நிலை இந்த சென்ஸஸில் ஏற்பட்டது. நாட்டை மொத்த மாக 80,000 விட்டங்களாகப் பிரித்தார்கள். 10,000 மக்களுக்கு மேல் ஜனத்தொகையுள்ள பகுதிகள் ஊரானாலும் நகரமானாலும் தனிப்பகுதியாக கருதப்பட்டது. ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு சென்ஸஸ் அதிகாரி பொறுப்பாக்கப்பட்டார். மிலிடரி பகுதிகள் செரிதான ரயில்வே காலனிகள் முதலானவைகளும் தனிப்பகுதி களாக கணக்கெடுக்கப்பட்டன. ஒவ்வொரு வட்டத்திலும் ஒரு ''வீடுகள் அட்டவணை (House list) தயாரிக்கப்பட்டது. ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு தனி ''குறி எண்'' (code number) குறிக்கப் பட்டது. உதாரணம் :- 18/4/22(2)/3(2) இங்கு 18 என்பது ஜில்லாவின் குறி எண் 4-என்பது அந்த ஜில்லாவிலுள்ள தெகஸீலின் குறி எண் (code) 22 என்பது தாலுக்காவிலுள்ள அந்த கிராமத்தின் குறி எண்; (2) என்பது ஒரு பகுதியின் குறி எண்; 3(2) என்பது குறிப்பிட்ட நபரின் வீட்டு எண். அதில் மூன்று குடும்பங்கள் வசித்து வந்தால் அவைகளை முறையே 3(2)-A

3(2) B, 3(2)-C என்று குறிப்பிட வேண்டும். இந்த விவரங்களைத் திரட்டி அட்டவணை தயாரிப்பது முதல் வேலையாயிற்று. இரண்டாவது குடும்ப வினாத்தாள் (Household Schedule) என்பதி லுள்ள விவரங்களைத் திரட்டுதல் இதில் இடம் பெற்ற விவரங்கள் (i) அந்த குடும்பம் தங்கும் விடுதி அல்லது மருத்துவமனை, சிறைச் சாலை மதச் சார்புள்ள நிறுவனம் அல்லது மடம், தற்காலிக வசிப் பிடம் முதலிய கூட்டு அமைப்பா அல்லது சாதாரண தனிக் குடும்பமா (ii) தனி குடும்பமானால் தாழ்ந்தப்பட்ட ஜாதி (Schedule caste) அல்லது பழங்குடி மக்களைக் (Schedule Tribes) கொண்டதா (iii) குடும்பத்தினர் கொண்டிருந்த வேலைகள் விவசாயமா குடும்ப தொழிற்சாலையா, தொழில் செய்பவரா என்ற விவரங்கள் (iv) குடும்பத் தலைவனின் விவரங்கள் முதலியன இடம் பெற்றிருந்தன. மூன்றாவதாக தனி மனிதனுக்கான பட்டியல் (Individual slips) உள்ளது. இதில் பற்பல தகவலுள்ளன. இவைகளைப் பற்றிய விவரங்கள் 1791 சென்ஸஸ் பற்றிக் கூறும்பொழுது கொடுக்கப் படும்.

இவைகளன்றி நாட்டின் திட்டங்களினால் மக்களுக்கு ஏற் பட்டுள்ள வித்தியாசங்கள் முதலியன அளவிட்டு பின்னாட்களில் ஒப்பிட உதவுமாறும் பற்பல விசாரணை (Survey) களும் மேற் கொள்ளப்பட்டன. இவைகளில் முக்கியமானவை (i) தொழில் நுட்ப துறையிலும் அறிவியல் துறையிலும் வல்லுநர்கள் பட்டியல் (Survey of scientific and technical personal) இந்த கணக் கெடுப்பு (CSIR) நிறுவனத்தினர் உதவியைக் கொண்டு தனியான வினாத்தாள் மூலம் நடத்தப்பட்டது. சுமார் 2,50,000 நபர்களி லிருந்து தகவல்கள் (அவர்களாலேயே குறிப்பிடப்பட்டு) திரட்டப் பட்டன. (ii) ராண்டம் முறையில் 800 கிராமங்கள் தேர்ந் தெடுக்கப்பட்டு அவைகளில் சமூக பொருளாதார விசாரணையென்ற விசாரணையொன்று நடத்தப்பட்டது. (iii) கைத்தொழில்களைப் பற்றி விவரங்கள் அடங்கிய தனி வரைவு நூல் (monograph) என்றும் வெளியிடப்பட்டது. (iv) இனபரப்பு விளக்கவியல் (Ethnograph) விசாரணை நாட்டின் தாழ்த்தப்பட்ட ஜாதியினரை பழங்குடி மக்களைப் பற்றியத் தகவல்களை திரட்டி நாட்டின் நிலைமையை பற்றிய பற்பல வரைபடங்கள் (v) பண்டிகை கள் சந்தைகள் முதலியனவற்றைப் பற்றிய விசாரணை முதலியன.

சாதாரணமாக மக்கள் அவரவர்கள் வாழும் இடத்திலேயே கணக்கெடுக்கப்பட்டார்கள். சிலர் கணிப்பு காலமான (enumer- ration period) 10-28 பிப்ரவரி முழுவதும் வீட்டை விட்டு வேறு இடம் சென்றிருக்கக்கூடும்; அத்தகையோரை கணிப்பாளர் முதன்

முதலில் அவரை எங்கு சந்தித்தாரோ அதே இடத்தில் கணக்கெடுக்கப்பட்டனர். வீடே இல்லாதார் அவர்கள் பிப்ரவரி 28ம் நாளிரவு எங்கு தங்கினார்களோ அந்த இடத்தில் பதிவு செய்யப்பட்டனர்.

முழு கணக்கெடுப்பு முடிந்த பிறகு கணிப்புக்கு பின் தணிக்கை (Post enumeration check) மார்ச் 22ம் தேதியளவில் செய்தார்கள். அத்தணிக்கையின் பிரகாரம் கணக்கெடுப்பு சுமார் 6லிருந்து 8 வரை (சதவிகிதம்) குறைவாக இருக்கக்கூடும் என்று எதிர்பார்க்கப்பட்டது (under estimation).

2.5. 1961 ம் கணக்கெடுப்பின் சில விவரங்கள் :-

(அ) மொத்த ஜனத்தொகை : ஆண்கள் 226,293,620
பெண்கள் 212,941,462
மொத்தம் 439,235,082

| | ஆண் | பெண் | மொத்தம் |
|---|---|---|---|
| (ஆ) கிராமங்களில் வசிப்பவர்கள் | 183,251,655 | 176,520,510 | 359,772,165 |
| நகர்ப்பகுதிகளில் வசிப்பவர்கள் | 42,739,012 | 36,096,927 | 78,835,939 |

(இ) எழுத படிக்கத்தெரிந்தோர் ஆண்கள் 77,828,163
பெண்கள் 27,508,118

| | | | |
|---|---|---|---|
| (ஈ) வேளாண்மை செய்பவர் | 99.5 | மிலியன் | (52.8 சதவிகிதம்) |
| விவசாயத் தொழிலாளிகள் | 31.5 | ,, | (16.7 ,, ) |
| மற்ற தொழிலாளிகள் | 57.6 | ,, | (30.5 ,, ) |
| மொத்த வேலை செய்பவர் | 188.6 | ,, | (100.0 ,, ) |

(உ) இன விதம் : மொத்தம் 941; கிராமப் புறங்களில் 968; நகர்ப் புறங்களில் 845

(ஊ) ஜனநெருக்கம் : ச. மைலுக்கு 370 பேர்

## பயிற்சி கணக்கு

1) ஆயுள் அட்டவணையில் கீழ்கண்ட சார்பலன்களை வரையறை செய்க.—$l_x$, $d_x$, $q_x$, $L_x$ $\overset{\circ}{e}_x$. அத்தகைய அட்டவணையை அமைப்பது எப்படி என்பதனை விளக்குக. (செப். '74)

2) இறப்பு விசை என்றால் என்ன? (செப். '74)

3) $p_{33}$=.98, $\overset{\circ}{e}_{33}$ 35.5, என்றால் $\overset{\circ}{e}_{34}$ எவ்வளவு?

4) 73 வயதில் இறப்பவர்களின் எண்ணிக்கை 469; 73;74 வயதில் முழுமையான எதிர்பார்க்கும் ஆயுள் முறையே 3·9, 3·6 என்றால், $l_{74}$ எவ்வளவு?

5) குறைக்கப்பட்ட எதிர்பார்க்கும் ஆயுள் 60, 61 வயதுகளில் 13·28, 12·69 ஆண்டுகள். 60 வயதில் இறப்பவர்களின் எண்ணிக்கை என்ன? 61 வயதுவரை, உயிருடன் இருப்பவர்கள் 5053 என்று வைத்துக்கொள்.

6) 50-வயதுள்ளவர்கள் ஓராண்டு காலத்திற்குள் இறப்பதற்கான ஊக அளவை q. A, B, C என்ற மூன்று நபர்களும் 50 வயதானவர்கள் அவர்களில் அடுத்த ஆண்டில் A-முதன் முதலில் இறப்பதற்கான ஊக அளவை என்ன?

7) A, B, C என்ற மூவரின் வயது முறையே 90, 91, 92. கீழ்கண்ட யூக அளவைகளை, பட்டியலுள்ள விவரங்களிலிருந்து கண்டுபிடி—( ) இன்னம் இரண்டாண்டுகளுக்கு மூவரும் வாழ்ந்திருப்பார்கள் (ii) இரண்டாண்டுகளில் மூவரும் இறந்து விட்டிருப்பார்கள் (iii) இரண்டாண்டுகளில் ஒருவர் மட்டுமாவது வாழ்ந்துக் கொண்டிருப்பார்.

| வயது | 90 | 91 | 92 | 93 | 94 | 95 |
|---|---|---|---|---|---|---|
| $l_x$ | 16090 | 11490 | 8012 | 5448 | 3607 | 2320 |

8) 50, 51 வயதுகளில் எதிர்பார்க்கும் ஆயுள்காலம் முறையே 20·7, 20·0, 50-வயதில் 5000 நபர்கள் வாழ்ந்திருந்தால், அவர்களில் எவ்வளவு நபர்கள் 51-வயது அடைவதற்குள் இறந்து விடுவார்கள்?

9) கீழ்கண்ட விவரங்களிலிருந்து—(அ) 82 வயதில் இறப்பு விசை (ஆ) 84-வயதில் எதிர்பார்க்கும் ஆயுள் (இ) 86 வயதில்

குறைக்கப்பட்ட எதிர்பார்க்கும் ஆயுள் (ஈ) 84-க்கும் அதற்கு மேலும் வயதுள்ளவர்களின் சராசரி இறப்பு வீதம் (2) 88-வயதில் மத்திய இறப்பு வீதம் :

வயது 80, 81, 82, 83, 84, 85, 86, 87, 88, 89, 90, 91, 92, 93

$d_x$ 330, 283, 238, 195, 152 114, 80, 53, 33, 19, 10, 4. 2, 1.

10) கீழ்கண்ட இறப்புப் பட்டியல்களை பூர்த்தி செய்க :—

(க)

| x | $l_x$ | $d_x$ | $q^x$ | $p^x$ | $L_x$ | $T_x$ | $\mathring{e}_x$ |
|---|---|---|---|---|---|---|---|
| 9 | 93832 | 1293 | ? | ? | ? | 3699301 | ? |
| 10 | ? | 1210 | — | — | — | ? | ? |

(ஆ)

| x | $l_x$ | $d_x$ | $q^x$ | $p_x$ | $L_x$ | $T^x$ | $e_x$ |
|---|---|---|---|---|---|---|---|
| 20 | 693435 | ? | ? | ? | ? | 35081126 | ? |
| 21 | 690673 | — | — | — | — | — | ? |

(இ)

| x | $l_x$ | $d_x$ | $1000q_x$ | $L^x$ | $T^x$ | $e_x$ |
|---|---|---|---|---|---|---|
| 10 | 93,102 | — | .62 | | | |
| 11 | | | ·66 | | | |
| 12 | | | ·72 | | | |
| 13 | | | ·80 | | | |
| 14 | | | ·90 | | | |
| 15 | | | 1·00 | | | |
| 16 | | | 1·12 | | | |
| 17 | | | 1·23 | | | |
| 18 | | | 1·33 | | | |
| 19 | | | 1·40 | | 4,842,446 | |

(ஈ)

| x | lx | dx | px | qx | Lx | Tx |
|---|---|---|---|---|---|---|
| 30 | 762227 | ? | ? | ? | ? | 27296732 |
| 31 | 758580 | | — | — | — | ? |

(11) 55, 56 வயதுள்ளவர்களின் எதிர்பார்க்கும் ஆயுள் முறையே 11·65 மற்றும் 11.28 ஆண்டுகள். 52-வயதுள்ளவர்கள் எண்ணிக்கை 16313 என்றால், 56 வயதினை எட்டாமல் எவ்வளவு நபர்கள் இறந்து விடுவார்கள் என்று கண்டுபிடி.

12. இறப்புப் பட்டியலின் ஒருபகுதி கீழே தரப்பட்டுள்ளது. அதிலிருந்து 30-, 60-ஆண்டுகளுக்கான எதிர்பார்க்கும் ஆயுளை கண்டுபிடி. 75 வயதிற்கும் மேல் உள்ளவர்களின் எண்ணிக்கை 1162.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| x | 40 | 45 | 50 | 55 | 60 | 65 | 70 | 75 |
| $l_x$ | 3812 | 3466 | 3058 | 2616 | 2138 | 1638 | 1098 | 510 |

(மார்ச் '75)

13. ஆயுள் அட்டவணையின் மற்ற சார்பலன்களை கண்டு பிடி :

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வயது: | 20, | 21 | 22 | 23 | 24 | 25 | 26 |
| $l_x$ | 87245, | 86969, | 86686, | 86400, | 86111, | 85824 | 85541 |
| வயது: | 27 | 28 | 29 | 30 | | | |
| $l_x$ | 85261, | 84981, | 84700, | 84416 | | | |

14. இறப்புப் பட்டியலின் ஒரு பகுதி கீழே உள்ளது.

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| x | 80, | 81, | 82 | 83, | 84, | 85, | 86, | 87, | 88. | 89, | 90 |
| lx | 3213, | 2614, | 2098, | 1660, | 1294, | 993, | 749, | 554, | 402 | 285. | 198 |

கீழ்கண்டவைகளை கண்டுபிடி:-

(a) 82 வயதுடையவர் 88 வயது வரை வாழ்வதற்கான ஊக அளவை.

(b) 86 வயதுடையவர் இன்னமும் 3 ஆண்டுகள் வாழ்வதற்கான ஊக அளவை.

(c) 84 வயதுடையவர் இன்னமும் 4 ஆண்டுகளில் இறப்பதற்கான ஊக அளவை.

(d) 83 வயதுடையவர் இன்றிலிருந்து 4 ஆவது ஆண்டில் இறப்பதற்கான ஊக அளவை.

(e) 85 வயதுடையவரின் இறப்பு விசை

(f) 81 வயதுடையவரின் நிகழக்கூடிய வாழ்க்கை காலம்.

15. கீழ்கண்ட விவரங்களிலிருந்து பட்டிலைப் பூர்த்தி செய்க. பிறகு 15-வயதுள்ள ஒருவர் இன்னமும் 5 ஆண்டுகள் வாழ்வதற்கான யூக அளவைக் கண்டு பிடி.

| வயது: | 15, | 16, | 17, | 18, | 19, | 20, | 21, | 22 |
|---|---|---|---|---|---|---|---|---|
| $100q_x$ | ·497 | ·505 | ·512 | ·520 | ·527, | ·533, | .546 | ·564 |

$l_{15} = 73858$, $T_{22} = 2519376$. (ஏப். 74)

16. 55, 70, 85 வயதுள்ளவர்களுக்கான எதிர்பார்க்கும் ஆயுளைக் கண்டுபிடி.

| x | 0 | 50 | 55 | 60 | 65 | 70 | 75 | 80 | 85 | 90 | 95 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| $l_x$ | 10000 | 3329 | 2522 | 1978 | 1512 | 1082 | 776 | 528 | 206 | 63 | 0 |

(ஏப். 74)

17. 85 வயது நிரம்பிய ஒரு நபரின் எதிர்பார்ப்பு ஆயுளை கண்டு பிடி.

| x | 85 | 86 | 87 | 88 | 89 | 90 | 91 | 92 | 93 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| dx | 114 | 80 | 53 | 33 | 19 | 10 | 4 | 2 | 1 |
| lx | 316 | 202 | 129 | 69 | 36 | 17 | 7 | 3 | 1 |

18. கீழ்காணும் விவரங்களிலிருந்து ஒரு ஆயுள் அட்டவணையை அமைக்கவும்.

| x | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| $100q_x$ | 1·27 | 1·32 | 1·37 | 1·42 | 1·47 | 1·53 | 1.59 | 1.66 | 1·74 | 1·83 | 1.93 |

அதிலிருந்து 20 வயது நிரம்பிய ஒருவர் தமது 30 ஆவது வயதில் இறப்பதற்கான நிகழ் திறனைக் கணக்கிடு.

19. தொடக்கத்தில் (86 வயதில்) :10,000 மக்கள் வாழ்ந்திருப்பார்கள் என்று கருதி, இறப்புப் பட்டியலை பூர்த்தி செய்க.

| x | 86 | 87 | 88 | 89 | 90 |
|---|---|---|---|---|---|
| $m_x$ | ·26704 | ·27748 | ·29953 | ·32124 | ·35421 |

20. கீழுள்ளது இங்கிலாந்து நாட்டின் இறப்புப் பட்டியலின் ஒரு பகுதி. பட்டியலைப் பூர்த்தி செய்க.

| x | 80 | 81 | 82 | 83 | 84 | 85 | 86 | 87 | 88 | 89 | 90 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| $l_x$ | 5629 | 4871 | 4182 | 3560 | 2999 | 2494 | 2042 | 1640 | 1286 | 978 | 717 |

*21.* அமெரிக்கா நாட்டில் வெள்ளையர்களி(பெண்கள்)ன் ஆயுள் பட்டியலின் ஒரு பகுதி கீழே உள்ளது. பட்டியலைப் பூர்த்தி செய்க.

| x வயது | $nq_x$ | |
|---|---|---|
| | | $l_0$ = 100,000 |
| 0—5 | ·0196 | |
| 1—5 | ·0034 | |
| 5—10 | ·0019 | $T_x$ (20–25க்கு = 5,460,667. |
| 10—15 | .0016 | |
| 20—25 | ·0025 | |

*22.* ஐந்தாண்டுகளுக்கு முன்பு மூவரின் வயது முறையே 31, 48, 69 ஆக இருந்தது. 98 நபர்கள் பிறந்தார்கள் என்று வைத்துக்கொண்டு ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொருவர் மரணமடைகிறார் என்று கருதினால், கீழ்கண்ட ஊக அளவைகளைக் : கண்டுபிடி,

1. இப்பொழுது ஐவரும் ஜீவித்துள்ளனர்.
2. இப்பொழுது ஒருவரும் ஜீவிக்கவில்லை.
3. ஒருவர் மட்டும் இப்பொழுது ஜீவித்துள்ளார்.
4. இருவர் ஜீவித்தும், ஒருவர் இறந்தும் உள்ளனர்.

*23.* P, Q, R, என்ற மூவர் 96 வயதுள்ளவர்கள்; அவர்கள் ஒவ்வொருவரும் அடுத்த ஆண்டுக்குள் சாவதற்கு ஊக அளவைகளை பட்டியலில் காணலாம்.

| வயது | 96 | 97 | 98 | 99 |
|---|---|---|---|---|
| ஊக அளவை | 1/2 | 2/3 | 3/4 | 1 |

அவர்கள் P, Q, R, என்ற முறையிலேயே சாகவேண்டும்; வெவ்வேறு வயதுகளிலும் சாகவேண்டும்; என்பதன் ஊக அளவினைக் கண்டுபிடி.

*24.* $l_{39}$ = 722284, $d_{35}$ = 4633, $d_{36}$ = 4864, $d_{37}$ = 5091, $d_{38}$ = 5319. என்றால் $\mu_{37}$ என்பதை இரு வழிகளில் கண்டுபிடித்து

அந்த மதிப்புகளிடையே இருக்கும் வித்தியாசம் சுமாராக $3 \times 10^{-7}$ என்றுகாட்டு.

## விடைகள்

(3) 35·2 (4) 2278 (5) 156 (6) $\frac{1}{8}[1-(1-q)^8]$

(7) (i) ·1063 (ii) ·1452 (iii) ·8548 (8) 73

(9) $l_x$ - மதிப்புகள் இல்லை; எனவே, $d^x$-களை கூட்டி $l_{80}$=1514 என்று கணக்கிடவேண்டும் (அ) ·2887 (ஆ) 2·152 (இ) 1·2624

(ஈ) $\frac{1}{2\cdot152}$ = ·4647 (உ) ·629

| | x | lx | $d_x$ | $q_x$ | $p_x$ | $L_x$ | $T_x$ | $e_x$ |
|---|---|---|---|---|---|---|---|---|
| (10) (க) | 9 | 93832 | 1293 | ·01378 | ·98622 | 93185·5 | 3699301·0 | 39·42 |
| | 10 | 92533 | 1210 | — | — | — | 3606115·5 | 38·97 |
| (ங) | 20 | 693435 | 2762 | ·00398 | ·99602 | 692054 | 35081126 | 50·59 |
| | 21 | 690673 | — | — | — | | 34399072 | 49·79 |

| | x | $l_x$ | $d_x$ | $p_x$ | $q_x$ | $L_x$ | $T_x$ |
|---|---|---|---|---|---|---|---|
| (ஞ) | 30 | 762227 | 3647 | ·995 | ·005· | 760404 | 27296732 |
| | 31 | 758580 | — | — | — | | 26536328 |

(11) 873

(13)

| $d_x$ | $p_x$ | $q_x$ | $\mu_x$ | $L_x$ | $T_x$ | $m_x$ | $e_x$ | $e_x$ |
|---|---|---|---|---|---|---|---|---|
| 276 | ·9967 | ·0033 | ·003214 | 87107·0 | 858303·5 | ·003004 | 9·840 | 9·540 |
| 283 | ·9968 | ·0032 | ·003382 | 86827·5 | 771196·5 | ·003205 | 8·867 | 8·367 |
| 286 | ·9965 | ·0035 | ·003328 | 86543 | 684369 | ·003505 | 8·889 | 8·389 |
| 289 | ·9968 | ·0032 | ·003321 | 86255·5 | 597626 | ·003205 | 6·916 | 6·416 |
| 287 | ·9965 | ·0035 | ·003291 | 86967·5 | 511573·5 | ·003505 | 5·940 | 5·440 |
| 283 | ·9968 | ·0032 | ·003284 | 86682·5 | 425603 | ·003205 | 4·960 | 4·460 |
| 280 | ·9965 | ·0035 | ·003301 | 85401 | 339920·5 | ·003505 | 3.974 | 3·474 |
| 280 | ·9968 | ·0032 | ·003344 | 85121 | 254519.5 | ·003205 | 2.985 | 2·485 |
| 281 | ·9965 | ·0035 | ·003301 | 84840·5 | 169398·5 | ·003505 | 1.696 | 1·196 |
| 284 | ·9968 | ·0032 | ·003335 | 84558 | 84558 | ·003205 | 0.998 | 0·498 |

(14) (a) ·1916 (b) .381 (c) ·69 (d) 117 (e) ·27442 முதல் தோராயம்; இரண்டாம் தோராயம் = ·27308 (f) $l_{83}$·784=1307

(17) 1.948 ஆண்டுகள்,

| (18) x | lx | $d_x$ | $L_x$ | $T_x$ | $\mathring{e}_x$ |
|---|---|---|---|---|---|
| 20 | 10,000 | 127.0 | 9936 | 93198 | 9.320 |
| 21 | 9873 | 130.3 | 9808 | 83262 | 8.433 |
| 22 | 9743 | 133.4 | 9676 | 73454 | 7.533 |
| 23 | 9610 | 136.4 | 9542 | 63778 | 6.637 |
| 24 | 9474 | 139.1 | 9404 | 54236 | 5.725 |
| 25 | 9335 | 142.8 | 9263 | 44832 | 4.802 |
| 26 | 9192 | 146.1 | 9119 | 35569 | 3.869 |
| 27 | 9046 | 150.1 | 8971 | 26450 | 2.923 |
| 28 | 8896 | 154.8 | 8818 | 17479 | 1.965 |
| 29 | 8741 | 159.9 | 8661 | 8661 | 0·991 |
| 30 | 8581 | 165.6 | — | — | — |

நிகழ்திறன்=.016

| (19) x | $m_x$ | $q_x$ | $p_x$ | $l_x$ | $d_x$ | $\mu_x$ | $L_x$ | $T_x$ | $\mathring{e}_x$ |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 86 | .26704 | .2312 | ·7688 | 10,000 | 2312 | — | 8844 | 24361 | 2.7 |
| 87 | .27748 | .2436 | ·7564 | 5815 | 1873 | .27218 | 6752 | 15517 | 2.3 |
| 88 | .29953 | .2605 | ·7395 | 4300 | 1515 | .29132 | 5058 | 8765 | 1.7 |
| 89 | .32124 | .2767 | ·7233 | 3110 | 1190 | .31453 | 3705 | 3707 | 1.5 |
| 90 | .35421 | .3009 | ·6991 | — | — | — | — | — | — |

| (20) x | $d_x$ | $p_x$ | $q_x$ | $L_x$ | $T_x$ | $e_x$ |
|---|---|---|---|---|---|---|
| 80 | 758 | .8653 | .1347 | 5250 | 27724.5 | 4.3 |
| 81 | 689 | .8585 | .1415 | 4527 | 21975 | 4.0 |
| 82 | 622 | .8510 | .1490 | 3871 | 17448.5 | 3.7 |
| 83 | 561 | .8424 | .1576 | 3280 | 13577.5 | 3.3 |
| 84 | 505 | .8316 | .1684 | 2747 | 10298.0 | 2.9 |
| 85 | 452 | .8147 | .1853 | 2268 | 7351.5 | 2.5 |
| 86 | 402 | .8030 | .1969 | 1841 | 5283.5 | 2.1 |
| 87 | 354 | .7841 | .2159 | 1463 | 3442.5 | 1.5 |
| 88 | 308 | .7604 | .2396 | 1132 | 1979.5 | 1.0 |
| 89 | 261 | .7331 | .2669 | 848 | 847.5 | 0.4 |
| 90 | — | — | — | — | — | — |

| (21) வயது | lx | $_nd_x$ | $_nL_x$ | $T_x$ | $\overset{\circ}{e}_x$ |
|---|---|---|---|---|---|
| 0—1 | 100,000 | 1964 | 98246 | 7,411,812 | 74.1 |
| 1—5 | 98,036 | 329 | 391,347 | 7,313,566 | 74.6 |
| 5—10 | 97 707 | 186 | 488,033 | 6,922,219 | 70 8 |
| 10—15 | 97 521 | 151 | 487,242 | 6,434,186 | 66 0 |
| 15—20 | 97 370 | 242 | 486,277 | 5,946,944 | 61.1 |
| 20—25 | 97 128 | — | — | 5,460,667 | 56.2 |

(22) x வயதானவர் ஐந்தாண்டுகளில் சாவதற்கு ஊக அளவை $= \frac{5}{98-x}$. எனவே,

(1) $\frac{62}{67} \cdot \frac{45}{50} \cdot \frac{24}{29}$ (2) $\frac{5}{67} \cdot \frac{5}{50} \cdot \frac{5}{29}$.

(3) $\frac{62}{67} \cdot \frac{5}{50} \cdot \frac{5}{29} + \frac{5}{67} \cdot \frac{5}{50} \cdot \frac{24}{29} + \frac{5}{67} \cdot \frac{45}{50} \cdot \frac{5}{29}$

(4) விடை—(1)—(2)—(3).

23) (i) P (96), Q (97), R (98 அல்லது பிறகு) = சாவதற்கு ஊக அளவை $= \frac{1}{2} \cdot (1-\frac{1}{2}) \frac{2}{3} \cdot (1-\frac{1}{2}) (1-\frac{2}{3}) \cdot 1 = \frac{1}{36}$

(ii) P (96), Q (98), R, (99)—சாவதற்கான ஊக அளவை
$= \frac{1}{2}(1-\frac{1}{2}) (1-\frac{2}{3}) \frac{3}{4} (1-\frac{1}{2}) (1-\frac{2}{3}) (1-\frac{3}{4}) \cdot 1 = \frac{1}{384}$

(iii) P (97), Q (98), R (99)—சாவதற்கான ஊக அளவை
$= (1-\frac{1}{2}) \frac{2}{3} \cdot (1-\frac{1}{2}) (1-\frac{2}{3}) \frac{3}{4} \cdot (1-\frac{1}{2}) (1-\frac{2}{3}) (1-\frac{3}{4}) \cdot 1 = \frac{1}{576}$

இவை மூன்றையும் கூட்டினல் விடை 37/1152 என்று வரும்.

# 4. குறியீட்டெண்கள்

## 4.1. பொதுப்படையான விவரங்கள்

சாதாரணமாக, இரு பொருள்களின் விலைகளை இரு குறிப்பிட்ட கால அளவுகளில் ஒப்பிட்டுக் கூறலாம். அரிசியின் விலை 1973-ல் 1972-ஐ விட இருமடங்கு உயர்ந்தது என்று கூற லாம். அதேபோல் நெல் விளைச்சல் 1971-ல் 100 ஆக இருந்தது என்று கொண்டால் 1973-ல் 125ஆக, அதாவது கால்பங்கு கூடு தலாக இருந்தது என்று கூறலாம். இங்கு நாம் கவனிக்க வேண்டியது யாதெனில், ஒரு குறிப்பிட்ட காலத்திலிருந்து மற்று மொரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒப்பிடுகிறோம் என்பது. முதல் காலத்தை அடிப்படைக் காலம் (Base period) என்றும், இரண்டாம் காலத்தை 'நடப்புக் காலம்' (Current period) என்றும்கூறுவோம். அடிப்படைக் காலத்தின் விலை $p_0$, நடப்பு $p_1$ கால விலை ஆனால் $p_1/p_0$ என்பது விலை விகிதம் ஆகிறது. இந்த விகிதத்தை 100 ஆல் பெருக்கினால் விகிதம் சதவீதம் கிடைக்கிறது. பழக் கத்தில் நாம் பற்பல பொருள்களை உபயோகிக்கிறோம். நம் ஒப் பிடுதலில் சில பொருள்களின் விலை கூடியும் சிலவற்றின் விலை குறைந்தும் இருக்கலாம். மொத்தமாக நோக்கின் விலைகளின் மட்டம் (price level) எப்படி மாறியுள்ளது என்று தெரிந்தால் பல விதங்களில் பயன் பெறலாம். எனவே, அத்தகைய ஒரு வாய்பாட்டைத் தருவதே குறியீட்டெண்களின் நோக்கம்.

மேற்கண்ட எடுத்துக்காட்டு விலைகளைப் பற்றியே இருப் பினும், ஏனைய துறைகளிலும் இத்தகைய கருத்துகள் பயன் படும். விளைச்சல் குறியீட்டெண்கள், இறக்குமதி - ஏற்றுமதிக் குறியீட்டெண்கள், துய்ப்போர் விலைக் குறியீட்டெண்கள், தொழில் லாபக் குறியீட்டெண்கள் முதலியவை வழக்கத்திலுள்ள மற்றக் குறியீட்டெண்கள். குறியீட்டெண்கள் பயன்படாத பொருளாதாரத் துறைகளே இல்லை என்று துணியலாம். குறியீட் டெண்களை எவ்வாறு கணக்கிடுவது, அதன் பயன்கள் யாவை என்பனவற்றை விளக்குவதே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும்.

ஆக, பல தொடர்புள்ள மாறிகளிடையே உள்ள வேற்று மையின் அளவினை (magnitude) காட்டும் அளவுகோல்களாகக்

பயன்படுபவைகள் குறியீட்டெண்களே. இந்த வேற்றுமைகள் பொருள்களின் விலைகளாகவோ, பொருள்களின் மொத்த அளவு களாகவோ, அல்லது 'அலகு', 'உற்பத்தித் திறன்' (Productivity) போன்றவைகளாகவோகூட இருக்கலாம். ஒப்பிடுதல் இரு கால இடைவெளியாகவும் இருக்கலாம்; அல்லது இரு வேறு ஊர்கள், நாடுகள், நபர்கள் கூட்டங்களாகவும் இருக்கலாம்.

பற்பல மாறிகளை ஒன்றுசேர்த்து ஒரு வகையான சரா சரியைக் கணக்கிடுவதே குறியீட்டெண்களின் நோக்கமாகும். பற்பல பொருள்களின் விலை மொத்தமாக 1955-ல் 100 என்று வைத்துக் கொண்டால், அவைகளின் விலைகள் முறையே 1956, 1957...1960 ஆண்டுகளில் எவ்வாறு இருந்திருக்கின்றன? கீழ்க்காணும் அட்டவணையை ஓர் எடுத்துக்காட்டாகக் கொள்ள லாம்.

அட்டவணை - 1

ஒரு பொருளின் விலைகள் 1955—1960

| ஆண்டு | விலை (ரூ.) | ஒப்புமை விலை |
|---|---|---|
| 1955 | 3·50 | 100·0 |
| 1956 | 3·75 | 107·1 |
| 1957 | 4·25 | 121·4 |
| 1958 | 4.00 | 114·4 |
| 1959 | 4·50 | 128·6 |
| 1960 | 4·25 | 121·4 |

குறிப்பிட்ட பொருளின் விலை 1957ஆம் ஆண்டுவரை ஏறிக் கொண்டே போயுள்ளது; 1958-ல் குறைந்துள்ளது: ஆனால் 1959-ல் மறுபடியும் ஏறியுள்ளது. ஒப்புமை விலையை 1955ஆம் ஆண்டில் இந்தப் பொருளின் விலை ரூ. 100 என்று வைத்துக் கொண்டு அந்த அடிப்படையில் மற்ற ஆண்டுகளில் விலை என்ன வென்று கண்டுபிடித்துள்ளோம்.

இந்த எடுத்துக்காட்டு ஒரேஒரு பொருளின் விலையைப் பற்றியதுதான். பற்பல பொருள்களின் விலைகளையும் ஒன்றுக்கிச் சராசரி கணித்தால் குறியீட்டெண் கிடைக்கும்.

## 4.2. முதற்கண் கவனிக்கவேண்டிய சில பிரச்சினைகள்

(1) எந்த நோக்குடன் குறியீட்டெண்களைக் கணிக்கிறோம் ?

(2) எந்தெந்தத் தொடர்களை (விலை முதலியன) பயன்படுத்த வேண்டும் ?

(3) எந்தெந்த மூலத்திலிருந்து விவரங்களைச் சேகரிக்க வேண்டும் ?

(4) விவரங்களை எவ்வாறு சேகரிப்பது ?

(5) அவைகளை எவ்வாறு ஒன்றுக்குவது ?

(6) நிறையிடும் முறைகள் யாவை ?

(7) எதை அடிப்படை ஆண்டாகக் கொள்வது ?

**முதலியவை குறியீட்டெண்களைக் கணிப்பதற்குமுன் நாம் கவனிக்கவேண்டிய அம்சங்கள்.**

சரியான நோக்குடன் திருத்தமாகக் கணிக்கப்பட்டால் மாத்திரமே குறியீட்டெண்கள் செவ்வையான பயன் தரும்; அப்படி இல்லாவிடில் அவை தாறுமாருன பயனையே தரும். நாம் குடும்பத்தின் செலவுகளைப்பற்றிய குறியீட்டெண்களைக் கணிக்கும் பொழுது,நெல் மொத்த விலைகளைக் கவனிக்கக் கூடாது; அரிசியின் சில்லறை விலைகளே நமக்குத் தேவைப்படுபவை. மொத்த விலைக் குறியீட்டெண்களைக் கணிக்கும்பொழுது நாம் சிறப்பு அங்காடியிலிருந்து விலைப்பட்டியலை பெறக்கூடாது. எனவே, நம் அடிப்படை நோக்கம் என்ன என்பதைத் திட்டவட்டமாக வரையறுத்துக் கொள்ளவேண்டும். நோக்கம் தெளிவாக்கபட்டபின் எந்தெந்த தொடர்களைப் பயன்படுத்த வேண்டும் என்பதும் தெரிந்துவிடும். வாழ்க்கைத் தரத்தை மதிப்பிடும்போது எந்தப் பகுதி மக்களை நாம் மனத்தில் கொண்டுள்ளோம் என்பது திட்டமாகத் தெரிய வேண்டும்– விவசாயிகளா, நடுத்தர வகுப்பினரா, தொழிலாளிகளா என்பது. நடுத்தர வகுப்பினர் என்று வைத்துக்கொண்டால், அவர்களின் வாழ்க்கைத் தரத்தை அளவிட அவர்களின் சம்பள விகிதங்கள், அவர்களின் செலவுப் பட்டியல்கள் முதலியன தேவைப்படும். அரசாங்க ஊழியர்கள், தொழிற்சாலையில் வேலை பார்க்கும் எழுத்தர்கள் முதலியவர்கள், பள்ளி ஆசிரியர்கள் இவர்களிடையேதான் நாம் விவரங்களைத் திரட்டவேண்டும்.

பொருள்களின் விலைகளைத் திரட்டும்பொழுது, சுமாராக ஒரே தேதியில் விலைகளை குறித்துக்கொள்வது பயனுள்ளதாகும். சில பொருள்களின் விலைகளை 1ஆம் தேதியும் சிலவற்றை 20ஆம் தேதியும் திரட்டக்கூடாது. விலைகளைத் திருத்தமாகக் கணித்தல் அவசியம். விற்பனை வரியைக் கூட்டவேண்டுமா, வேண்டாமா என்பதனைத் தெளிவாக்கிக் கொள்ளவேண்டும். சில கடைகளில் விற்பனை வரியைப் பொருள் வாங்கிய பிறகே கூட்டி பில் போடுவார்கள்; சிலர் விலையைக் கூறும்பொழுதே வரியையும் சேர்த்துச் சொல்வதுண்டு. எனவே, நாம் திரட்டும் விவரங்கள் ஒப்பிடக் கூடியனவாக இருக்க வேண்டுமானால் அவைகள் ஒரே சீராக இருத்தல் அவசியமாகிறது. தனிப்பட்ட ஒவ்வொரு குறியீட்டெண்ணையும் கணக்கிடுங்கால் இந்த விவரங்களை மேலும் திட்டவட்டமாகக் கூறலாம்.

விவரங்களை எவ்வாறு சேகரிப்பது என்பதிலும் மெத்தக் கவனம் செலுத்துதல் அவசியமாகிறது. ஒரு மொத்த விலை குறியீட்டெண் கணக்கிடுகிறோம் என்று கொள்வோம். அரிசியின் மொத்த விலைகளை எந்தெந்த அங்காடியிலிருந்து திரட்ட வேண்டும்? தஞ்சாவூரில் சில அரிசி மண்டிகளோ, மில்களோ இருக்கலாம். அவைகளிலிருந்து திரட்டுவது நல்லதுதான். ஆனால், நெல் விலையைப் பொறுத்து அரிசியின் விலையும் இருக்குமாதலால் வெவ்வேறு வகை அரிசிகளின் விலைகள் கிடைக்கும். எதனைத் திரட்டுவது, எதனை விடுவது? தஞ்சையில் பயிராகும் நெல் வகையும், செங்கல்பட்டு அல்லது கன்னியாகுமரியில் பயிராகும் நெல் வகையும் வித்தியாசப்படலாம். அப்போது நாம் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகள் என்ன? மற்றும், நாட்டில் முக்கிய அங்காடிகள் சுமார் 150 இருக்குமானால், எல்லா இடங்களிலும் சென்று புள்ளி விவரங்களைச் சேகரிப்பது சிரமமாக இருக்கலாம். அப்பொழுது, அவைகளில் சிலவற்றை மட்டும் மாதிரி முறைகளில் தேர்ந்தெடுக்கலாம். அவ்வாறே பயிராகும் பற்பல நெல் வகைகளில் சிலவற்றை மட்டுமே கையாள வேண்டியிருக்கும்.

அடிப்படை ஆண்டினை எவ்வாறு திருத்தமாக அமைப்பது என்பதனை நோக்குவோம். எடுத்துக்காட்டாக, ஓர் ஆண்டில் நாட்டில் வறட்சி அதிகமாக இருக்கலாம்; மற்றுமோர் ஆண்டில் அதிகப்படியாக மழை பெய்திருக்கலாம். இவ்விரண்டு ஆண்டுகளும், வழக்கமான அல்லது சாதாரணமான ஆண்டுகள் இல்லை. ஒன்றில் வறட்சி; மற்றொன்றில் சுபிட்சம். இத்தகைய சிறப்பு அம்சங்கள் எதுவும் இல்லாத ஆண்டுதான் நமக்கு அடிப்படை

ஆண்டாகக் கருதத் தேவைப்படுகிறது. உள்நாட்டுக் கலகமோ, வெளிநாட்டுடன் போரோ நடந்த காலம், வறட்சி, அதிக மழை, பூகம்பம் முதலியவை நேர்ந்த காலங்கள்; விலைகள் திடீரென்று ஏறிய அல்லது இறங்கிய காலம் இவை போன்றவற்றைத் தவிர்க்க வேண்டும். நாம் எந்தக் குறியீட்டெண்களைக் கணிக்கிறோமோ, அதன் தன்மைக்குத் தகுந்ததாக அந்த அடிப்படை ஆண்டு ஒரு சாதாரணமான (normal) காலமாக இருத்தல் மிக அவசியம். நாம் 1975-ல் ஒரு விலைக் குறியீட்டெண்ணைக் கணிக்கிறோம் என்றால் அடிப்படை ஆண்டு 1960-70 ஆண்டுகளில் ஏதாவது ஒன்றாக இருக்கலாம். அத்தகைய ஆண்டு நாம் கணக்கிடும் ஆண்டிலிருந்து மிகவும் பழமையானதாக இருந்தால் நல்லதன்று. 1975-ஐ 1955-யுடன் ஒப்பிடுதல் அவ்வளவு சரியாக அமையாது. மற்றும், 1975-ல் குறியீட்டெண் கணக்கிடத் தொடங்கினால் குறைந்தது ஐந்து ஆண்டுகளுக்காவது அதே அடிப்படை இருத்தல் அவசியமாகிறது. எனவே, சுமாராக 1980 வரையில் அது இருக்குமென்றால், அடிப்படை ஆண்டு 1960-65-க்குள் அமைவதே சாலச் சிறந்ததாகும். தற்காலத்தில் நாட்டிலுள்ள பற்பல குறியீட்டெண்கள் மிகப் பழைய அடிப்படை ஆண்டுகளைக் கொண்டதாக உள்ளன. இவைகளும் திருத்தப்பட வேண்டியவைகளே.

ஒரு குடும்பத்திற்குத் தேவையான பொருள்கள் பற்பலவாகும். ஆனால், அவையெல்லாம் சமமான முக்கியத்துவம் பெற்றவை என்று கூற முடியாது. நம் நாட்டில் அரிசிச் சோறு சாப்பிடுபவர்களே அதிகம். எனவே அரிசியின் விலையில், படிக்கு 20 பைசா கூடினாலும், எல்லோரும் அதிகமாகப் பாதிக்கப்படுவார்கள். அதே 20 பைசா சர்க்கரையின் விலையில் கூடினால் (ஒரு கிலோவிற்கு) கீழ்த்தர வகுப்பு மக்களும், நடுத்தர வகுப்பு மக்களும் அதிகமாகப் பாதிக்கப்படமாட்டார்கள். ஏனென்றால் அவர்களுக்குத் தேவையான சர்க்கரையின் அளவு சிறியதுதான்—மாதத்திற்கு 2-3 கிலோதான்; ஆனால், அரிசி மாதத்திற்கு 20—50 கிலோ தேவைப்படலாம். ஆக, குறியீட்டெண்களைக் கணக்கிடும்பொழுது இந்த முக்கியத்துவ வேறுபாடுகளையும் நாம் மறக்கலாகாது. எனவே, ஒவ்வொரு பொருளுக்கும் அதன் முக்கியத்துவத்தைக் கொண்டு 'நிறைகளை' (weights) பொருத்துதல் அவசியமாகிறது. இந்த நிறைகளை எவ்வாறு கணக்கிடுவது என்பதும் ஒரு பிரச்சினை. இதனை விரிவாக ஒவ்வொரு குறியீட்டெண்ணையும்பற்றிக் கூறுங்கால் விளக்குவோம். தற்சமயம், அந்த நிறைகளை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்பதனை மட்டும் ஆராய்வோம். இந்தப் பிரச்சினை நாம் குறியீட்டெண்ணிற்குப் பயன்படுத்தும்

வாய்பாட்டைப் பொறுத்தும் இருக்குமாதலால், அவைகளையும் சேர்த்துப் பார்க்கலாம்.

## 4.3. பற்பல வாய்பாடுகள் — குறிமானமுறை (Notation)

நமக்கு இப்பொழுது தேவைப்படுவது ஒரு நல்ல குறிமான (Notation) முறை. விலைகளைக் குறிக்க p என்ற எழுத்தையும், அவைகளின் அளவைக் குறிக்க q என்ற எழுத்தையும், குறியீட்டெண்ணுக்கு i என்ற எழுத்தையும் பயன்படுத்துவோம்.

i என்ற பொருளின் விலை $p_i$ ஆகும்; அளவு $q_i$ ஆகும். அடிப்படை ஆண்டை q என்ற ஒட்டுக் குறியாலும் (Subscript), நடப்பு ஆண்டை k என்ற ஒட்டுக் குறியாலும் அழைக்கலாம். எனவே,

அடிப்படை ஆண்டு

பொருள்களின் விலைகள் : $p_{01}, p_{02}, p_{03}, p_{04}, ..p_{0i}, ...p_{0n}$

பொருள்களின் அளவுகள் : $q_{01}, q_{02}, q_{03}, q_{04}, ..q_{0i}, ..q_{0n}$

நடப்பு ஆண்டு

விலைகள் : $p_{k1}, p_{k2}, p_{k3}, ..., p_{ki}, ...p_{kn}$

அளவுகள் : $q_{k1}, q_{k2}, q_{k3}, ..., q_{ki}, ...q_{kn}$

குறியீட்டெண் : $I_{ok}$

$\frac{p_{ki}}{p_o}$ = இது i என்ற பொருளின் விலைச் சார்பி (Price relative) அல்லது இணைப்புச் சார்பி

$\frac{q_{ki}}{q_{oi}}$ = இது i என்ற பொருளின் அளவுச் சார்பி

## 4.4. சாதாரணக் குறியீட்டெண்கள்

இவைகள் நிறையிடப்படாத குறியீட்டெண்கள்.

சாதாரணக் கூட்டுச் சராசரி விலைக் குறியீடு $= \frac{100}{n} \sum_{i=1}^{n} \left( \frac{p_{ki}}{p_{oi}} \right)$ ... (1)

சாதாரணக் கூட்டுச் சராசரி அளவுக் குறியீடு $= \frac{100}{n} \sum_{i=1}^{n} \left( \frac{p_{ki}}{p_{oi}} \right)$ .. (2)

$$\left.\begin{array}{r}\text{சாதாரணப் பெருக்கல் சராசரி}\\ \text{விலைக் குறியீடு}\end{array}\right\} = 100\left[\prod_{i=1}^{n}\left(\frac{p_{ki}}{p_{oi}}\right)\right]^{1/n} \ldots \quad (3)$$

$$\left.\begin{array}{r}\text{சாதாரண ஹார்மானிக் சராசரி}\\ \text{விலைக் குறியீடு}\end{array}\right\} = 100\, n/\Sigma\left(\frac{p_{oi}}{p_k}\right) \quad \ldots \quad (4)$$

$$\text{சாதாரண மொத்த விலைக் குறியீடு} = 100 \times \frac{\Sigma p_{ki}}{\Sigma p_{oi}} \quad \ldots \quad (5)$$

இவ்வாறே (2) வாய்பாட்டில் குறிப்பிட்டதுபோல் அளவுக் குறியீடுகளையும் நிறுவலாம்.

இவையல்லாது, இடைநிலை அல்லது முகடு என்ற மையநிலைப் போக்கு அளவைகளையும் பயன்படுத்தலாம். ஆனால், அவ்வாறு அமைக்கப்பட்ட குறியீட்டெண்கள் அவ்வளவு பயன்தரா. அத்தகைய குறியீட்டெண்களும் வழக்கத்தில் இல்லை என்றே கூறலாம்.

மேற்கண்ட பல வாய்பாடுகளில் (1), (3), (5)தான் சற்றேனும் பயன்தரக் கூடியவை. இவைகளை அறிதலும், விளக்குதலும் எளிது. (5) வாய்பாட்டை நோக்குவோம். இதின் பகுதி எண், எல்லா விலைகளின் மொத்தம் (நடப்பு ஆண்டில்). விகுதியும் அதேபோல் விலை மொத்தம்—அடிப்படை ஆண்டில் இத்தகைய வாய்பாட்டை உபயோகிப்பதற்கு முன்பு, விலைகளை எல்லாம் ஒரே ஒட்டு மொத்தமாகக் கூட்டுவது சரியா என்பதையும் ஆராயவேண்டும். அரிசி, பருப்பு, எண்ணெய் முதலிய விலைகள் இலோவிற்கு இவ்வளவு என்று இருக்கலாம். இதனுடன் மண்ணெண்ணெயின் விலையையோ, பெருங்காயத்தின் விலையையோ கூட்டுவது சரியாகாதல்லவா! எனவே, இந்த வாய்பாடும் அவ்வளவு சிறந்ததன்று. (1)ஐக் கவனிப்போம். ஓர் எடுத்துக் காட்டு, அரிசி விலை இரண்டு பங்காகவும் மண்ணெண்ணெயின் விலை நான்கு பங்காகவும் ஏறியுள்ளது—o ஆண்டிலிருந்து k ஆண்டிற்குள் என்று கொள்வோம். அப்பொழுது குறியீட்டெண் $= 100\ \dfrac{(2+4)}{2} = 300$ ஆகிறது. இதனால் தெரிய வருவது என்னவென்றால். விலைகள் மூன்றுபடி ஏறியுள்ளன என்பதுதான்; இது நடப்புச் சங்கதியைச் சரிவர எடுத்துக் கூறுவது ஆகாது என்பது தெளிவு ஏனென்றால் அரிசியின் முக்கியத்துவம் வேறு, மண்ணெண்ணெயின் முகக்கியத்துவம் வேறு. எனவே இரண்டிற்கும் சம நிறை அளிப்பது சரியில்லை.

## 4.5. நிறையிடப்பட்ட குறியீட்டெண்கள்

நிறையிட்ட கூட்டுச் சராசரிக்கான வாய்பாடு = $\frac{\Sigma w_i x_i}{\Sigma w_i}$ என்பது தெரிந்ததே. இங்கு $w_i$ என்பன நிறைகள்; $x_i$ என்பது ஒரு மாறி.

நிறைகளை எவ்வாறு நிறுவுவது? இவைகள் நிலைத்தவையாகவும் இருக்கலாம்; அல்லது மாறுபவை (changing) ஆகவும் இருக்கலாம். ஒரு பொருள் எவ்வளவு 'அளவு' பயனாகிறது என்பதனை மனத்தில் கொண்டு நிறைகளை அமைக்கலாம். உணவுப் பொருள்கள் ஒரு குடும்பத்தின் வருமானத்தில் 60 சதவிகிதமாக இருக்கலாம்; வாடகை 20 சதவிகிதமாகலாம். எனவே இந்தச் சதவிகிதங்களையே நிறைகளாகக் கொள்ளலாம். அப்பொழுது நமக்கு நிலைத்த நிறைக் குறியீட்டெண்கள் (fixed weight index numbers) கிடைக்கும்.

அதற்கான வாய்பாடு $I_{ok} = \frac{\Sigma w_i \left(\frac{p_{ki}}{p_{oi}}\right)}{\Sigma w_i} \times 100$ ... (6)

இங்கு $w_i$ என்பதனை $p_{oi}\, q_{xi}$ என்று வைத்துக்கொண்டால்,

குறியீட்டெண் $I_{ox} = \frac{\Sigma p_{ki}\, q_{xi}}{\Sigma p_{oi}\, q_{xi}} \times 100$ ... 6(a)

$q_{xi}$ என்பவை ஒரு பொருளின் பல ஆண்டுகளில் வியாபாரம் செய்யப்பட்ட அளவுகளின் சராசரியாகும்.

வேறொரு முறையையும் கையாளலாம். ஒவ்வொரு பொருளின் முக்கியத்துவமும் அது எவ்வளவு விற்பனையாகிறது என்பதனைப் பொறுத்திருக்கலாம். எனவே, அத்தகைய மதிப்புகளைக் கொண்டு நிறைகளை அமைக்கலாம். மதிப்பு $v_i = p_i q_i$ எனவே, நடப்பு ஆண்டு மதிப்பு (1) $v_{ki} = p_{ki}\, q_{ki}$ ; (2) அடிப்படை ஆண்டு மதிப்பு $v_{oi} = p_{oi}\, q_{oi}$ அல்லது விலை மதிப்புகளை வேறு இரு முறைகளிலும் அமைக்கலாம்; (3) $v_1 = p_{ki}\, q_{oi}$ = நடப்பு ஆண்டின் விலைகளில், அடிப்படை ஆண்டின் அளவுகளே பயன்பட்டால் கிடைக்கும் மதிப்பாகும்; (4) $v_2 = p_{oi}\, q_{ki}$ = நடப்பு ஆண்டின் அளவுகளுடன், அடிப்படை ஆண்டின் விலைகளைத் தொடர்படுத்திக் கிடைக்கும் மதிப்பாகும். இந்த நான்கு மதிப்புகளையும் கொண்டு முதலிலேயே கணக்கிடப்பட்ட விலைச் சார்பிகளைப் பயன்படுத்தி நிறையிட்ட குறியீட்டெண்களைக் கணிக்கலாம்.

(a) லாஸ்பெய்ரேயின் (Laspeyre) : குறியீட்டெண் $L = \frac{\Sigma p_{ki}\, q_{oi}}{\Sigma p_{oi}\, q_{oi}} \times 100$ ... (7)

இதனைக் கணக்கிட வழி

$$I = \frac{\Sigma (p_{ki} / p_{oi}) v_{oi}}{\Sigma v_{oi}} \times 100 = 100 \times \frac{\Sigma \left( \frac{p_{ki}}{p_{oi}} p_{oi}\, q_{oi} \right)}{\Sigma p_{oi}\, q_{oi}}$$

$$= \frac{\Sigma p_{ki}\, q_{oi}}{\Sigma p_{oi}\, q_{oi}} \times 100$$

(b) பாஸ்சேயின் (Paasche) குறியீட்டெண் : $P = \frac{\Sigma p_{ki} q_{ki}}{\Sigma p_{oi} q_{ki}}$ ...(8)

இங்கு $P = \frac{\Sigma \left( \frac{p_{xi}}{p_{oi}} \right)^{v_2}}{\Sigma v_2} \times 100 = \frac{\Sigma \left( \frac{p_{ki}}{q_{oi}} \right) (p_{oi}\, q_{ki}) \times 100}{\Sigma p_{oi}\, q_{ki}}$

$= \frac{\Sigma p_{ki} q_{ki}}{\Sigma q_{oi} q_{ki}} \times 100$ என்பது விளக்கம்.

மற்ற நிறைகளைப் பயன்படுத்தினால், மேலும் சில குறியீட்டெண்கள் கிடைக்கும். உதாரணமாக,

$$\text{(i)} \quad \frac{\Sigma \left( \frac{p_{ki}}{p_{oi}} \right) V_1}{\Sigma V_i} = \frac{\Sigma \left( \frac{p_{ki}}{p_{oi}} \right) (p_{ki}\, q_{oi})}{\Sigma p_{ki}\, q_{oi}}$$

$$\text{(ii)} \quad \frac{\Sigma \left( \frac{p_{ki}}{p_{oi}} \right) V_{ki}}{\Sigma V_{ki}} = \frac{\Sigma \left( \frac{p_{ki}}{p_{oi}} \right) (p_{ki}\, q_{ki})}{\Sigma p_{ki}\, q_{ki}}$$ என்பன.

இவைகளை மேலும் எளிதாக்குவது சாத்தியமில்லை. மேற்கூறிய இரண்டு குறியீட்டெண்களே (7) & (8) அதிகம் பழக்கத்தில் உள்ளவை.

இங்கு நாம் பயன்படுத்தியுள்ள சராசரி, கூட்டுச் சராசரிதான். மற்றச் சராசரிகளையும் பயன்படுத்தலாமென்றால் வாய்பாடுகள் மிகுந்த சிக்கலாக அமைந்துவிடும். அவைகளைக் கணக்கிடுவதும் விளக்குவதும் எளிதன்று. மேலும், அப்படிக் கணக்கிட்டாலும் மேலும் திருத்தமான அல்லது புதியதான வாய்பாடுதான் கிடைக்குமென்று கூறுவதற்கில்லை.

உதாரணமாக, $V_{ki}$ என்ற நிறைகளையும் ஹார்மோனிக் சராசரியையும் பயன்படுத்துவோம். குறியீட்டெண் $I_{ok}$

$$I_{ok} = 100 \cdot \frac{\Sigma V_{ki}}{\Sigma(P_{oi}/P_{ki})V_{ki}} = 100. \frac{\Sigma p_{ki}\ q_{ki}}{\Sigma p_{oi}\ q_{ki}} \quad \text{இதுதான்} \quad \ldots (8)$$

என்பது வெளிப்படை.

சாதாரணமாக, $\underline{x}^{l}$ என்ற தொடர் ஒன்றின் கூட்டுச் சராசரி அதே தொடரின் பெருக்கல் சராசரியைவிடக் கூடுதலாக இருக்கும். எனவே, கூட்டு சராசரிக்கு ஒரு மேல் நோக்கக்கூடிய ஒருபுற சாய்வு (Bias) இருக்குமென்றும், பெருக்கல் சராசரிக்குக் கீழ் நோக்கும் ஒருபுற சாய்வு இருக்குமென்றும் கூறுவது வழக்கம். எனவே, L, P வாய்பாடு முறைகளுக்கு (7), (8), ஒருபுறச் சாய்வு உள்ளது என்று கூறவேண்டும். மற்றும், வாய்பாட்டு அமைப்பு நோக்கினால், L வாய்பாட்டில் $q_{ki}$ என்ற அளவைகளும், P வாய்பாட்டில், $q_{oi}$ என்ற அளவைகளும் இடம் பெறவில்லை என்று தெரியவரும். விவரங்களைச் சேகரிப்பது மிகுந்த கடினம் என்று முன்பே கூறியிருக்கிறோம். அவ்வாறு சேகரித்த விவரங்களில் நான்கில் ஒரு பங்கினைக் கணக்கிடாமல் விடுவதும் நல்லதன்று!

இந்த இரண்டு காரணங்களையும் ஒட்டி, இர்விங் ஃபிஷர் (Irving Fisher) என்பவர் ஒரு 'விழுமிய குறியீட்டெண்' கணக்கிட்டார். அது $I_{ok}$ என்றால்,

$$I_{ok} = \sqrt{L.\ P} = 100 \times \sqrt{\left(\frac{\Sigma p_{ki}\ q_{oi}}{\Sigma p_{oi}\ q_{oi}}\right)\left(\frac{\Sigma p_{ki}\ q_{ki}}{\Sigma p_{oi}\ q_{ki}}\right)} \quad \ldots (9)$$

இங்கு, முதலில் கூட்டுச் சராசரியும், பிறகு பெருக்கல் சராசரியும் பயன்படுத்தப்பட்டுள்ளன. எனவே சார்புகள் ஒன்றையொன்று தவிர்க்கும்.

இவைகளன்றி மற்றும் சில குறியீட்டெண்களும் வழக்கத்தில் உள்ளன. அவை:

மார்ஷல்-எட்ஜ்வர்த்தின் (Marshall-Edgeworth) வாய்பாடு $\Big\}$ $$MB = 100 \times \frac{\Sigma q_{ki}\ (q_{oi} + q_{ki})}{\Sigma p_{oi}\ (q_{oi} + q_{ki})} \quad \ldots (10)$$

இந்த வாய்பாடுகூட நாம் திரட்டிய எல்லா வகைத் தகவல்களையும் பயன்படுத்துகிறது என்பது வெளிப்படை. இங்கு, இரு காலங்களிலுள்ள அளவுகளின் கூட்டுச் சராசரி $\left(\frac{q_{oi}+q_{ki}}{2}\right)$ என்ற காரணி பகுதி, விகுதி இரண்டிலும் இடம் பெற்றிருக்கிறது.

அப்படியல்லாமல் அவைகளின் பெருக்கல் சராசரியை $\left(\sqrt{q_{oi}\ q_{ki}}\right)$ பயன்படுத்தினால் நமக்கு மற்றுமொரு வாய்பாடு கிடைக்கும். இதனை வால்ஷ் (Walsh) என்பவர் கண்டுபிடித்தார். இது

$$W = \frac{\Sigma'\sqrt{q_o\ q_{ki}}\ .\ p_{ki}'}{\Sigma\sqrt{q_o\ q_{ki}}\ .\ p_{oi}} \times 100 \qquad \ldots \quad (11)$$

இதற்கும் ஃபிஷரின் விழுமிய குறியீட்டெண்ணிற்கும் உள்ள ஒற்றுமை என்னவென்றால், இரண்டுமே கூட்டுச் சராசரி, பெருக்கல் சராசரி இரண்டையும் உட்கொண்டுள்ளன. எனவே, வாய்பாட்டு பிழையைப் (Formula Error) பொறுத்தவரை இரண்டும் சமம் எனலாம்.

இவைகளைக் கணக்கிடுதலை ஓர் உதாரணம் கொண்டு விளக்கலாம்.

உதாரணம் 1

கீழ்காணும் விவரங்களிலிருந்து, ஏனைய குறியீட்டெண்களைக் கணக்கிடு:

| பொருள்கள் i | அடிப்படை விலைகள் | ஆண்டு அளவுகள் | நடப்பு விலைகள் | ஆண்டு அளவுகள் |
|---|---|---|---|---|
| | $p_{oi}$ | $q_{oi}$ | $p_{ki}$ | $q_{ki}$ |
| 1 | 6 | 50 | 10 | 56 |
| 2 | 2 | 100 | 2 | 120 |
| 3 | 4 | 60 | 6 | 60 |
| 4 | 10 | 30 | 12 | 24 |
| 5 | 8 | 40 | 12 | 26 |
| 6 | 10 | 50 | 10 | 50 |

தேவைப்படும் கணக்குகள் அடுத்த பட்டியலில் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன.

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பொருள்கள் | $p_{oi}\ q_{oi}$ | $p_{oi}\ q_{ki}$ | $(q_o + q_k)$ | $p_o(q_o + q_i)$ | $p_{ki}(q_{ki}+q_{oi})$ | $p_{ki} q_{oi}$ | $p_k . q_{ki}$ | $\sqrt{q_o q_k}\ p_o$ | $p_k \sqrt{q_o q_k}$ | $\sqrt{q_o q_{ki}}$ |
| 1 | 300 | 336 | 106 | 636 | 1,060 | 500 | 560 | 317.4 | 529.0 | 52.9 |
| 2 | 200 | 240 | 220 | 440 | 440 | 200 | 240 | 219.0 | 219.0 | 109.5 |
| 3 | 240 | 240 | 120 | 480 | 720 | 360 | 360 | 240.0 | 360.0 | 60.0 |
| 4 | 300 | 240 | 54 | 540 | 648 | 360 | 288 | 268.0 | 321.6 | 26.8 |
| 5 | 320 | 208 | 66 | 528 | 792 | 480 | 312 | 258.4 | 387.6 | 32.3 |
| 6 | 500 | 500 | 100 | 1,000 | 1,000 | 500 | 500 | 500 | 500.0 | 50.5 |

$$L \text{ — வாய்பாடு} = \frac{\Sigma p_{ki}\, q_{oi}}{\Sigma p_{oi}\, q_{oi}} \times 100 = \frac{2400}{1860} \times 100 = 129{\cdot}0$$

$$P \text{ — வாய்பாடு} = \frac{\Sigma p_{ki}\, q_{ki}}{\Sigma p_{oi}\, q} \times 100 = \frac{2260}{1764} \times 100 = 128{\cdot}1$$

ஃபிஷரின் விழுமிய குறியீடு ; $\sqrt{L.P} = \sqrt{129 \cdot 128{\cdot}1} \quad 128{\cdot}6$

$$ME = \text{மார்ஷல்—எட்ஜ்வர்த் வாய்பாடு} = 100 \times \frac{\Sigma p\,(q_o + q_k)}{\Sigma p_o\,(q_{oi} + q_{ki})}$$

$$= \frac{100 \times 4660}{3624} = 128{\cdot}6$$

$$W = \text{வால்ஷின் வாய்பாடு} = 100 \times \frac{\Sigma\sqrt{q_{oi}\, q_{ki}}\, p_{oi}}{\Sigma\sqrt{q_{oi}\, q_{ki}}\, p_{oi}}$$

$$= 100 \times \frac{2317{\cdot}2}{1802{\cdot}8} = 128{\cdot}5$$

அதாவது, ஐந்து வாய்பாடுகளும் தரும் மதிப்பீடுகள் : *129.0, 128.1, 128.6, 128.6, 128.5* என்பவை. இவைகளில் L வாய்பாடு மூலம் வரும் விடை மிக அதிகம்; P வாய்பாடு மிகக் குறைவு. முதல் வாய்பாட்டிற்கு மேல்நோக்கும் சாய்வும் (upward bias), இரண்டாவதற்குக் கீழ்நோக்கும் சாய்வும் இருக்குமென்று முன்பே கூறியுள்ளோம். கடைசி விடையைப் பொறுத்தமட்டில், வாய்பாடு களில் அதிக வித்தியாசம் இருக்காது என்றே கூறலாம். இவை களில் மார்ஷல்-எர்ஜ்வர்த் வாய்பாடே மிக எளிதாகக் கணக்கிடக் கூடியது.

## 4.6. குறியீட்டெண்களுக்கான சோதனைகள்

பொதுவாக, மூன்று சோதனைகளைப்பற்றிக் கூறுவோம். முதலாவது, பொருள்கள் திருப்பு சோதனை (Commodity reversal test); இரண்டாவது, காலத்திருப்பு சோதனை (Time reversal test); மூன்றாவது, காரணி திருப்பு சோதனை (Factor reversal test).

(அ) பொருள்கள் திருப்பு சோதனை : நாம் 1, 2, .. n என்ற பொருள்களை வைத்துக் கணக்கிடுகிறோம். இவைகளின் வரிசை கிரமம் மாறினாலும், குறியீட்டெண் மாறக்கூடாது என்பதே முதல் சோதனை. அதாவது முதல் பொருளை முதலாவதாகக் கணக்கிடாது, பத்தாவதாகக் கணக்கிட்டு, பத்தாவது பொருளை,

நான்காவதாக எடுத்து இவ்வகையில் அவைகளின் வரிசை மாற்றம், குறியீட்டெண்ணைப் பாதிக்கக்கூடாது. குறியீட்டெண் கூட்டுச் சராசரி முறையிலோ, பெருக்கல் சராசரி முறையிலோ கணக்கிடப்பட்டால் இச்சோதனை திருப்திகரமாகவே அமையும் என்பது தெளிவு. ஏனென்றால், பற்பல எண்களை எந்த வரிசையில் கூட்டினாலும், பெருக்கினாலும் ஒரே விடையே கிடைக்கும். எனவே, இச் சோதனை மேற்கூறிய எல்லா வாய்பாடுகளுக்கும் பொருந்தும். ஆனால், இடைநிலையையோ முகடையோ சராசரியாகக் கொண்ட குறியீட்டெண் கணக்கிட்டால், அவைகள் இச் சோதனைக்கு ஒத்துவரா. ஆகவேதான், இந்த இரண்டு மையநிலைப் போக்குகளும் குறியீட்டெண்களைக் கணக்கிடச் சாதாரணமாகப் பயன்படுவதில்லை.

(ஆ) காலத் திருப்பு சோதனை : அடிப்படை ஆண்டினை 0 என்றும் நடப்பு ஆண்டினை k என்றும் குறிப்பிட்டுக் குறியீட்டெண் கணக்கிட்டால் $I_{ok}$ என்று வருகிறது. இக் காலங்களை மாற்றினால், அதாவது—அடிப்படை ஆண்டு k என்றும், நடப்பு ஆண்டு 0 என்றும் வைத்துக் கணக்கிட $I_{ko}$ என்று வரும். $I_{ok} = \frac{10,000}{I_{ko}}$ என்பதே இச் சோதனை; இவ்விரண்டு குறியீட்டெண்களின் பெருக்கல் பலன் $= 10^4$ என்பது. இதன் நோக்கத்தை ஓர் எடுத்துக்காட்டால் விளக்கலாம். 1970 ஆண்டு அடிப்படை என்று கொண்டு, 1973-க்கான குறியீட்டெண் 150 என்று வைத்துக் கொள்வோம்; அதாவது, விலைகள் 50 சதவீதம் ஏறியுள்ளன. இப்பொழுது, காலத்தைத் திருப்பிப் பார்ப்போம்; 1973-ஐ அடிப்படையாக வைத்தால் 1970-க்கான குறியீட்டெண் என்ன ? விலைகள் 1/3 பங்கு இறங்கி இருக்கவேண்டுமல்லவா ? எனவே, 1970-க்கான குறியீட்டெண் $= 66\frac{2}{3}$. இப்பொழுது $150 \times 66\frac{2}{3} = 10,000$; இது சரி. ஒரு குறியீட்டெண் இச் சோதனைக்கு உட்பட்டால் அதனைக் கால வரிசையில் எவ்வாறேனும் (முன்னோடியாகவோ, பின்னோடியாகவோ) பயனாக்க முடியும். இதுதான் இந்தச் சோதனையின் சிறப்பு.

பற்பல குறியீட்டெண்களை இந்தச் சோதனையை வைத்து நோக்குவோம். இனி நாம் குறியீட்டெண்களில் உள்ள ஒட்டுக் குறியான i என்பதனை நீக்கியே எழுதுவோம். அதேபோல், 100 என்ற காரணியையும் விட்டுவிடுவோம். அப்பொழுது

காலத் திருப்பு சோதனை : $I_{ok} \, I_{ko} = 1$ ... (12)

என்று நிற்கும்.

L – வாய்பாடு $I_{ox} = \frac{\Sigma p_x q_o}{\Sigma p_o q_o}$

எனவே, $I_k$ –வை பெருவதற்கு, o, k இரண்டையும் மாற்றி அமைக்க வேண்டும்.

$$I_{ko} = \frac{\Sigma p_o q_k}{\Sigma q_x q_x}$$

$$I_{ok} \cdot I_{k_0} = \frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_o} \cdot \frac{\Sigma p_o q}{\Sigma p_k q_k} \neq 1$$

எனவே, L வாய்பாடு இச் சோதனைக்கு உட்பட்டு வராது. இதேபோல், P வாய்பாடும் உட்படாது.

❖ பிஷரின் விழுமிய குறியீட்டெண்:

$$I_{ok} = \sqrt{\frac{\Sigma p_x q_o}{\Sigma p_o q_o} \cdot \frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_k}}$$

எனவே, $$I_{ko} = \sqrt{\frac{\Sigma p_o q_k}{\Sigma p_k q_k} \cdot \frac{\Sigma p_o q_o}{\Sigma p_k q_o}}$$

ஆக $$I_{ok} \cdot I_{ko} = \sqrt{\left(\frac{\Sigma p_x q_o}{\Sigma p_o q_o} \cdot \frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_k}\right)\left(\frac{\Sigma p_o q_k}{\Sigma p_k q_k} \cdot \frac{\Sigma p_o q_o}{\Sigma p_k q_o}\right)} = 1$$

விழுமிய குறியீட்டெண் இந்த சோதனைக்கு உட்படுகிறது.

மார்ஷல் எட்ஜ்வர்த் வாய்பாடு :

$$I_{ok} = \frac{\Sigma p_k\ (q_o+q_k)}{\Sigma p_o\ (q_o+q_k)} \quad I_{ko} = \frac{\Sigma p_o\ (q_k+q_o)}{\Sigma p_k\ (q_k+q_o)}$$

எனவே $I_{0k} \cdot I_{0k} = 1$ என்று சரி பார்க்கலாம். இதேபோல வால்ஷின் குறியீட்டெண்ணும் இந்த சோதனைக்கு உட்படும்.

எனவே, நாம் குறிப்பிட்ட ஐந்து வாய்பாடுகளில் முதல் இரண்டான $L_1$-P-வாய்பாடுகளுக்கு இந்த சோதனை பொருந்துவதில்லை; மற்ற மூன்றிற்கும் பொருந்துகிறது.

(இ) காரணி-திருப்பு சோதனை: இப்பொழுது மூன்றுவதான, காரணி திருப்பு சோதனையை விளக்குவோம். நாம் எடுத்துக்

கொண்டுள்ள எல்லா பொருள்களின் மொத்த மதிப்புஅடிப்படை ஆண்டில் $\Sigma p_{oi}\ q_{oi}$ * அல்லது $\Sigma p_o\ q_o$ என்று வரும்.

இதே போன்ற மதிப்பு நடப்பு ஆண்டில் $\Sigma p_k q_k$ என்று அமையும். எனவே, இவ்விரண்டு ஆண்டுகளில் விலைகளும் இரட்டித்தன என்று வைத்து கொண்டால்; விலை குறியீட்டெண் 2ஆக வேண்டும். விலை குறியீட்டெண் அல்லது அளவு குறியீட்டெண்ணையும் கணக்கிடலாம் அல்லவா? அப்படி அளவு குறியீட்டெண்ணை Q என்று குறிப்போம். இப்பொழுது அளவுகளும் இரட்டித்தன என்றால் Q–வின் மதிப்பு 2 ஆகிறது. எனவே நடப்பு ஆண்டில், மொத்த மதிப்பு 4 ஆகும். அதாவது $\Sigma p_k q_k = 4$; $\Sigma p_o q_o = 1$.

சோதனை என்னவென்றால், இந்த இருவகை குறியீட்டெண்களின் பெருக்கல் பலன் $\Sigma p_k q_k / \Sigma p_o q_o$ யுடன் சமமாக இருக்க வேண்டும் என்பதே.

$$P.\ Q = \frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_o} \quad \text{——} \quad \langle 13 \rangle$$

இதுவே, காரணி திருப்பு சோதனை. அதாவது, ஒரே குறியீட்டெண்—விலை குறியீட்டெண்ணாகவும் பயன்படலாம். அல்லது காரணி திருப்புவதலால் அளவு குறியீட்டெண்ணாகவும் பயன்படலாம்— என்பது கருத்து*.

L-மற்றும், P-வாய்பாட்டை இச்சோதனைக்குட்படா. உதாரணமாக: P-வாய்பாட்டை நோக்குவோம்.

$$\text{விலை குறியீடு } P = \frac{\Sigma P_k q_k}{\Sigma P_o q_k}$$

காரணிகளை திருப்ப வேண்டுவேண்டுமானால், P, q இரண்டையும் மாற்றி அமைக்க வேண்டும். இப்பொழுது நமக்கு Q-அளவு குறியீட்டெண் கிடைக்கும்.

*இந்த கருத்து அவ்வளவு நல்லதான ஒன்று என்று கூறுவதற்கில்லை. குறியீட்டெண்களை கணக்கிடுமுன் நமக்கு எந்த குறியீட்டெண் தேவைப்படுகிறது என்பதனை பொருத்து நம்முடைய வேலைகள் மாறும். எனவே விலை

குறியீட்டெண்களைக் கணக்கிடும் அடிப்படை மற்றும் அளவு குறியீட்டெண் கணக்கிடும் அடிப்படை இரண்டும் முற்றும் சமமாக இருக்கும் என்பதற்கில்லை. ஆனால் இச்சோதனை பெரும்பாலும் எல்லா நூல்களிலும் இடம் பெற்று, வழக்கத்திலுள்ளதால், இதனை விரிவாக கூறியுள்ளோம்.

Q—அளவு குறியீட்டெண் கிடைக்கும்.

$$\text{அளவு குறியீடு } Q = \frac{\Sigma p_k q_k}{\Sigma p_k q_o}$$

இவை இரண்டையும் பெருக்க:

$$P \times Q = \frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_k} \cdot \frac{\Sigma p_k q_k}{\Sigma p_k q_o} \neq \frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_o}$$

என்பது வெளிப்படை.
இப்பொழுது, விழுமிய குறியீட்டினை கவனிப்போம்.

$$\text{விலை குறியீடு : } P = \sqrt{\frac{\Sigma p_k q_o}{\Sigma p_o q_o} \cdot \frac{\Sigma p_k q_k}{\Sigma q_o q_k}}$$

காரணிகளை மாற்றினால்:

$$Q\text{-அளவு குறியீடு} = \sqrt{\frac{\Sigma q_k p_o}{\Sigma q_o p_o} \cdot \frac{\Sigma p_k q_k}{\Sigma q_o p_k}}$$

$$\text{ஆக}P.\ Q = \sqrt{\left(\frac{\Sigma p_k q_o}{\Sigma p_o q_o}\right)\left(\frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_k}\right) \cdot \left(\frac{\Sigma p_o q_k}{\Sigma p_o q_o}\right)\left(\frac{\Sigma p_k q_k}{\Sigma p_k q_o}\right)}$$

$$\sqrt{\left(\frac{\Sigma p_k q_k}{\Sigma p_o q_o}\right)^2} \quad \frac{\Sigma p_k q_k}{\Sigma p_k q_o}$$

என்று சரியாக வருகிறது. எனவே, விழுமிய குறியீட்டெண் இந்த சோதனைக்கு உட்படுகிறது. மற்ற மார்ஷல்-எட்ஜ்வர்த், வால்ஷ் வாய்பாடுகளும் உட்படுவதில்லை என்று காட்டலாம்.

மேற்கூறிய மூன்று சோதனைகளுக்கும் உட்படும் ஒரே குறியீட்டெண்ஃபிஷரின் விழுமிய குறியீட்டெண்தான் ஆகவே. இதனையே சிறந்தது என்று எல்லோரும் கருதுவர்.

## 4.7 குறியீட்டெண்களில் ஏற்படக்கூடிய பிழைகள்

விலை குறியீட்டெண்களைக் கொண்டே, எங்கெங்கு பிழைகள் நேரக்கூடும் என்பதனை ஆராய்வோம். நாட்டில் அடிப்படை ஆண்டில் பற்பல பொருள்கள் பழக்கத்தில் இருக்கும். இந்த எண்ணிக்கை N. நாம் குறியீட்டெண் கணக்கிட எல்லா பொருள்களையும் சேர்த்துக் கொள்வது நல்லது என்றாலும், அது நடைமுறையில் சரிவராது போகும். எனவே, நாம் n-என்ற சிறு எண்ணிக்கை பொருள்களையே பயன்படுத்த வேண்டியதாகும். இவ்விரண்டு எண்ணிக்கைகளிலுள்ள வித்தியாசம் அதிகமாக, அதிகமாக, நாம் கணக்கிடும் குறியீட்டெண்களிலும் பிழை அதிகமாகும். இத்தகைய பிழைக்கு, மட்ஜட் (Mudgett) என்பவர் 'மாதிரி முறை பிழை' (Sampling error) என்று பெயர் தந்துள்ளார். இதனை கணக்கிடுவது எளிதல்ல. பிழையின் அளவை குறைக்க, n—ன் எண்ணிக்கை N—ஐ விட மிகக் குறைவாக இருக்கக்கூடாது என்று பார்த்துக் கொள்வதே வழியாகும். இத்தகைய 'பிழைகளை மாதிரி முறைகளில் காணுவோம், நாம் கருதும் குறியீட்டெண்ணை கணக்கிடும் பொழுது படுகைமுறை (Stratified Sampling) யைத்தான் பயன்படுத்துவோம், எனவே, இம்முறைக்கான மாதிரிப்பிழை:

$$V = \frac{\sigma^2}{n}\left(I - \frac{n-1}{N-1}\right) \qquad 14)$$

என்பது நடைமுறையில் நாம் முக்கியமான எந்த பொருளையும் விட்டுவிடாமல் இருப்பதால் இந்த பிழையை 'ஒரினத்தனப்பிழை' (homogeneity error) என்று குறிப்பிட்டுள்ளார்கள். நாம் இரு ஆண்டுகளை கணக்கிற்கு பயன்படுத்துகிறோம் - அடிப்படை ஆண்டுகளிலும் பயன்படுத்தப்படும் பொருள்கள் ஒரே வகையாக இருக்காது என்பது வெளிப்படை. அடிப்படை ஆண்டில் இருக்கும் சில பொருள்கள் நடப்பு ஆண்டில் இல்லாமல் இருக்கலாம், (உதாரணம்: 1970-ல் கைரிக்ஷா இருந்தது. 1974-ல் இல்லை): அதே போல, அடிப்படை ஆண்டில் இல்லாத பொருள்கள் நடப்பு ஆண்டில் இருக்கலாம். இரண்டு ஆண்டுக்கும் பொதுவான பொருள்களின் எண்ணிக்கை m என்றும், அடிப்படை ஆண்டில் தனிப்பட்ட பொருள்களின் எண்ணிக்கை $m_1$ என்றும், நடப்பு ஆண்டில் அதே எண்ணிக்கை $m_2$ ஆனால், பிழையின் அளவை

$$R = \frac{m_1+m_2}{m+m_1+m_2} \tag{15}$$

(என்பதால் குறிப்பிடலாம்). இரண்டு காலங்களுக்கும் உள்ள இடைவெளி அதிகமானால் $m_1$ $m_2$ என்ற எண்ணிக்கைகள் அதிக ரிக்கும்] எனவே பிழையின் அளவும் அதிகமாகும். ஆகவே குறி யீட்டெண் கணக்கிடுங்கால், கால அளவை மிக அதிகமாக ஆகாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். சரியான காலஅளவு இவ்வளவுதான் இருக்க வேண்டும் என்று திட்டவட்டமாகக் கூறுவது கடினம். சுமாராக, 10-15 ஆண்டுகளில் பொதுப் பொருள்களின் எண்ணிக்கை குறையலாம்; தனிப் பொருள்களின் எண்ணிக்கை அதிகமாகலாம். கணக்கு முறைகளில் சிறிதளவு மாற்றம் ஏற்படுத்தியும் இந்த பிழையை குறைக்கலாம். உதாரண மாக, கை ரிக்ஷாவின் (விலையை வாடகைத்தான்!) நீக்கி அதன் இடத்தில் சைக்கிள் ரிக்ஷாவின் 'விலையை'ப் பொருத்துவது போன்றவை.

மூன்றாவதாக. 'வாய்பாடு பிழைகள்' இவைகள் மேற்கூறப் பட்ட குறியீட்டெண் சோதனைகள் இரண்டிலிருந்தும் எழுகின்றன காலத்திருப்பு சோதனையினால் வரக்கூடிய பிழையை $E_1$ என்றும், காரணித்திருப்பு சோதனையினால் ஏற்படும் பிழையை $E_2$ என்றும் குறிப்பிடலாம்.

$$E_1 = (I_{0k} \,.\, I_{k_0}) - 1 \tag{16}$$

என்பது முதல் வகைப் பிழை

$$E_2 = \frac{P \,.\, Q}{V} - 1 \tag{17}$$

என்பது இரண்டாவது வகைப் பிழை.

$$\text{இங்கு} \quad V = \frac{\Sigma p_k q_k}{\Sigma p_0 q_0}$$

இவைகளை இப்பொழுது நாம் உதாரணம் 1-லிருந்து விளக்க லாம். (பட்டியலைப் பார்க்கவும்)

**லாஸ்பெயர்ரேயின் வாய்பாடு :**

$$I_{k_0} = \frac{\Sigma p_0 q_k}{\Sigma p_k q_k} = \frac{1764}{2260} = 0.7815$$

$$I_{0k} = \frac{\Sigma p_k q_0}{\Sigma p_0 q_0} = \frac{2400}{1860} = 1.290$$

$$E_1 = (I_{0k} \cdot I_{k0}) - 1 = (1.29)(.7815) - 1 = +.007$$

**பாஸ்சேயின் வாய்பாடு :**

$$I_{0k} = 1.281; I_{k0} = \frac{\Sigma p_0 q_0}{\Sigma p_k q_0} = \frac{1860}{2400} = .793$$

எனவே $E_1 = (1.281)(.793) - 1 = -.0072$

ஆக L-வாய்பாட்டில் பிழை + ஆகவும், P-வாய்பாட்டில் பிழை- ஆகவும் உள்ளது. ஃபிஷரின் குறியீட்டெண்களில், பிழை பூஜ்யம்.

$E_2$-வை கவனிப்போம். விளக்க P-வாய்பாட்டை மட்டுமே எடுத்துக் கொள்வோம்.

விலை குறியீடு $P = 1.281$ முன்போலவே

$$\text{அளவு குறியீடு } Q = \frac{\Sigma p_k q_k}{\Sigma p_k q_0} = \frac{2260}{2400} = 0.9416$$

$$V = \frac{\Sigma p_k q_k}{\Sigma p_0 q_0} = \frac{2260}{1860} = 1.215$$

$$\text{ஆக பிழை } E_2 = \frac{P.Q}{V} - 1$$

$$= \frac{(1.281)(.9416)}{1.215} - 1 = -.0073$$

பிழை எதிர்மறையாக உள்ளது; சதவீதத்தில் 1%க்கும் கீழ் உள்ளது. எனவே அதிகப் பிழையில்லை எனலாம்.

கடைசியாக மற்ற பிழைகளும் ஏற்படும் என்பதனை விளக்கு வோம். ஒவ்வொரு பொருளும் பற்பல ரகங்களில் கிடைக்கும். அரிசியில் தமிழ் நாட்டில் சுமார் 15-20 வகைகள் (ரகம்) இருக்க லாம் அல்லவா? நாம் கணக்கிடும் குறியீட்டெண்களில் எந்த 'ரக'த்தை அல்லது ரகங்களை தேர்ந்தெடுப்பது? எல்லாவற்றை யும் கருதுவதென்பதை நடக்கக் கூடிய காரியமன்று, எனவே சில ரகங்களை மட்டுமே தேர்ந்தெடுக்க வேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கும் பொழுது, நன்கு பழக்கத்தில் இருப்பவைகளும்,

பெரும்பாலான மக்கள் உபயோகம் செய்யும் ரகங்களாகவும் தேர்ந்தெடுக்க வேண்டும். இவைகளில் நன்கு கவனம் செலுத்து தல் மிக அவசியம். மற்றும் எந்தெந்த வகையை தேர்ந்தெடுக் கிறோம் என்ற குறிப்பும் அவசியம்; அப்பொழுதுதான் வருங் காலங்களிலும் அதே ரகத்தின் குறிப்புகளையே பயன்படுத்த முடியும். இவ்வாறேதான் அங்காடிகளைத் தேர்ந்தெடுப் பதிலும்— நாட்டிலுள்ள அங்காடிகளில் முக்கியமானவை (அந்த பொருளுக்கு)களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஒவ்வொரு வியாபாரியும் தான் விற்கும் விலையைப் பற்றி தெளிவாகக் கூறி விடலாம்; ஆனால் அவ்வளவு எளிதாக தான் எவ்வளவு அளவு (quantity) விற்றான் என்பதனை அவன் கூறமாட்டான். எனவே திரட்டப்பட்ட விலைப்பட்டியல்கள் சற்று செம்மையாகவும், அளவு பட்டியல்கள் அதே செம்மையில்லாமலும் இருக்கலாம். விவரம் திரட்ட செல்லும் ஆய்வாளர்கள் (Investigators) நன்கு தேர்ச்சி பெற்றவராகவும், புள்ளியியல் விவரங்கள் தெரிந்தவ ராகவும், இருத்தல் அவசியம். திரட்டப்பட்ட தகவல்கள் நன்கு அமைந்தால் தான், அவைகளைக் கொண்டு கணக்கிடும் குறியீட் டெண்களும் திருத்தமாக அமையும்.

## 4.8 நுகர்வோர் விலை குறியீட்டெண்கள்

இது வரையில், பொருள்களின் விலையில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களை அளவிட பயன்படும் விலை குறியீட்டு எண்களைப் பற்றியே கூறி வந்தோம். குறியீட்டு எண்கள் அதிக அளவில் பயன்படும் மற்றுமொரு பொருளாதாரத் துறை—வாழ்க்கை செலவை (cast of lining) அளவிடுதலாகும். குறிப்பிட்ட கால இடை வெளியில் அன்றாட வாழ்க்கைக்கு தேவைப்படும் பொருள் கள் எல்லாமே ஒரே விதமாக மாறி இருக்காது. சில பொருள் களின் விலைகள் ஏறியிருக்கும்; சிலவற்றின் விலை இறங்கியிருக்க கூடும். ஏறியுள்ள விலைகளிலோ, அல்லது இறங்கியுள்ள விலை களிலோ, மாற்றம் ஒரே சீராக, ஒரே அளவாக இருக்காது. எனவே, வாழ்க்கைச் செலவை அளவிடுவதெப்படி என்ற பிரச்சினை எழுகிறது.

'வாழ்க்கைச் செலவு' என்பது அவ்வளவு திட்டவட்டமான பொருளுடைய சொற்றொடர் அன்று இதனை பல பேர், பல துறை களில் பயன் படுத்துகிறார்கள் என்றாலும், அதன் பொருள் சற்று குழம்பிய நிலையிலேயே உள்ளது. ஒரு குறிப்பிட்ட ஆள் கூட்டத் திற்கு (Group of persons) தேவைப்படும் பற்பல பொருள்களின்

விலைகளின் மொத்தம் என்று மேலெழுந்தவாரியாகக் கூறலாம் இங்கு 'ஆள் கூட்டம்' என்பதனையும் வரையறுக்க வேண்டும்; 'தேவை' என்பதனையும் விவரிக்க வேண்டும். சாதாரணமாக, நாட்டு மக்களை—'வேலை செய்யும் மக்கள்' (Working Class People), நடுத்தர மக்கள், உயர்தர மக்கள் என்று பிரித்து கூறுவதுண்டு. ஒவ்வொரு வகை மக்கள் பயன்படுத்தும் பொருள்களும் வெவ்வேறாக இருக்கும். ஒரு சாராருக்கு அத்தியா வசிய மான தேவைகள் மற்றுமொரு சாராருக்கு கைக்கெட்டாத ஆடம்பரப் பொருள்களாக (Luxury Goods) இருக்கலாம். ஆகவே, நாம் எடுத்துக் கொள்ளும் மக்களின் வாழ்க்கை தரம் எப்படி என்பதனை முதலில் திட்டவட்டமாக்கிக் கொள்ள வேண்டும். அத்தகைய கூட்டத்தினருக்கு பெரும்பாலும் தேவைகள் ஒரே மாதிரியாக இருக்கும்; வாழ்க்கை முறைகளும் ஒத்த வாறு இருக்கும், அவ்வகையான மக்கள் கூட்டத்திற்குதான் நாம் வாழ்க்கைச் செலவை கணக்கிட்டு கூற முடியும், வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் (Necessities), போகப் பொருள்கள் (Luxuries) முதலியன வெவ்வேறு மக்கள் கூட்டங்களுக்கு வெவ் வேறாக அமையும். இவையாவையும் கருதி அந்த சொற்றொடருக்கு திட்டமான முறையில் விளக்கம் கீழ்வருமாறு தரலாம்—''வெவ் வேறு இரு காலங்களிலோ (இரு இடங்களிலோ) ஒரே அளவான வருமானத்தை (அதாவது திருப்தியை) கொடுக்கக் கூடியதான பொருள் வருமானங்களின் (Commodity income) பண விலை மாற்றங்களைக் கணக்கிடுதல் அதாவது, வெவ்வேறான இந் நிலை களில், குறித்த துய்ப்புப் பொருள்களினால் சமமான மொத்த திருப்தி ஏற்படுகிறது என்போம்; அப்பொழுது, அந்த இரு நிலைகளில் பொருள்களின் மொத்தப் பண விலைகளின் (aggregate cost structure) விகிதமே வாழ்க்கைச் செலவு குறியீட் டெண்ணாகும்''* எனவே, நமக்கு தேவைப்படுவது துய்ப்புப் பொருள்களின் பட்டியல் இந் நிலைகளிலும் (அல்லது) காலங்களி லும்) இந்த பட்டியலிலுள்ள பொருள்கள் சற்று வித்தியாசப் பட்டாலும், அவைகளின் நுகர்வினால் ஏற்படும் திருப்தி அளவு சமமாக இருந்தால் போதும். ஆக, நாம் கருத்தில் எடுத்துக் கொள்ளும் மக்கள் எல்லோருக்கும், விருப்பங்களின் அமைப்பு (wants-structure), சுவைத் தோரணிகள் (taste patterns) முதலியன சமமாக அமைவது இன்றியமையானதாகிறது. இதற்காகவே தான், நாம் தனித் தனி மக்கள் கூட்டத்திற்கு தனித் தனியாக வாழ்க்கைச் செலவு குறியீட்டெண் கணக்கிட வேண்டும் என்

* Mills எ.ப.ஸி. "Statistical Methods"

கிறோம். சாதாரணமாக, தொழிற்சாலை பாட்டாளி வகுப்பினர் (factory workers) தான் நன்கு கட்டமைந்தவர்கள் (organised) இவர்களுக்குத்தான் பெரும்பாலும் வாழ்க்கைச் செலவு குறியீட்டெண்கள் கணக்கிடப்பட்டு வந்துள்ளன. சிற்சில சமயங்களில், நடுத்தர வகுப்பினருக்கும் கூட குறியீட்டெண் கணக்கிடும் முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன. ஆனால், இத்துறையில் அதிக கவனம் செலுத்தியது போல் தெரியவில்லை. நம் நாட்டில் அதிகப் படியான தொழிலாளிகள் விவசாயத் தொழிலாளிகள் தான். ஆனால் அவர்களுக்கு தனியான வாழ்க்கைச் செலவு குறியீட்டெண் கிடையாது. ஏனென்றால் அவர்கள் நன்கு கட்டமைந்தவர்களாக இல்லை; அவர்களுக்காக வாதாட தொழிற் தலைவர்களும் இல்லை வாழ்க்கை மட்டத்தில் உயரத்தில் இருக்கும் மக்களுக்கு இந்த பிரச்சனையில் அக்கறையுமில்லை; அவர்கள் தங்களை தாங்களே நன்கு காப்பாற்றிக் கொள்ள தெரிந்தவர்கள்!

பொருள் விலைகளில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படும் பொழுதெல்லாம் இக் குறியீட்டெண்களுக்கு அதிக பயன் ஏற்படும். விலைகள் 10 சதவிகிதம் ஏறினால், கூலி விகிதம் மாற வேண்டும் என்ற கிளர்ச்சி ஏற்படும். கூலி விகிதமும், வாழ்க்கைச் செலவு குறியீடும் தொடர்பு கொண்டவைகளாக அமைந்து விடும்.

எனவே, வாழ்க்கைச் செலவு குறியீட்டெண்களை திருத்தமாக அளவிடுதல் எளிதன்று. தற்சமயம் அளவிடப்பட்டு வரும் குறியீட்டெண்கள், நாம் மேலே கூறிய திருப்தி அளவு அடிப்படையில் இல்லை என்றே கூற வேண்டும். இவைகளை துய்ப்பவர்களால் செலுத்தப்படும் விலைகளின் குறிப்பீடுகள்' என்று கூறுவது பொருத்தமாகும். ஆகவேதான், தற்காலத்தில் ''துய்ப்போர் விலை குறியீட்டெண்' என்ற சொற்றொடரே வழக்கத்திலுள்ளது.

**4.9 இதனை கணக்கிடும் முறை :** நாட்டில் பலதரப்பட்ட மக்கள் வசிக்கிறார்கள். அதனால் அவர்கள் துய்க்கும் பொருள்களும் மாறுபடுகின்றன. எனவே, முதலில் எவ்வாறான மக்களின் குறியீடு தேவை என்பதனை தெளிவாக்கிக் கொள்ள வேண்டும். அடுத்து வரும் பிரச்சனை எந்தப் பட்டணத்தை நாம் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பது-சென்னையின் வாழ்க்கைத் தரம், தில்லி அல்லது கல்கத்தாவிலிருந்து மாறுபட்டு இருக்கலாம். அங்குள்ள மக்கள் பயன்படுத்தும் பொருள்களும் வேறாக இருக்கலாம். எனவே, நாட்டின் பற்பல பட்டணங்களுக்கும் தனித்தனியே தான் குறியீட்டு எண்களை கணக்கிடுதல் வேண்டும்.

அடுத்து, அவர்கள் பயன்படுத்தும் பொருள் வகைகள், அளவுகள் யாவை என்று கணிக்க வேண்டும். இவைகளை ஒரு வாழ்க்கை-வரவு-செலவு திட்ட விசாரணையின் மூலம் ஆய்வார்கள். சென்னை நகரை எடுத்துக் கொண்டால் அங்குள்ள தொழிற்சாலைகள் எவை, எவை; எவ்வளவு தொழிலாளர்கள் உளர், என்ற விவரங்கள் முதலில் தேவை: பற்பல தொழிற்சாலைகள் உள்ளன: எந்த ஒரு முக்கிய தொழிற்சாலையையும் விட்டு விடக் கூடாது, ஆனல் அதே நேரத்தில் எல்லா (சிறு, பெரு) தொழிற்சாலைகளையும் ஆய்விற்கு தேர்ந்தெடுப்பதும் இயலாத ஒன்று. குறிப்பாக—நூல் தொழிற்சாலைகள், பொறியியல் தொழிற்சாலைகள், போக்குவரத்து, மின்சாரம்—தொழிற்சாலைகள், மின்-நிலைய, ரயில்-பெட்டி தொழிற்சாலைகள் முதலியவைகளை நாம் ஆயவேண்டும். அந்தந்த தொழிற்சாலையிலுமுள்ள ஏனைய தொழிலாளிகளையும் ஆராய்வது கடினமும், இயலாததும் ஆனதால், இந்த நிலையிலும், நாம் ஒரு மாதிரித் தேர்வு நடத்த வேண்டும். ஆக, தொழிற்சாலைகளைத் தேர்ந்தெடுப்பதிலும் ஒரு தேர்வு, மற்றும் அந்த தொழிற்சாலையில் வேலை செய்வோர்களிலும் ஒரு தேர்வு நடக்கிறது. இத்தேர்வுகள் ஒழுங்காக, முதநிலை அளவைகளை நன்கு பிரதிபலிக்குமாறு அமைய வேண்டியது மிகவும் முக்கியம்.

பாட்டாளிகளின் பெயர் பட்டியல் கிடைத்ததும், அவர்களின் வரவு-செலவு பட்டியல்களைச் சேகரிக்க வேண்டும். அதற்கு ஒரு வினாத் தொகுதி (Questionnaire) தயாரிக்க வேண்டும். எடுத்துக் காட்டாக, கீழே விவரங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

**சாதாரண விவரங்கள்;**

தொழிலாளரின் பெயர்; தொழிற்சாலையின் பெயர், வீட்டு விலாசம், வீட்டிலுள்ள நபர்களின் எண்ணிக்கை முதலியன,

**வரவு விவரங்கள்:**

1. மாதாந்திர சம்பளம்; பஞ்சப்படி; மற்ற சலுகைகள் (குறைந்த விலையின் பொருள்கள் கிடைத்தல் முதலியன)

2. வேறு வகை ஆதாயங்கள்—குடும்பத்தில் மற்ற நபர்களின் வருவாய், நிலத்திலிருந்தோ, ஏனைய துறைகளிலிருந்தோ வரும் ஆதாயம் முதலியன.

3. மொத்தமான வருவாய்.

செலவு விவரங்கள் :

1. மாதாந்திர வகையைச் சேர்ந்தவை :

(a) உணவுப் பொருள்கள்—முழு விவரங்களையும் திரட்ட வேண்டியிருக்கும்.

(b) வீட்டு வாடகை, மின் கட்டணம், தண்ணீர், செலவு, மண்ணெண்ணெய் முதலியன.

(c) வேலைக்கு போக பஸ், ரயில் கட்டணங்கள், குழந்தைகளின் செலவினங்கள் மற்றும் குடும்பத்தினர் வெளியே போகும் பொழுது ஏற்படும் போக்குவரத்து செலவினங்கள்

(d) வெற்றிலை பாக்கு, பீடி, சிகரெட், முதலிய செலவினங்கள்

(e) தினத்தாள், வார, மாத இதழ்கள், மற்றும் நூல்களை வாங்குதல் முதலியன.

(f) மருந்து செலவினங்கள்

(g) ஒப்பனைப் பொருள்கள்-லாண்டரி முதலியவை.

(h) வட்டி முதலியன

2. வருடாந்திர செலவினங்கள்

(a) துணி மணிகள்-ஆடவர், பெண்டிர், குழந்தைகள் வகைகள்.

(b) படுக்கை, பாய் போன்றவை.

(c) காலணிகள்.

(d) குடை, மழை அங்கி முதலியவை.

(e) குறிப்பிட்ட கோவில்களுக்கோ, அல்லது வேறு வகை பிரயாணங்களுக்கோ ஏற்படும் செலவினங்கள்.

3. மற்ற செலவினங்கள்

கலியாணம், சாவு முதலிய செலவினங்களை பத்தாண்டுகளுக்கு ஒரு முறையாகக் கருதுவது வழக்கம்.

### 4. சேமிப்பு அல்லது கடன் வகைகள்

பிராவிடண்ட் பண்டு, ஆயுள் இன்ஷ்யூரன்ஸ், நகைகள் வாங்குதல், மற்றவகை சேமிப்புகள்-அல்லது-கடன்கள்.

மேற்கண்டவாறு ஒரு நீண்ட விரிவான பட்டியலை தயாரித்து, நன்கு தேர்ச்சி பெற்ற ஆய்வாளர்களைக் கொண்டு, அரசாங்கம் ஓர் ஆய்வு நடத்தும். அதன் வாயிலாக, தொழிலாளர்களின் துய்ப்புப் பொருள்கள் இவை, இவை என்று கணிக்கப்பட்டு, மொத்தமாக கீழ்க்கண்டவாறு ஒரு பட்டியல் தயாரிக்கப்படும்:—

| | | | நிறை |
|---|---|---|---|
| (1) | உணவுப் பொருள்கள் (28 வகைகள்) | — | 58 |
| (2) | மின் கட்டணம், மற்ற எரி பொருள்கள் (4 வகைகள்) | — | 9 |
| (3) | துணி மணிகள் (6 உடுப்புகள்) | — | 10 |
| (4) | வீட்டு வாடகை | — | 13 |
| (5) | மற்ற செலவுகள் | — | 10 |
| | | மொத்தம் | 100 |

அதாவது, சராசரி வழியில் ஒரு தொழிலாளி தன் சம்பளத்தில் 58°/. ஐ உணவுப் பொருள்களிலும், 9°/. எரிபொருள்களுக்கும்,......செலவிடுகிறான் என்பது தான் இக்குடும்ப வரவு-செலவு திட்ட தேர்வின் முடிவு. இந்த நிறைகளை பயன்படுத்தி முன்பு கூறிய நிலைத்த நிறை குறியீட்டெண்ணை கணக்கிடுவார்கள்.

$$\text{அதற்கான வாய்பாடு} = 100 + \frac{\Sigma p_i\ w_i}{\Sigma w_i} \quad (18)$$

மக்களின் பழக்க வழக்கங்கள் கால வழியில் மாறிக் கொண்டே இருக்கும். நாட்டில் முன்னேற்றம் அதிகரிக்க, மக்களின் வாழ்க்கைத் தரமும் மாறும், அவர்கள் துய்க்கும் பொருள்களும், அவைகளின் அளவுகளும் மாறும். எனவே, இத்தகைய தேர்வுகளை அரசாங்கம் அடிக்கடி நடத்தி, நிறைப் பட்டியலை காலவழியில் பயனுள்ளதாக இருக்குமாறு அமைக்க வேண்டும். இதற்கு பணமும், காலமும் தேவைப்படும். இவைகளை செம்மையாக நடத்தா விட்டால், நாம் கணக்கிடும் குறியீட்டெண், நடைமுறை விலை மாற்றங்களை நன்கு பிரதிபலிக்காது.

துய்ப்போர் குறியீட்டு எண் எதனை அளவிடுகிறது? வாழ்க்கைத் தரத்தின் அல்லது செலவில் ஏற்படும் ஏற்ற விறக்கங்களை அல்ல. ஒரு குறிப்பிட்ட வகை பொருள்களை துய்ப்பவர்கள் ஒரு குறிப்பிட்ட பட்டியலில் இடம் பெறும் பொருள்களை வாங்க செலவிடும் மொத்த செலவை, அடிப்படை ஆண்டிற்கும் நடைமுறை ஆண்டிற்கும் ஒப்பிடுவதற்கு பயன்படுவதே அதன் நோக்கம். இரு கால இடைவெளிகளில், துய்ப்பு வகையில் அதிக மாறுதல் இருக்கக் கூடாது என்பதும் ஒரு விதியாகும்.

துய்ப்போர் விலை குறியீட்டெண்ணை கணக்கிட மற்றுமொரு முறையும் கையாளப்படும். அதனை தொகை (அல்லது) மொத்த செலவீடு முறை (Aggregate expenditure method) என்று கூறுவர். அடிப்படை ஆண்டில் பொருள்களின் அளவுகள் அந்த வகை மக்களால் துய்க்கப்படும் பொருள்களின் அளவுகள் முதலில் மதிப்பிடப் பெறும். இவைகளை நிறைகளாக பயன்படுத்துவோம். நடப்பு ஆண்டில் பல்வேறு பொருள்களின் விலைகளைக் கண்டு பிடித்து, மேற்கூறிய நிறைகளை வைத்து, இரு ஆண்டுகளிலும் மொத்தமான தொகை என்ன என்பதைக் கணக்கிட்டு, குறியீட்டெண் கணிக்கப்படும்.

$$\text{குறியீட்டெண்} = \frac{\Sigma p_1 q_0}{\Sigma p_0 q_0} \times 100 \qquad (19)$$

இது லாஸ்பெய்ரேயின் சூத்திரம் போன்றதுதான்.

**எடுத்துக்காட்டு 5:** கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து 1969-ஆண்டினை அடிப்படையாகக் கொண்டு, 1970-ஆண்டின் துய்ப்போர் குறியீட்டெண்ணைக் கணக்கிடவும். இருமுறைகளையும் பயன்படுத்தவும்.

| பொருள் | 1669-ல் அளவு | அலகு | 1969-ல் விலை | 1970-ல்விலை |
|---|---|---|---|---|
| அரிசி | 6-க்விண்டால் | க்விண்டால் | ரூ 5.75 | ரூ 6.00 |
| கோதுமை | 6- ,, | ,, | ரூ 5.00 | ,, 8.00 |
| கடலை | 1- ,, | ,, | ,, 6.00 | ,, 9.00 |
| பருப்பு | 6- ,, | ,, | ,, 8.00 | ,,10.00 |
| நெய் | 4-கிலோ | கிலோ | ,, 2.00 | ,, 1.50 |
| சர்க்கரை | 1-க்விண்டால் | க்விண்டால் | ,, 20.00 | ,, 1500 |

செய்முறை (i) தொகை செலவிடுமுறை

| பொருள் | அளவு $p_0$ | 1969-ல் விலை $q_0$ | 1970 ல் விலை $p_1$ | $p_1q_0$ | $p_0q_0$ | $\frac{p_1}{p_0} \times 100$ p | P=V | pV |
|---|---|---|---|---|---|---|---|---|
| அரிசி | 6 க்வி | 5.75 | 6,00 | 36.00 | 34.50 | 104.3 | 34.5 | 3,600 |
| கோதுமை | 6 ,, | 5.00 | 8.00 | 48.00 | 30 00 | 160.0 | 30.0 | 4,800 |
| கடலை | 1 ,, | 6.00 | 9,00 | 9.00 | 6.00 | 150.0 | 6.0 | 900 |
| பருப்பு | 6 ,, | 8.00 | 10.00 | 60.00 | 48.00 | 125.0 | 48.0 | 6,000 |
| நெய் | 4 கிலோ | 2.00 | 1.50 | 6.00 | 8.00 | 75.0 | 8.00 | 600 |
| சர்க்கரை | 1 க்வி | 20.00 | 15.00 | 15.00 | 20.00 | 75.0 | 20.00 | 1,500 |
| | | | | 174.0 | 146.5 | - | 146.5 | 17,400 |

1) துய்ப்போர் விலை குறியீட்டெண்

$$\frac{\Sigma p_1 q_0}{\Sigma P_0 q_0} \times 100 = \frac{174.00}{146.50} \times 100 = 118.8$$

(2) துய்ப்போர் விலை குறியீட்டெண்

$$= \frac{\Sigma PV}{\Sigma V} = \frac{17400}{146.50} = 118.8$$

இரு முறைகளிலும் விடை ஒன்றுதான்.

## 4.10 ஏனைய குறியீட்டெண்கள்

குறியீட்டெண்களில் முக்கியமானவை' மொத்த விற்பனை விலை குறியீட்டெண்களும் தான். ஆனால், இந்த முறைகளைப் பயன்படுத்தி மற்றும் பல குறியீட்டெண்களை கணக்கிட்டு வருகிறார்கள். அவைகளில் சில-விவசாய உற்பத்தி குறியீட்டெண்கள், தொழிற் உற்பத்தி குறியீட்டெண்கள், தொழில் லாப குறியீட்டெண்கள், பத்திரங்கள் விலை (Security Prices) குறியீட்டெண்கள், வெளிநாட்டு வாணிப குறியீட்டெண்கள் முதலியன. இவைகளைப் பற்றிய விவரங்கள் பின்பு தரப்பட்டுள்ளன. அண்மையில் குறியீட்டெண் முறையைப் பயன்படுத்தி, தொழிற் உற்பத்தித் திறன் (Productivity) குறியீட்டெண்களையும் கணக்கிட்டு வருகிறார்கள்.

## 4.11 குறியீட்டெண்களின் பயன்கள்

1. நாட்டின் பொருளாதார நிலவரம் எவ்வாறு உள்ளது என்பதனை ஒட்டு மொத்தமாக சுட்டிக் காட்டுவது குறியீட்டெண்கள் தாம், கீழ்க்கண்ட விவரங்களைக் கவனிக்க:—

அட்டவணை 2: சில குறியீட்டெண்கள்

| | ஆண்டுகள் | | |
|---|---|---|---|
| குறியீட்டெண் விவரம் | 1953 | 1955 | 1957 |
| 1. தொழில் உற்பத்தி | 100 | 119 | 123 |
| 2. விவசாய உற்பத்தி | 100 | 102 | 102 |
| 3. துய்ப்போர் விலை | 100 | 90 | 94 |
| 4. தொழிற் பங்கு சீட்டுகள் | 100 | 131 | 134 |

1. மற்றும் 4-வரிசைகள் ஏறு வரிசைகளாகவும் மற்ற இரண்டும் இறங்கு அல்லது தேக்க வரிசைகளாகவும் உள்ளதைக் காணலாம். நான்கு ஆண்டு இடைவெளியில் தொழில் உற்பத்தி ஏறக்குறைய 25·/. அதிகரித்துள்ளது; எனவே. பங்கு சீட்டுகளின் விலைகளிலும் இதே மாதிரியான (ஆனால் இதைவிட சற்றுக் கூடுதலான) ஏற்றமுள்ளதைக் காண்கிறோம். அதே இடைவெளியில், விவசாய உற்பத்தி தேக்க நிலையிலேயே உள்ளதும் தெரிகிறது. எனவே இந்தத் துறையில் கூடுதலான கவனம் செலுத்தப்பட வேண்டும் என்று விளங்குகிறது. தொழிலுற்பத்தி பெருகி இருப்பினும், துய்ப்போர் விலை குறியீட்டெண்கள் இறங்கி இருப்பது ஒரு குறை என்றே சொல்லவேண்டும். ஆனால், 1957-ல் இறங்குத் தன்மை நீங்கி, ஏறுப் தன்மை வந்துள்ளதும் குறிப்பிடத்தக்கது.

2) சென்ற ஆண்டுகளிலுள்ள நிலவரங்களை நன்கு அறிவதால், வருங்காலத் திட்டங்களைச் செம்மையாகவும், திருத்தமாகவும் தீட்டுவது சாத்திய மாகிறது.

3) வாழ்க்கைத்தர, அல்லது துய்ப்போர் விலை குறியீட்டெண்களைக் கொண்டுதான் தொழிற் சாலைகளில் பஞ்சப்படி விகிதங்களை நிறுவுகிறார்கள். குறியீட்டெண் 1 புள்ளி ஏறினால், பஞ்சப்படியில் இவ்வளவு கூடுதல் ஏற்படவேண்டும் என்று சட்டமுள்ளது. இந்த சட்டத்தினால்தான் தொழிலாளர்களின் சம்பள விகிதங்கள் நடைமுறைக்குத் தக்கவாறு அமையும் விலைகள் ஏறிக்கொண்டிருக்கும் நேரத்தில், சம்பள உயர்வும் கோரப்படுவது இயற்கை. அதனை திருத்தமாகக் கணக்கிட்டு செயல்படுத்துவது குறியீட்டெண்களை க் கொண்டுதான்.

4) ஒவ்வொரு குறியீட்டெண்ணையும் தனியாகக் கருதாது, ஒப்பிடும் வகையில் கருதுவ்தும் பயன்தரும். நாட்டில் உற்பத்தி பெருகிருக்கும்; ஆனால் தனி மனிதனின் வருமானமும் அதே அளவு பெருகி உள்ளதா என்பது தெரியாவிட்டால், உற்பத்திப் பெருக்கு எல்லா வகை மக்களையும் வளம் படுத்தியுள்ளது என்று கூற முடியாது. இவைகளை நன்கு ஆராய்வதால், அரசாங்கம், தான் இன்னும் ஊக்கமாகச் செயல்பட வேண்டிய துறைகளைக் கண்டு கொண்டு, மேலும் சுங்க வரிகள், மற்ற பல வரிகளைப் பற்றிச் சிந்தித்து, தொழில் கொள்கையை (Policy)நன்கு அமைத்திட முடியும்.

5) குறியீட்டெண்களை ''சுருக்கல் கருவிகளாக (Deflators) வும் பயன்படுத்த முடியும். ஒரு மேற்கோள் மூலம் இக் கொள்

கையை விளக்கலாம். 1950—ல் ஒருவன் வருமானம் 75 ரூ; 1970ல் அவன் வருமானம் 150 என்றால், 1950—1970 என்ற காலத்தில் தனிமனிதனின் வருமானம் இருமடங்கு உயர்ந்தால் போல தோன்றும். இது சரியன்று. அதே கால இடைவெளியில், விலை குறியீட்டெண்களில் ஏற்பட்டுள்ள மாறுதலையும் காண வேண்டும். 1950ல் அவை 100ம், 70ம் 250 என்றும் இருப்பதாகக் கொள்வோம். அஃதாவது விலைகள் 2½ மடங்கு அதிகரித்துள்ளன. எனவே தனிமனிதனின் நிலை முன்னைவிட மோசமாக உள்ளது! இதனை (தனி மனிதனின் பொருளாதார நிலையை) அளவிட, வருமானத்தையும் விலைகளையும் ஒன்றுபட வைக்க வேண்டும். இதையே சுருக்கல் என்பர். வருமானத்தை விலைகளால் வகுத்தல் விகிதங்கள்—

1950ல் 75 என்றும், 1970ல் 60 என்றும் வரும். இதனையே சதவீத வழியில் கூறினால், தனிமதனின் வாங்கல் திறன் (Purchasing Power) இவ்விருபது ஆண்டுகளில் 20% குறைந்துள்ளது எனக் கூறலாம். $\left[\text{அதாவது} = \frac{75-60}{75} \times 100 = 20\,\%\right]$

### A. 12 குறியீட்டெண்களை ஒப்பிடுதல்

பொதுவாக இரு குறியீட்டெண்களை ஒப்பிடும் போது சில வழிமுறைகளைக் கடைப்பிடித்தல் வேண்டும். அவை (1) இரு குறியீட்டெண்களையும் கணக்கிடும் நோக்கங்கள் ஒன்றாக இருக்க வேண்டும். மொத்தமாக பற்பல விலை வகைகள், சம்பள வரிசைகள் முதலியவற்றை ஒன்று சேர்த்து பார்த்து விடத்தான் குறியீட்டெண்கள் என்பதனை மனதில் கொள்ள வேண்டும். (2) அடிப்படை ஆண்டுகள் சமமாக இருக்கவேண்டும். (3) பயன்படுத்தப்பட்ட நிறைகள் ஏறக்குறைய சமமாக இருந்தால் தான் ஒப்பிடுதல் பயனுள்ளதாக அமையும்: (4) நிறைகளில் எதாவது ஒருவகை சார்பு (Bias) இருக்குமானால் அதனை நீக்கவேண்டும். ஒப்பிடும் வேலையை இத்துறையில் உள்ள வல்லுனர்களே (experts) செய்வது நல்லது.

எடுத்துக் காட்டு: கீழ்க்கண்ட பட்டியலிலிருந்து வாழ்க்கைத்தரன் குறியீட்டெண்களை கண்டுபிடி.

| Group | குறியீட்டெண் | நிறை |
|---|---|---|
| உணவு | 352 | 48 |
| விளக்கு மற்ற எரிபொருள்கள் | 220 | 10 |
| துணிகள் | 230 | 8 |
| வாடகை | 160 | 12 |
| மற்ற செலவுகள் | 190 | 15 |

இங்கு மொத்த நிறை 93; குறியீட்டெண்களை $I_i$ என்றும் நிறைகளை $W_i$ என்றும் குறித்தால்,

$$\text{வாழ்க்கைத்தர குறியீட்டெண்} = \frac{\Sigma w_i I_i}{\Sigma w_i}$$

$$= \frac{352\times48+220\times10+230\times8+160\times12+190\times15}{48+10+8+12+15}$$

$$= \frac{25706}{93} = 276.4$$

**4.13 குறியீட்டெண் வரிசைகளைச் சேர்த்தல் அல்லது புரியிணைத்தல் (splicing)**

குறியீட்டெண் கணக்கிடும்போது அடிப்படை ஆண்டு மிகவும் பழைய காலத்தில் இருக்கக் கூடாது என்று முன்பே கூறினோம். எனவே அடிக்கடி ($10^{-20}$ ஆண்டுக்கு ஒரு முறை எனலாம்) அடிப் படை ஆண்டு மாறிக்கொண்டிருக்கலாம். அப்போது வெவ் வேறு அடிப்படை ஆண்டைக் கொண்ட குறியீட்டெண் தொடர்கள் பல நமக்குக் கிடைக்கும். இத்தொடர்களை ஒருங்கே இணைப்பதனைத்தான் புரியிணைத்தல் (splicing) என்பர். உதாரணமாக, 1950ம் ஆண்டு அடிப்படையில் 1960ம் ஆண்டு வரையுள்ள ஒரு தொடரும், 1960ல் தொடங்கிய மற்றுமொரு தொடரையும் இணைப்பதுதான் புரியிணைத்தல் எனப்படும்.

முதல் தொடரில் (A—ல்) 1960க்கான குறியீட்டெண் 150 என்போம்; இரண்டாம் தொடரில் (B—ல்) 1960க்கான குறியீட் டெண் 100 என்றுதான் இருக்கவேண்டும் (ஏனெனில் இரண்டாம் தொடரின் அடிப்படை ஆண்டு 1960 தான்) அதாவது B தொடரில் உள்ள ஒரு குறியீட்டெண் I என்றால் அதனை A தொட ரில் புரியிணைக்க $\frac{I \times 150}{100} = I\times1.5$ என்ற சூத்திரத்தை உபயோ கிக்கவேண்டும். இத்தகைய காரணியை $\left(\frac{150}{100}\right.$ என்பது போல்$\left.\right)$ பயன்படுத்தி 1961 முதலிய ஆண்டுகளுக்கு நாம்குறியீட்டெண் களைக் கணக்கிடலாம்.

உதாரணம் 50:- 1950—1964க்கான தொடர்குறியீட்டெண் கள் பின்வருமாறு. அவைகளை புரியிணைத்து ஒரு தொடர் அமை.

| (1) ஆண்டு | (2) தொடர் A | (3) தொடர் B | (4) புரியிணைத்தலின் பின் A தொடர் | (5) B தொடர் |
|---|---|---|---|---|
| 1950 | 100 | — | 100 | 66.7 |
| 1953 | 125 | — | 125 | 83.4 |
| 1956 | 140 | — | 140 | 93.4 |
| 1960 | 150 | 100 | 150.0 | 100 |
| 1961 | — | 125 | 187.5 | 125 |
| 1962 | — | 130 | 195.0 | 130 |
| 1963 | — | 135 | 202.5 | 135 |
| 1964 | — | 145 | 217 5 | 145 |
| 1965 | — | 160 | 240.0 | 160 |

இப்போது 4 ம் செங்குத்து வரிசை தொடர்ச்சியாக ஒரே அடிப்படை ஆண்டைக் கொண்ட குறியீட்டெண் வரிசையாகும். ஒப்பிடுவதற்கு இத்தொடர் எளிதாக அமையும்.

1960 ஆண்டை அடிப்படையாகக் கொண்டு பழைய (1950—அடிப்படையான). வரிசையையும் புரியிணைவு செய்யலாம். அப்போது நாம் பயன்படுத்த வேண்டிய காரணி = $\frac{100}{150}$ = .667 என்பது இந்த கணக்குகளை செய்தபின் நமக்கு 5—செங்குத்து வரிசை எண்தொடர் கிடைக்கும்.

## 4.14 சங்கிலி அடிப்படை குறியீட்டெண்கள் (Chain Base Index Numbers)

இதுகாறும் ஒரே ஓர் அடிப்படை ஆண்டை வைத்தே நாம் குறியீட்டெண்களைக் கணக்கிட்டு வந்தோம் இவ்வாறன்றி, அடிப்படை ஆண்டை மாற்றியும், குறியீட்டெண்களைக் கணக்கிடலாம். அதற்குப் பின்பும் தொடர்ச்சியாக ஒப்பிடுதல் தேவைப்பட்டால், முன்பு செய்ததுபோல் புரியிணைவு முறையைப் பயன்படுத்தலாம். இம்முறையைக் கையாளுவதில் உள்ள குறைபாடு, நாம் கால இடைவெளியில் துயப்புப்பொருள்கள் மாறிவருவதைக் கணக்

கெடுப்பதில்லை என்பதுதான். துய்ப்புப் பொருள்களின் அளவு 5 அல்லது 3 ஆண்டுகால இடைவெளிகளிலும் மாறலாம். துய்ப்புப் பொருள்களின் மாற்றத்தை அளவெடுக்க ஆண்டு தோறும் அடிப்படை ஆண்டை மாற்றி வந்து குறியீட்டெண் களைக் கணக்கிடும் முறை வழக்கத்தி வந்தது. இவ்வகை எண்களை சங்கிலி அடுப்படைக் குறியீட்டெண் என்றோ தொடர் அடிப் படை குறியீட்டெண் என்றோ கூறுவர்.

ஒவ்வொரு ஆண்டிலும் ஒவ்வொரு பொருட்களின் (commodities) விலையையும், முந்திய ஆண்டில் அதே பொருளின் விலையின் சதவீதமாக அமைத்தால், அவை சங்கிலி சார்பிகள் (Link Relatives) எனப்படுகின்றன, இவைகளை அமைக்கும் முறை அடுத்த எடுத்துக்காட்டில் விவரிக்கப் பட்டுள்ளது.

எடுத்துக்காட்டு 6

கீழ்க்கண்ட விவரங்களுக்கு சங்கிலி அடிப்படை குறியீட் டெண்களைக் கணக்கிடு.

| ஆண்டு | 1966 | 1967 | 1968 | 1969 | 1970 |
|---|---|---|---|---|---|
| சங்கிலிசார்பி | 100 | 110 | 95.5 | 109.5 | 112.7 |

| கணக்கு ஆண்டு | முறைகள்:- சங்கிலிசார்பி | சங்கிலி அடிப்படை குறியீட்டெண் |
|---|---|---|
| 1966 | 100 | 100.0 |
| 1967 | 110 | $\frac{110\times100}{100} = 110.0$ |
| 1968 | 95.5 | $\frac{95.5\times110}{100} = 150.1$ |
| 1969 | 109.5 | $\frac{109.5\times95.5}{100} = 104.6$ |
| 1970 | 112.7 | $\frac{112.7\times109\ 5}{100} = 123.4$ |

எடுத்துக்காட்டு 7- கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து புதிய குறி யீட்டெண்களை கண்டுபிடி.—i) 1972 ம் ஆண்டு அடிப்படையில் (ii) சங்கிலி அடிப்படையில்

| ஆண்டு | 1969 | 1970 | 1971 | 1972 | 1973 | 1974 |
|---|---|---|---|---|---|---|
| குறியீட்டெண்: | 100 | 110 | 175 | 250 | 300 | 400 |

1972ம் ஆண்டை அடிப்படையாகக் கொண்டால் நாம் ஒவ்வொரு குறியீட்டெண்ணையும் $\frac{100}{250} = .4$ என்ற காரணியால் பெருக்க வேண்டும்.

| ஆண்டு | குறியீட் டெண் | 1972ம் ஆண்டு அடிப்படையில் | சங்கிலி அடிப்படை |
|---|---|---|---|
| 1969 | 100 | 40 | 100 |
| 1970 | 110 | 44 | 110 |
| 1971 | 175 | 70 | $159.1 = \frac{100}{110} \times 175$ |
| 1972 | 250 | 100 | 144.4 |
| 1973 | 300 | 120 | 120.0 |
| 1974 | 400 | 160 | 133.3 |

சங்கிலி அடிப்படை குறியீட்டெண்களை முன்கூறியவாறு கணக்ிடலாம்.

(2)ம்(4)ம் செங்குத்து வரிசைகளில் முதலிரண்டு குறியீட்டெண்கள் சமமாக உள்ளன. ஏனெனில் இரண்டு ஆண்டு இடைவெளியில், இரு அடிப்படை எண்களும் ஒன்றுதான். அதற்குப்பின் உள்ள எண்கள்தாம் மாறிக்கொண்டே வருகின்றன.

சங்கிலி அடிப்படை குறியீட்டெண்கள் ஆண்டு தோறும் நிகழும் ஏற்றத் தாழ்வுகளை நன்கு எடுத்துக் காட்டுகின்றன. அது தான் இக்குறியீட்டெண்களின் சிறப்பாகும்.

குறியீட்டெண்களை நிலைத்த அடிப்படையிலிருந்து சங்கிலி அடிப்படை கொண்டதாகவோ அல்லது இதற்கு நேர் மாறாகவோ மாற்றி அமைக்கலாம்.

அதற்கான சூத்திரம்.

$$\text{நடப்பு ஆண்டு நி.அ.கு} = \frac{\text{நடப்பு ஆண்டுச.அ.கு} \times \text{முதலாண்டுநி.க.கு}}{100}$$

இங்கு நி.அ.கு— நிலைத்த அடிப்படை குறியீட்டெண்

ச.அ.கு.—சங்கிலி அடிப்படை குறியீட்டெண்

எனவே,

$$\text{நடப்பு ஆண்டு ச.அ கு} = \frac{\text{நடப்பு ஆண்டு நி.அ.கு.} \times 100}{\text{முதலாண்டு நி.அ.கு.}}$$

எடுத்துக்காட்டு 8.

கீழ்க்கண்ட ஆண்டுகட்கான நிலைத்த அடிப்படை குறியீட்டெண்களை கண்டுபிடி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆண்டு | 1962 | 1963 | 1964 | 1965 | 1966 |
| சங்கிலி அடிப்படை குறியீட்டெண் | 80 | 110 | 120 | 105 | 125, |

மேற்கண்ட சூத்திரத்தை பயன்படுத்தினால்:-

$$1963 \text{ ஆண்டின் நி.அ.கு} = \frac{110 \times 80}{100} = 88.0$$

$$1964 \text{ ஆண்டின் நி.அ கு} = \frac{120 \times 88}{100} = 150.6$$

$$1965 \text{ ஆண்டின் நி.அ.கு.} = \frac{105 \times 105.6}{100} = 110.9$$

$$1966 \text{ ஆண்டின் நி.அ.கு} = \frac{125 \times 110.9}{100} = 138.6$$

எனவே நிலைத்த அடிப்படை குறியீட்டெண்கள் கீழ்க்கண்டவாறு அமையும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆண்டு | 1962 | 1963 | 1964 | 1965 | 1969 |
| நி.அ.கு | 80 | 88.0 | 105.6 | 110 9 | 138.6 |

### A.15 சுழல் சோதனை: (Circular test)

இது 'கால திருப்பு சோதனை'யை ஒட்டி அமைக்கப்பட்ட மற்றொரு சோதனை. ஆண்டுகளை, 0, 1, 2, 3... k என்று குறிப்பிடுவோம். O-ம் ஆண்டினை அடிப்படையாகக் கொண்டு 1-ம் ஆண்டுக்குக் கணக்கிட்ட குறியீடு $p_{01}$ ; இப்படியே $p_{i(+1)}$ என்பது i-ம் ஆண்டினை அடிப்படையாகக் கொண்டு (i+1)ம் ஆண்டின் குறியீடு. அப்போது,

$$P_{01} \cdot P_{12} \cdot P_{23} - P_{(k-i)k} \cdot P_{ko} = 1 \qquad (20)$$

என்ற தீர்வு வந்தால் சுழல் சோதனை சரியாக அமைகிறது என்று பொருள்.

அடிப்படை ஆண்டை மாற்றியமைத்து, பற்பல ஆண்டுகளுக்குக்கான குறியீட்டெண்களைக் கணிக்கும்போது, இந்த சுழல்

சோதனை பயன்தரும். இச்சோதனைக்கு உட்பட்ட குறியீட்டெண்களை எளிதில் மாற்றியமைத்து விடலாம்; கணக்கு முறைகளையும் எளிதில் முடித்துவிடலாம்.

நாம் கணக்கிட்ட ஏனைய குறியீட்டுடெண்கள் எவையும் இந்த சோதனைக்கு உட்படாது. எடுத்துக்காட்டாக, லாஸ் பெஸ்ரேயின் குறியீட்டெண்ணை மூன்றுண்டுகளுக்குக் (0, 1, 2) கருதுவோம்.

$$P_{o} = \frac{\Sigma p_1 q_0}{\Sigma p_0 p_0} \quad ; \quad P_{12} = \frac{\Sigma p_2 q_1}{\Sigma p_1 q_1} \quad ; \quad P_{20} = \frac{\Sigma p_0 p_2}{\Sigma p_2 q_2}$$

எனவே $p_{01} \cdot p_{12}\, p_{20} \neq 1$ என்பது வெளிப்படை. இதுபோலவே பாஸ்சே, ஃபிஷரின் விழுமிய குறியீடு, மார்ஷல் எட்ஜ்வர்த்தின் குறியீடுகளும் இச்சோதனைக்கு உட்படா. இச்சோதனைக்கு உட்பட்ட ஒரே ஒரு குறியீடு 'சாதாரண பெருக்கு சராசரி குறியீட்டெண்' மட்டும்தான். அக்குறியீட்டெண்ணின் வாய்பாடு,

$$P_{01} = \left[\prod_{C=1}^{N}\left(\frac{P_{1i}}{P_{0i}}\right)\right] 1/N \text{ என்பது}$$

இங்கு $\frac{p_1}{p_{oi}}$ ஒரு குறிப்பிட்ட பொருளின் (iயின்) விலைகளைக் கொண்ட ஒரு சார்பி; அத்தகைய பொருட்களின் எண்ணிக்கை n ஆகும் II என்பது பெருக்கல்குறி.

$$\text{எனவே } P_{12} \left[\prod_{i=1}^{N}\left(\frac{P_{2i}}{P_{1i}}\right)\right]^{1/N} \quad P_{20} = \left[\prod_{i=1}^{N}\left(\frac{P_{0i}}{P_{2i}}\right)\right]^{1/N}$$

$$\text{ஆக } P_{01} \cdot P_{12} \cdot P_{20} = \left[\prod_{i=1}^{N}\left(\frac{P_{1i}}{P_{0}}\right)\left(\frac{P_2}{P_1}\right)\left(\frac{P_{0i}}{P_2}\right)\right]^{1/N} = 1$$

என ஆகிறது.

சுருக்குதலுக்கு (Deflation) பயன்படும் குறியீடுகள்:

பொருட்களின் விலைகளில் ஏற்படும் மாற்றங்களால் உண்டாகும் வேறுபாடுகளை அளவிட்டுக் கணக்கிடுதலுக்கு 'குறைத்தல்' என்று பெயர். உதாரணமாக, விலைகள் ஏறினால், பணத்தின் வாங்கும் திறன் (Purchasing power of money) குறைகிறது.

1965ல் 50ரு – ஒரு க்விண்டால் என்றிருந்த ஒரு பொருளின் விலை 1975ல் ரூ 100க்கு ஏறுகிறது என்போம். அப்போது 1965ல் 50ரூ கொடுத்து ஒரு க்விண்டால் பொருளை வாங்கும் ஒருவன் 1975ல் அதே தொகைக்கு ½ க்விண்டால் தான் வாங்க முடியும். 1965ல் 1ரூபாயின் மதிப்பு 100பைசா எனக்கொண்டால் 1975ல் அதேஒரு ரூபாயின் நிஜ மதிப்பு 50பைசா. அதாவது, பாதிதான் உள்ளது. எனவே பணத்தின் மதிப்பு அல்லது அதன் வாங்கும் திறன்'ஒரு குறிப்பிட்ட குறியீட்டின் தலைகீழ்விகிதம் (ரெஸிப்ரோக்கல்) ஆகும்; ஒரு பொருளின் மதிப்பு, குறிப்பிட்ட காலத்தில் 75% ஏறினல்' புதுக் குறியீடு 1.75ஆகும். அப்போது வாங்கும் திறன்

$\frac{1}{1.75} = .57$ ஆகும். அதாவது ரூபாயின் மதிப்பு 57 பைசா

தான். விலைகள் ஏறிவரும் காலத்தில், அவேற்றத்திற்குத் தக்க வாறு ரூபாயின் வாங்கும் திறனும் குறைந்து கொண்டே வருகிறது, பொதுவாக ஒரு மனிதனுக்குத் தான் வாங்கும் வருமானத்தின் அசல் மதிப்பு என்ன என்பதில் கருத்திருக்குமே தவிர, வருமானத்தின் தொகையில்மட்டும் கவனமிருக்காது. வருமானத்தின் அசல் மதிப்பைக் கணிக்க, வருமானத் தொகையை தகுந்த குறியீட்டிஞல் வகுக்கவோ அல்லது குறைத்தல் கருவியால் பெருக்கவோ செய்யவேண்டும். இவ்வடிப்படையைய பெரும் பாலோர் ஆமோதித்தாலும், அதில் உபயோகப்படுத்த வேண்டிய குறியீட்டெண்ணைப் பற்றி நிச்சயமாக கருத்து வேறு பாடு உண்டாகும். கீழ்க்கண்ட பட்டியல் இம்முறைகளை அறிய உதவும்.

| ஆண்டு | சம்பளம் | விலை குறியீட்டெண் | சம்பளத்தின் அசல் மதிப்பு ரூ | சம்பளத்தின் மதிப்பு (குறியீட்டெண்) |
|---|---|---|---|---|
| 1961 | 200 | 100 | $\frac{200 \times 100}{100} = 200$ | 100.0 |
| 1962 | 240 | 160 | $\frac{240 \times 100}{160} = 150$ | 75.0 |
| 1963 | 350 | 280 | $\frac{350 \times 100}{280} = 125$ | 62.5 |

| ஆண்டு | சம்பளம் | விலைகுறியீட்டெண் | சம்பளத்தின் அசல் மதிப்பு ரூ | | சம்பளத்தின் மதிப்பு (குறியீட்டெண்) |
|---|---|---|---|---|---|
| 1964 | 360 | 290 | $\frac{360\times100}{290}$ | = 124 | 26.0 |
| 1965 | 360 | 300 | $\frac{360\times100}{300}$ | = 120 | 60.0 |
| 1966 | 370 | 320 | $\frac{370\times100}{320}$ | = 116 | 58.0 |
| 1967 | 375 | 330 | $\frac{375\times100}{330}$ | = 114 | 57.0 |

961—67 ஆண்டுகளில், வருமானம் கிட்டத்தட்ட இரண்டு மடங்காயிருப்பினும், அதன்மதிப்பு 1961ல் இருந்ததில் பாதியாகக் குறைந்துள்ளது. இதன் காரணம், '61—67'ல் பொருட்களின் விலைகள் மூன்று மடங்கிற்குமேல் ஏறியிருப்பதுதான். 1961ல் ரூபாயின் மதிப்பு 100பை என்ருல், 1967ல், அது 57 பைசாவாக குறைந்துள்ளதை இவ்விவரங்கள் சுட்டிக் காட்டுகின்றன.

**4. 17 குறியீட்டெண்களின் வரையறைகள்:—**

இவை பற்பல துறைகளில் பயன்படுத்தப்படுவதால், அவைகட்கான வரையறைகளைப் பற்றித்தெளிவான எண்ணம் நம் மனத்தில் இருப்பது அவசியம். அவ்வரையறைகளை வரிசைப் படுத்தி இங்குக் கூறியுள்ளோம்.

1) தேர்ந்து எடுக்கப்பட்ட துறையில் உள்ள எல்லா அளவுகளையும் கணக்கெடுக்க இயலாததால், ஒவ்வொரு துறைக்கும் நாம் மாதிரி பட்டியலையே பயன்படுத்துகிருேம். எனவே முழுமையான (Concept) கருத்துப் படிவம் கிட்டாது.

2) நாம் தேர்ந்தெடுக்கும் மாதிரியும் ஒரு ராண்டம் (Randam) மாதிரியாக அமையாது. புள்ளியியல் முறைகள் எல்லாம் ராண்டம் மாதிரியையே அடிப்படையாகக் கொண்டவைகள் என்பதனை அறிவோம். எனவே ராண்டம் மாதிரிகள் அமையாதுபோவதால் நாம் கணக்கிடும் குறியீட்டெண்களும் மிகுந்திருத்தமாக இருக்கும் என்று கூறுவதற்கில்லை. நாம் சந்திக்கவேண்டிய நபர்கள்

அங்காடிகள் தொழிற்சாலைகள், பொருள்கள் முதலியவற்றி லிருந்து ராண்டம் மாதிரிகளை எடுப்பது இயலாது போனால், அந்த அளவிற்கு நம் கணக்கிடுதலில் பிழைகள் நேரக்கூடும்.

3. நாம் தேர்ந்தெடுத்துள்ள பொருட்களின் 'தரம்'(Quality)ஐ நிர்ணயிப்பது வெகு கடினம். ஒரு முறை (மாதத்திற்கு ஒரு முறை' அல்லது வாரத்திற்கு ஒருமுறை) கணக்கெடுத்தபொருளின் தரத்திற்கும், அதற்கடுத்த முறையில் எடுத்த தரத்திற்கும் வேறு பாடு இருக்கலாம். இயன்றவரையில் பொருளின் தரம் ஒரே சீராக இருக்குமாறு தேர்தல் முறைகளைக் கையாள வேண்டும்.

4. குறியீட்டெண்களை கணிக்க நாம் பற்பல வாய்ப்பாடுகளை உபயோகிக்கிறோம். ஒரு குறியீட்டெண், குறிப்பிட்ட ஒரு வாய்ப் பாட்டை ஒட்டி கணிக்கப்பட்டிருக்கலாம், இக்குறியீட் டெண்ணின் வரிசையையும், மற்ற ஒரு புதிய வாய்ப்பாட்டை யொட்டி கணிக்கப்பட்ட குறியீட்டிடெண்ணின் வரிசையையும் ஒப்பிடுதல் கடினமாகிவிடும். எனவே ஒப்பிடப்படும் வரிசைகள் ஒரே வாய்ப்பாட்டைக் கொண்டு அமைக்கப் பட்டவையாய் இருத்தல் வேண்டும். இந்நிலையில் நமக்குத் தெளிவாகின்ற மற் றொரு கருத்து என்னவென்றால்—'எந்த ஒரு வாய்ப்பாடும்' நிறை யிடும் முறையும் எல்லா காலங்களிலும் எல்லா சூழ்நிலைகளுக்கும் சிறந்தது என்றாகாது. சூழ்நிலைக்குத்தக்க வாய்ப்பாடுகளை உபயோகிக்கவேண்டும் என்பதாகும். எனவே எந்த ஒரு முறையும் அதற்கு உண்டான குறைபாடுகளுடன்தான் இருக்கும் என்பது புலனாகிறது.

5. நாம் கணக்கிடும் குறியீடு, நாம் கண்டறியும் விவரங்களைப் பொறுத்துள்ளது. எவ்வளவு கவனத்துடனும்' நேர்மையுடனும் நாம் விவரங்களை சேகரிக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு குறியீடு களும் திருத்தமாக அமையும். எனவே விவரங்களைச்சேகரிக்கும் நபர்கள் தத்தம் வேலைகளைச் சரிவரச் செய்ய வேண்டியது மிக அவசியம்.

கடைசியாகக் கூறப்படும் வரையறை எல்லா புள்ளியல் முறை களுக்குமே பொதுவானது. அதாவது எந்த ஒரு அறிவியல் துறையிலுமே, நாம் முன்னமே திட்டமிட்டமுடிவை அடையுமாறு சோதனைகள் செய்யக்கூடாது. (உதாரணம்) ஒரு குறிப்பிட்ட காலத்தில் பொருட்களின் 'விலைகள் மிகவும் அதிகரித்துள்ளன என்பதை அரசாங்கத்திற்கு உணர்த்துவதற்காக, விவரங்களைச் சேகரித்து தன்கூற்றை மெய்ப்படுத்தல் ஒருபுள்ளிவிவரத் தொகுப் பாளருக்கு (statistician) ஏற்றதல்ல.

4.18 நம் நாட்டில் கணிக்கப்பட்டுவரும் பல குறியீட்டெண்கள்

I a) விவசாய உற்பத்தி குறியீட்டெண்:

உணவு—விவசாயத்துறை அமைச்சரவை 1950ஜூன் மாதத்துடன்முடியும் ஆண்டை அடிப்படையாகக்கொண்டு, 28 பயிர்களின் விலைகளைப் பற்றிய விவரங்களிலிருந்து ஒரு குறியீட்டெண்ணை வெளியிடுகிறது. இப்பயிர்களை உணவுப்பயிர், உணவுஅல்லா பயிர்கள் என இரு பகுதிகளாக்கினால் அவைகளின் நிறைகள் கீழ் வருமாறு;

அ) A. உணவுப் பொருட்கள்:

i) கூலம் (Cereals):

| | |
|---|---|
| அரிசி | 35.3 |
| கோதுமை. | 8.5 |
| ஜோவர் | 5.0 |
| பாஜ்ரா | 2.7 |
| சோளம் | 2.1 |
| பார்லி | 2.0 |
| கம்பு | 1.2 |
| இதர தினைகள் | 1.5 |
| மொத்தகூலம்: | 58.3 |

ii) பருப்புகள் : (Pulses)

| | |
|---|---|
| கிராம்ஸ் (Grams) | 3.7 |
| தூர் | 1.1 |
| மற்ற பருப்புகள் | 3.8 |
| மொத்த பருப்பு வகை | 8.6 |

ஆ)

உணவு-அல்லா பயிர்கள்

i) எண்ணை விதைகள்:

| | |
|---|---|
| கடலை | 5.7 |
| எள் | 1.2 |
| கடுகு மற்றும் ரேப் | 2.0 |
| ஆளிவிதை | 0.8 |
| ஆமணக்கு | 0.2 |

மொத்த எண்ணைவிதைகள் : 9.9

ii) நார்ப்பொருள் (fibres)

| | |
|---|---|
| பஞ்சு : | 2.8 |
| சணல் | 1.4 |
| மெஸ்தா | 0 3 |
| மெத்த நார்ப்பொருள் | 4.5 |

iii) தோப்புப் பயிர்கள் (Plantation crops)

| | |
|---|---|
| டீ — | 3.3 |
| காபி | 0.2 |
| ரப்பர் | 0.1 |
| மொத்த தோப்பு பயிர்கள் | 3.6 |

iv) ஏனைய பயிர்கள்

| | |
|---|---|
| கரும்பு | 8.7 |
| புகையிலை | 1.9 |
| உலர்ந்த மிளகாய் | 2.0 |
| உருளைக்கிழங்கு | 1.6 |
| மிளகு | 1.2 |
| சுக்கு | 0.3 |
| மொத்த ஏனைய பயிர்கள் | 15.1 |
| ஆக மொத்த உணவு வகைகள் | 66.9 |
| உணவு அல்லாதவை | 33.1 |
| | 100.0 |

உற்பத்தி சார்பிகளைக் (Price relatives) கணக்கிட சங்கிலி முறை கையாளப்பட்டுள்ளது. ஒவ்வொரு பொருளுக்கும் இவ்வாறு சார்பிகளை கணக்கிட்டு அவைகளை கூட்டுச்சராசரி முறையில் நிறையிட்டு குறியீட்டெண்களை கணக்கிடுகிறோம். அத்தகைய குறியீட்டெண்கள், தனித்தனியே ஒவ்வொரு பகுதிக்கும், பெரும் பகுதிக்கும், எல்லா பொருள்களுக்கும் மொத்தமாகவும் கணக்கிடப் பெறும்.

ஆ) பொருளாதாரம் மற்றும் புள்ளியியல் இயக்குனரகம் (Directorate of Economics and Statistics)

என்ற நிறுவனம் ஒரு புதிய குறியீட்டெண்ணைக் கணக்கிட்டு வருகிறது. அக்குறியீட்டைக் கணிக்கும் முறைகள் ஏறத்தாழ முன்பு கூறப்பட்டவை போல்தான். இதற்கு அடிப்படை ஆண்டு 1961—62. எடுத்துக் கொள்ளப்பட்ட பொருட்களின் எண்ணிக்கை —38. இவ்வெண்ணிற்கும், (அ)வில் கூறப்பட்ட வரிசைக்கும் தொடர்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

அடுத்த அட்டவணையில் நம் நாட்டின் மொத்த விலைகுறியீட்டெண்களின் பட்டியல் உள்ளது.

அட்டவணை 3 : மொத்த விலை குறியீட்டெண்கள்

(1969-லிருந்து 1975-வரை) - 1961 - 62 = 100.

| 7 உற்பத்தி பொருட்கள் | வருடம் | எல்லா பொருட்கள் | 1 உணவு | 2 சாராயம்கள் | 3 எரிபொருட்கள் | 4 | 5 ரசாயனப் பொருட்கள் | 6 இயந்திர வகைகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 148.9 | 1969-70 | 175.7 | 199.8 | 188.2 | 160.1 | 185.8 | 193.4 | 140.2 |
| 160.4 | 90-71 | 180.6 | 199.8 | 184.9 | 162.7 | 191.0 | 189.5 | 151.5 |
| 173.4 | 71-72 | 192.3 | 216.5 | 209.1 | 178.1 | 178.5 | 198 8 | 162.8 |
| 183.4 | 72-73 | 218.5 | 250.1 | 249.1 | 187.6 | 236.4 | 208.4 | 171.6 |
| 234.2 | 73 74 | 284.5 | 321.7 | 272.2 | 292.9 | 322.7 | 270.8 | 215.7 |
| 252.6 | 74-75 | 306.4 | 355.7 | 310.1 | 322.0 | 284.9 | 327.9 | 267.0 |
| 254.1 | Jan 75 | 314.9 | 367.7 | 308.4 | 319.8 | 313.3 | 309.3 | 266.2 |
| 253.4 | Feb 75 | 310.2 | 361.7 | 299.0 | 319.4 | 297.7 | 323.9 | 266.1 |
| 294 | திறைகள் | 1000 | 413 | 25 | 61 | 121 | 7 | 79 |

அடுத்த அட்டவணையில், குறியீட்டெண்கள் எவ்வாறு 73—75க்குள் மாறியுள்ளன என்பது எழுதப்பட்டுள்ளது.

அட்டவணை 4: 73—74 மற்றும் 74—75 ஆண்டுகளிடேயே ஏற்பட்ட மாற்றங்கள்

| பொருட்கள் | மார்ச் 73—74 மாற்றம் | மார்ச் 74—மார்ச் 75 மாற்றம் |
|---|---|---|
| எல்லா பொருட்கள் | 30.2 | 7.7 |
| 1. உணவு | 28.6 | 10.6 |
| 2. சாராயம்.கள் | 9 3 | 13.9 |
| 3. எரிபொருட்கள் | 56.1 | 9.9 |
| 4. தொழிலில் கச்சாப் பொருட்கள் | 36.5 | —11.7 |
| 5. ரசாயனப் பொருட்கள் | 29.9 | 21.1 |
| 6. இயந்திரவகைகள் | 25.7 | 23.8 |
| 7. உற்பத்திப் பொருட்கள் | 27.7 | 7.9 |

II தொழில் உற்பத்தி குறியீட்டெண்:

நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை அளவிட இக்குறியீட்டெண் மிகவும் பயன்படுத்தப்படுகிறது. முக்கியமாக பொருளாதார ஆலோசகரும், வாணிபத்துறை அமைச்சரகமும் இதை கணிக்கின்றன.

அடிப்படை ஆண்டு 1960 (ஜனவரி– டிஸம்பர்)

இது 324 மாதாந்திர உற்பத்திப் பொருட்களைக் கொண்டு கணக்கிடப்படுகிறது. விவரங்கள் கீழ்வருமாறு.

| பகுதிகள் | நிறை |
|---|---|
| அடிப்படை தொழில்கள் | 25.11 |
| ஆ. முதல் கருவிப் பொருட்கள் தொழிற்சாலைகள் | 11.76 |
| இ) நடு நிலைக்கருவி தொழிற்சாலைகள் | 25.38 |
| ஈ) துய்ப்போர் பொருள் தொழிற்சாலைகள் | 37.27 |

இந்த ஒவ்வொரு பகுதியிலும் சிறுச்சிறுப் பகுதிகள் தனித் தனியே கருதப்பட்டுள்ளன. அவைகளை கீழேயுள்ள பட்டியலில் காணலாம்.

அ-ல் இடம் பெறுவன*

| | |
|---|---|
| Mining and Quarrying | 9.72 |
| Basic Metals | 7.38 |
| Electricity | 5.37 |
| Cement | 1.17 |
| Heavy Inorganic Minerals | 0.69 |

ஆ-ல் இடம் பெறுவன

| | |
|---|---|
| Railroad Equipment | 3.50 |
| Motor Vehicles | 2.51 |
| Machinery Components and Accessories | 1.06 |
| Iudustrial Machinery | 0.93 |
| Electrical Cables and Insulated Wires | 0.68 |
| Prime Movers Boilers and Steam-generation Plants | 0.59 |

இ-ல் இடம் பெறுவன

| | |
|---|---|
| Cotton spinning | 11.79 |
| Jute manufactures | 3.97 |
| Tyres and tubes | 1.48 |
| Petroleum refinery products | 1.34 |
| Fittings, fixtures and fasteners | 0.85 |
| Wood, cork manufactures | 0.80 |
| Structural clay products | 0.77 |
| Synthetic fibres | 0.64 |
| Dyestuffs and dyes | 0.61 |

ஈ-ல் இடம் பெறுவன

(i) Non-Durable goods industries (Total) 31.57

| | |
|---|---|
| Cotton weaving | 9.39 |
| Tea | 5.12 |
| Sugar refineries | 3.58 |
| Drugs and pharmaceuticals | 2.20 |
| Cigarettes | 2.15 |
| Paper and paper products | 1.61 |
| Flourmill and grindings | 1.49 |
| Vanaspathi etc. | 1.09 |
| Soaps and other Washing and cleaning compounds | 0.95 |
| Glass and glass products | 0.57 |
| Matches | 0.50 |

| | | |
|---|---|---|
| (ii) Durable goods industries (Total) | | 5.68 |
| Communication equipment | 0.61 | |
| Electrical appliances | 0.56 | |
| Commercial office and household machines | 0.53 | |
| Bicycles and tricycles | 0.51 | |

* ஒவ்வொரு பெரும்பகுதியிலும் சில சிறுச்சிறு நிறையுள்ள பகுதிகள் விட்டுவிடப்பட்டுள்ளன. எனவே, இந்த சிறுபகுதிகளின் மொத்தம் முன்பு கூறப்பட்டதைவிட குறைவாக இருக்கும்.

பல ஆண்டுகளுக்கான தொழிற் உற்பத்தி குறியீட்டெண்களை கீழேயுள்ள பட்டியலில் காணலாம்.

அட்டவணை பட்டியல் 5.1969-74க்கான உற்பத்தி குறியீட்டெண்கள்

| ஆண்டு | அ | ஆ | இ | ஈ | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 1969 | 212.0 | 214.0 | 154.4 | 145.3 | 172.5 |
| 1970 | 221.0 | 224.6 | 158.8 | 154.7 | 180.8 |
| 1971 | 233.8 | 224.3 | 160.4 | 159.7 | 186.1 |
| 1972 | 254.3 | 243.5 | 171.2 | 168.2 | 199.4 |
| 1973 | 250.6 | 273.6 | 174.9 | 161.9 | 200.6 |
| 1974 மார்ச் | 261.8 | 296.4 | 187.0 | 164.8 | 210.3 |
| ஜூன் | 252.7 | 273.7 | 185.5 | 163.8 | 202.4 |
| ஜூலை | 254.0 | 262.8 | 184.2 | 169.8 | 203.5 |

$$\text{வாய்ப்பாடு முறை } I = \frac{\Sigma R_i w_i}{\Sigma w_i}$$

$w_i$ என்பது நிறை; $R_i$ — உற்பத்தி சார்பி. இவற்றிற்கு பருவ கால மாற்ற அளவைகளும் உண்டு.

III தொழிற்துறை லாப குறியீட்டெண்கள்:-
அடிப்படை ஆண்டு —1960—1961.

தொழிற் துறையில் ஏற்படும் லாபங்கள் இரு வகையானவை. 1) மொத்த (Gross) லாபங்கள் 2) வரிவிதித்தலுக்கு முன் ஏற்படும் லாபங்கள். முதல் வகையில், வரி விதிப்பதற்கு முன் வரும் லாபங்கள், நிர்வாகத்தினரின் வருமானம். வட்டிகள், மதிப்பு இறக்கும் (Depreciation) ஆகியவற்றிற்கான ஏற்பாடுகள் அடங்கும். இரண்டாம் வகையில் வரிக்கு முன் ஏற்படும் லாபங்கள் மட்டுமே அடங்கும். இவ்விரு வகைகளுக்கும் குறியீட்டெண் உள்ளது.

தொழிற்துறை அமைச்சரகம் இந்த குறியீட்டெண்ணை வெளியிடுகிறது. பொதுவான வரையிட்ட பொருப்புள்ள 1333 கம்பெனிகளின் விவரங்களைக்கொண்டும், தனியார் துறை நிறுவனங்களில் 501 நிறுவனங்களின் விவரங்களைக்கொண்டும், குறியீடு கணக்கிடப்படுகிறது.

VI ஏற்றுமதி—இறக்குமதிக்கான குறியீட்டெண்கள்:—

மதிப்பு—அலகு மற்றும் அளவு—அலகு இவை இரண்டிற்கும் தனித்தனியே குறியீட்டெண்கள் கணிக்கப்பட்டுள்ளன. கல்கத்தாவில் உள்ள Department of Commercial Intelligence and Statistics இதனை செய்கிறது. இதற்கு அடிப்படை ஆண்டு 1958

முதலில் 9—பகுதிகளாக பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பகுதிக்கும் தனிகுறியீட்டெண்களும், மொத்த குறியீட்டெண்களும் கணிக்கப்படுகின்றன. பகுதிகள் கீழ்வருமாறு:—

1) உணவு
2) புகையிலை மற்றும் பானங்கள்
3) கச்சா பொருட்கள் (உணவு, எண்ணை இனங்கள் இல்லாதவை)
4) எண்ணை இனங்கள்
5) மிருகக் கொழுப்பு, எண்ணைகள் முதலியன
6) ரசாயன பொருட்கள்
7) பொறி செய் பொருள்கள்
8) இயந்திரங்கள் மற்றும் போக்குவரத்துச் சாதனங்கள்
9) ஏனைய பொட்கள்

கடல் நிலம் விமானமார்க்கமாக வரும் எல்லா வியாபார பொருட்களும் இந்தகுறியீட்டில் கருதப்படுகின்றன.

மதிப்பு—அலகு குறியீட்டெண் (P) என்றால்,

$$P = \frac{\Sigma P_n Q_n}{\Sigma P_o Q_n} \times 100$$

$P_o, P_n$-என்பவை எடுத்துக்கொண்ட பொருட்களின் விலைகள், அடிப்படை ஆண்டிலும், நடப்பு ஆண்டிலும், இவ்வாய்ப்பாடு பாஸ்சேயால் வகுக்கப்பட்டது.

$Q_n$—நடப்பு ஆண்டு அளவுகள்

அளவு—அலகு குறியீட்டெண்—(Q)

அடிப்படை ஆண்டு 1958 = 100.

அடிப்படை ஆண்டிலும் நடப்பு ஆண்டிலும் $\Big\} Q = \frac{1}{P}\left(\frac{V_n}{V_o}\right) \times 100$

$V_o$, $V_n$ ஒரு பொருளின் மொத்த வியாபாரத் தொகைகள். பல ஆண்டுகளுக்கான குறியீட்டெண்களைக் கீழே காணலாம்.

அட்டவணை—6 இறக்குமதி குறியீடெண்கள்—(மதிப்பு) அலகு அடிப்படை ஆண்டு 1958—100.

| வருடம் | குறியீட்டெண் | உணவு | பானவகை | கச்சா பொருள் | தாது, எரி பொருள் எண்ணெ | மிருக மற்றும் தாவர எண்ணெ | ரசாயன பொருட்கள் | இயந்திரக் கருவி போக்கு வரத்து சாதனம் | பொறி செய் பொருள்கள் | இதர பொருள்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1970 | 149 | 147 | 174 | 158 | 109 | 194 | 75 | 257 | 214 | 152 |
| 1971 | 147 | 155 | 178 | 155 | 132 | 172 | 75 | 224 | 181 | 181 |
| 1972 | 151 | 178 | 192 | 166 | 137 | 135 | 63 | 300 | 176 | 188 |
| 1973 | 204 | 251 | 208 | 215 | 220 | 221 | 88 | 358 | 228 | 186 |
| 1974 ஜூலை | 283 | 278 | 225 | 358 | 762 | 221 | 112 | 423 | 325 | 240 |
| ஆகஸ்ட் | 307 | 313 | 194 | 358 | 756 | — | 135 | 399 | 306 | 310 |
| செப்டம்பர் | 366 | 382 | 198 | 396 | 781 | — | 199 | 392 | 326 | 229 |
| அக்டோபர் | 339 | 370 | 249 | 399 | 769 | 354 | 167 | 340 | 272 | 151 |

ஏற்றுமதி குறியீட்டெண்கள்

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1970 | 173 | 178 | 195 | 130 | 254 | 179 | 256 | 118 | 197 | 236 |
| 1971 | 177 | 173 | 239 | 131 | 197 | 247 | 224 | 90 | 220 | 232 |
| 1972 | 194 | 183 | 233 | 139 | 503 | 220 | 241 | 101 | 247 | 263 |
| 1973 | 239 | 249 | 232 | 158 | 351 | 532 | 326 | 160 | 276 | 289 |
| 1974 ஜூலை | 356 | 428 | 322 | 231 | 729 | 546 | 1088 | 212 | 355 | 377 |
| ஆகஸ்ட் | 317 | 357 | 285 | 251 | 476 | 412 | 1104 | 114 | 361 | 409 |
| செப்டம்பர் | 329 | 370 | 346 | 209 | 513 | 407 | 1093 | 199 | 360 | 344 |
| அக்டோபர் | 315 | 315 | 197 | 211 | 764 | 486 | 968 | 207 | 381 | 332. |

இதுபோலவே அளவு -அலகு (quantum) குறியீட்டெண்களையும் வெளியிடுகிறார்கள்.

பல ஆண்டுகளுக்கான குறியீட்டெண்களை கீழ் காணலாம்

அட்டவணை 6: ஏற்றுமதி இறக்குமதி குறியீட்டெண்கள்.

1961-73 ஆண்டுகள்

| | இறக்குமதி குறியீட்டெண் | | ஏற்றுமதி குறியீட்டெண் | |
|---|---|---|---|---|
| | மதிப்பு அலகு | அளவு அலகு | மதிப்பு அலகு | அளவு அலகு |
| 1961 | 99 | 111 | 111 | 105 |
| 1966 | 153 | 149 | 174 | 118 |
| 1969 | 151 | 122 | 174 | 137 |
| 1970 | 149 | 121 | 173 | 152 |
| 1971 | 147 | 142 | 177 | 150 |
| 1972 | 155 | 131 | 194 | 164 |
| 1973 ஜனவரி, பிப்ரவரி, மார்ச் மாதங்களுக்கு | 249 | 161 | 222 | 179 |

V மொத்த விலை குறியீட்டெண்கள்:

தற்காலத்தில் கணக்கிடப்பட்டுவரும் இக்குறியீட்டெண்ணின் அடிப்படை ஆண்டு 1961—62 ஆகும். இந்த ஆண்டு மூன்றும் ஐந்தாண்டு திட்டம் தொடங்கிய ஆண்டாகும். முன்பு இந்த குறியீட்டில் 112 பொருள்களே இடம் பெற்றிருந்தன. ஆனால் தற்பொழுது 139 தனிப்பொருள்கள் 7 பெரும் பகுதிகளாக பிரிக்கப்பட்டு குறியீட்டெண் கணிக்கப்படுகிறது. முழு விவரங்களும் கீழ்காணும் பட்டயலிலுள்ளன.

அட்டவணை 7: குறியீட்டெண்ணுக்கான பொருட்கள், மார்க்கெட்டுகள் நிறைகள் முதலியன

| | பகுதி | பொருட்கள் | அங்காடிகள் | விலை புள்ளிகள் | நிறைகள் |
|---|---|---|---|---|---|
| 1. | உணவு பொருட்கள் | 38 | 128 | 275 | 41.3 |
| 2. | பானம், புகையிலை | 33 | 6 | 12 | 2.5 |
| 3. | எரிபொருட்கள், மின்சாரம், எண்ணெய் | 10 | 7 | 28 | 6.1 |
| 4. | தொழிற்சாலை கச்சாப் பொருட்கள் | 25 | 47 | 106 | 12.1 |
| 5. | ரசாயனப் பொருட்கள் | 11 | 6 | 16 | 0.7 |
| 6. | இயந்திரக் கருவிகள் மற்றும் போக்குவரத்துச் சாதனங்கள் | .7 | 18 | 83 | 7.9 |
| 7. | பொறிசெய் பொருள்கள் | (45) | (29) | (257) | (294) |
| | (அ) இடைநிலை பண்டங்கள் | 13 | .7 | 43 | 5.7 |
| | (ஆ) முடிந்த பண்டங்கள் | 32 | 36 | 215 | 23 7 |
| | மொத்தம் | 139 | — | 777 | 1,000 |

நிறைகள் முதலியன

இத்தொடரில் புதிதாக இணைக்கப்பட்டவை—ரசாயனப் பொருட்களும், போக்கு வரத்துச் சாதனங்களும், இயந்திரக் கருவிகளும்தான் [5, 6] மேலும் முந்திய தொடரில் இருந்து உணவுப் பண்டங்களின் நிறை 50.4 விலிருந்து இப்பொழுது 41.3 ஆக மாறியுள்ளது. இவ்வாறு மூந்திய தொடருக்கும் இத்தொடருக்கும் இடையில் நம்நாட்டின் பொருளாதாரத் துறையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைக் காட்டுவதாக இவ்வெண்கள் அமைந்துள்ளன.

நிறையிட்ட கூட்டுச்சராசரிதான் பயன்படுத்தப்பட்டுள்ளது. குறிப்பிட்ட அங்காடிகளிலிருந்து வாரம் தோறும் பொருள்களின் விலைபுள்ளிகள் திரட்டப்படுகின்றன. அந்த விலைகளுக்கும், அடிப் படைஆண்டின் விலைகளுக்கும் விலைசார்பிகளை கணக்கிடுகிறார்கள். பலஅங்காடிகளிலிந்து கிடைக்கும் விலைகளின் சராசரியே கருதப் படுகிறது. பிறகு அத்தகைய விலை சார்பிகள், அவைகளுக்கான நிறைகளுடன் ஒரு நிறையிட்ட கூட்டுச்சராசரியாக மாற்றப்படு கின்றன. இவ்வாறு ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு குறியீட்டெண் கணிக்கப்படுகின்றது. பகுதி குறியீட்டெண்களிலிருந்து, நிறை

யிட்ட கூட்டுச்சராசரி முறையில் மறுபடியும் கணிக்கப்பட்ட குறியீட்டெண்தான் மொத்த விலை குறிட்யீடெண்ணுகிறது. இவ்வாறு வாரந்தோறும் குறிட்டெண் கணக்கிடப்படுகிறது. வாரக்குறியீட்டெண்களிலிருந்து மாதகுறியீடுகளும், அவைகளினின்று ஆண்டு குறியீடுகளும் பிறகு கணிக்கப்படுகின்றன.

பழைய குறியீட்டெண்ணிற்கும், புதியதற்கும் தொடர்பு அவசியம். இத்தொர்டர்பு கீழ்கண்ட சமன்பாட்டினுல் குறிக்கப் பட்டுள்ளது.

புதுவரிசை 100 = பழைய வரிசை 155.1

பழைய வரிசை எண்களை காட்டிலும் புதிய வரிசையில் எடுத்துக்கொள்ளப்பட்ட பொருள்களின் எண்ணிக்கை அதிகம்; விலைபுள்ளிகளின் எண்ணிக்கையும் அதிகம்; இவைகளை திரட்ட கருதப்படும் அங்காடிகளின் எண்ணிக்கையும் அதிகம். அடிப்படை ஆண்டும் வெகு அண்மையில் வந்துள்ளது. மற்றும் நிறைகள் தற்காலத்திற்கேற்ப புதுமுறையில் கணக்கிடப்பட்டுள்ளன.

கீழ்கண்ட பட்டியலில் சில ஆண்டுகளின் குறியீட்டெண்களைக் காணலாம்.

அட்டவணை 8: 1969-75 ஆண்டுகளுக்கான பகுதி குறியீட்டெண் களும், மொத்த குறியீட்டெண்களும்:

| ஆண்டு | மொத்த குறியீடு | பகுதிகள் 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1969-70 | 175.7 | 199.8 | 188.2 | 160.1 | 185.8 | 193.4 | 140.2 | 148.94 |
| 1970-71 | 180.6 | 199.8 | 184.9 | 162.7 | 191.0 | 189.5 | 151.5 | 160.4 |
| 1971-72 | 192.3 | 216.5 | 209.1 | 178.1 | 178.5 | 198.8 | 162 8 | 173.4 |
| 1972-73 | 218.5 | 250.1 | 249.1 | 187.6 | 236.4 | 208.4 | 171.6 | 183.4 |
| 1973-74 | 284.4 | 321.7 | 272.2 | 292.9 | 322.7 | 270.8 | 215.7 | 234.2 |
| 1974-75 | 306.4 | 355.7 | 310.1 | 322.0 | 284.9 | 327.0 | 267.0 | 252.6 |
| ஜனவரி 75 | 314.4 | 367.7 | 308.4 | 319.8 | 318.3 | 309.3 | 266.2 | 2 4.1 |
| பிப். 75 | 310.2 | 361.7 | 299.0 | 319.4 | 297.7 | 323.9 | 266.1 | 253.4 |

கருதப்பட்ட ஆண்டுகளில் எல்லா பகுதி குறியீட்டெண்களும். மொத்த குறியீட்டெண்ணும் அதிகமாகிக்கொண்டே வந்துள்ளன. 1972-ம் ஆண்டிற்கு பிறகு ஏற்றம் மேலும் அதிகம்.

கீழ்கண்ட பட்டியலில் சென்ற ஓர் ஆண்டில் விலைகள் எவ்வாறு ஏறியுள்ளன என்பதினைக் காணலாம்.

அட்டவணை 9: குறியீட்டெண்களில் ஏற்றம் 1973—74, 1974—75 ஆண்டுகளில்

| பகுதிகள் | 73 லிருந்து 74வரை ஏற்றம் | 74-லிருந்து 75 வரை ஏற்றம் |
|---|---|---|
| 1 | 28.6 | 10.6 |
| 2 | 9.3 | 13 6 |
| 3 | 56 1 | 9.9 |
| 4 | 36.1 | —11.7 |
| 5 | 29.9 | 21.1 |
| 6 | 25.7 | 2 .8 |
| 7 | 27.7 | 7.9 |
| மொத்த குறியீடு | 30.2 | 7.7 |

(பகுதிகளின் விவரம் அட்டவணையில் உள்ளது)

VI துய்ப்போர் விலை குறியீட்டெண்கள்:

பண்டங்களின் சில்லறை விலைகள் (Retail Prices)தாம் துய்ப்போர்களுக்கு உபயோகமானவை. எனவே சில்லறை விலை குறியீட்டெண்களைக் கணிப்பது மிகவும் அவசியம். இவைகளை (சி.வி.கு) அடிப்படையாகக் கொண்டுதான் துய்ப்போர் விலை குறியீட்டெண்கள் கணக்கடப் படுகின்றன.

ஒரு நாட்டில் உள்ள பலதரப்பட்ட மக்களுக்கும் ஏற்றவாறு குறியீட்டெண்களும் அமைய வேண்டும். லேபர் ப்யூரே (Labour-Bureau) என்ற நிறுவனம் மூன்று வகையான குறியீட்டெண்களை அச்சிட்டுள்ளது:—

i) தொழிற்சாலை தொழிலாளிக்கானவை.

ii) உடல் உழைப்பு செய்யாத ஊழியர்க்கானவை

iii) விவசாயத் தொழிலாளிகட் கானவை.

இவையல்லாமல், தனித்தனி மாநிலங்களும் தத்தமக்காக இத்தகைய குறியீட்டெண்களை வெளியிடுகிறுர்கள். ஆனுல் அவை அனைத்தையும் கணிக்கும் முறைகளில் ஒற்றுமை இருக்க முடியாது என்பது வெளிப்படை. ,பொதுவாக, ஐந்து பகுதிகளுக்கு

குறியீட்டெண்களை அமைப்பர். அவை 1) உணவுப்பொருட்கள் 2) எரிபொருள், மின்சாரம் 3) வாடகை 4) துணிமணிகள் 5) மற்றவைகள்.

குறியீட்டெண்களை ஒவ்வொரு வாரத்திற்கும், மாதத்திற்கும், ஒவ்வொரு ஆண்டிற்கும் தனித்தனியே வெளியிடுகின்றனர். இவற்றில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைக் கொண்டுதான், பாட்டாளிகளுக்குக் கூலிவிகிதங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன.

**a)** தொழிற்சாலை ஊழியருக்கான குறியீட்டெண்கள்.

1958—1959-ல் ஐம்பது ஊர்களில் நடத்தப்பட்ட குடும்ப வரவுசெலவு திட்ட விசாரணையிலிருந்து (Family Budget Enquiry) கிடைத்த விவரங்களைக் கொண்டுதான் 1962-லிருந்து இக் குறியீட்டெண்கள் வெளியிடப்பட்டு வருகின்றன. இவற்றின் அடிப்படை ஆண்டு—1960 = 100. பயன்படுத்தப்படும் வாய்பாடு லாஸ்பெஸ்ரேயின் வாய்ப்பாடுதான்.

**b)** உடல் உழைப்பு செய்யாத ஊழியரின் குறியீடுகள்:

இதற்கு அடிப்படை ஆண்டு 1960. 48 ஊர்களில் 5 பகுதிகளாகப் பிரிக்கப்பட்ட 180 பொருட்களைப்பற்றிய குறிப்புகளைச்சேகரித்து, இக்குறியீடு கணிக்கப்படுகிறது. CSO (Central Statistical Organisation-மத்திய புள்ளியியல் நிறுவனம்) 1958—1959ல் நாடு முழுவதிலும் குடும்ப வரவுசெலவு பற்றிய விசாரணை நடத்தி அவ்விசாரணையில் கிடைத்த விவரங்களிருந்து நிறைகளைக் கணக்கிட்டுள்ளது. நாடெங்கும் 100-750 ரூபாய் மாத வருமானம் பெறும் 30,000 குடும்பங்கள் இவ்விசாரணையில் பங்கெடுத்துக் கொண்டனர்.

**c)** விவசாயத் தொழிலாளரின் குறியீட்டெண்கள்:

இக்குறியீடுகளை மாநிலங்களுக்குத் தனியாகவும், நாட்டிற்குத், தனியாகவும், மாதாந்திர, வருடாந்திர அளவில் வெளியிடுகிறார்கள். இதன் அடிப்படை ஆண்டு 1960—61. இதற்கு உட்படும் பொருட்கள் நான்கு பகுதிகளாக்கியுள்ளார்கள்: - உணவு பொட்கள்; எரிபொருட்கள், மின்சாரம், துணிகள்; ஏனையவை. இவ்வெண்ணைக் கணிக்கலாமல் பெய்ரேயின் வாய்ப்பாடு பயன்படுகிறது.

அடுத்த அட்டவணையில் மூன்று குறியீட்டெண்களின் பட்டியல் உள்ளது.

அட்டவணை 10: 1971—75 ஆண்டுகளுக்கான நுய்ப்போர் விலை குறியீட்டெண்கள் (அடிப்படை, 1960 100)

| ஆண்டு | தொழிற் சாலை தொழிலாளிகள் உணவு | தொழிற் சாலை தொழிலாளிகள் உடை | தொழிற் சாலை தொழிலாளிகள் பொது | விவசாயத்தொழிலாளிகள் உணவு | விவசாயத்தொழிலாளிகள் பொது | நகரப்பற உடல்உழைப்பு செய்யாத தொழிலாளிகள் பொது |
|---|---|---|---|---|---|---|
| 1971 | 203 | 180 | 190 | 207 | 193 | 178 |
| 1972 | 216 | 195 | 202 | 228 | 210 | 189 |
| 1973 | 262 | 224 | 236 | 272 | 247 | 212 |
| 1974 | 342 | 301 | 304 | 371 | 332 | 259 |
| 1975 ஜனவரி | 367 | 317 | 326 | 414 | 369 | 280 |

Source : Monthly Abstract of Statistics, MAY 1975

விலைகளின் ஏற்றம் விவசாயத்தொழிலாளிகளைத்தான் அதிகமாக பாதித்துள்ளது. அவர்களின் உணவு குறியீட்டெண் 1975—ல், 1971—ஐ போல் இரு மடங்கு ஆகியுள்ளது. நகர்ப்புற தொழிலாளிகளின் குறியீட்டெண்களில்தான் ஏற்றம் சற்றுக் குறைவு.

பொதுவாக 1971—27 ஆண்டுகளில் அவ்வளவு ஏற்றம் இல்லை. மற்ற இரண்டு ஆண்டுகளில் குறியீட்டெண்கள் வெகு விரைவாக ஏறியுள்ளன என்பதனை காண்கிறோம்.

நாட்டின் பல ஊர்களில் தொழிற்சாலை தொழிலாளிகளின் குறியீட்டெண்கள் எவ்வாறு மாறியுள்ளன என்பதை அடுத்த அட்டவணை காட்டும்.

அட்டவணை 11: பல மாநகரங்களில் தொழிற்சாலை தொழிலாளர்களின் துய்ப்போர் விலைகுறியீட்டெண்கள் அடிப்படை 1960=100.

| ஆண்டு | கோயம்புத்தூர் | ஹைதராபாத் | சென்னை | மதுரை | கல்கத்தா | பம்பாய் | தில்லி | அனைத்துஇந்தியா |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1969 – 70 | 154 | 185 | 160 | 162 | 172 | 175 | 185 | 177 |
| 1970 – 71 | 163 | 189 | 170 | 183 | 182 | 182 | 199 | 186 |
| 1971—72 | 177 | 195 | 182 | 192 | 187 | 190 | 211 | 192 |
| 1972—73 | 189 | 211 | 203 | 206 | 197 | 203 | 222 | 207 |
| 1973—74 | 218 | 251 | 229 | 236 | 228 | 233 | 265 | 250 |
| செப்டம்பர் 74 | 319 | 308 | 308 | 353 | 308 | 291 | 354 | 334 |
| அக்டோபர் 74 | 319 | 316 | 311 | 363 | 314 | 297 | 350 | 335 |
| நவம்பர் 74 | 326 | 316 | 319 | 356 | 308 | 301 | 344 | 331 |
| டிஸம்பர் 74 | 329 | 321 | 323 | 348 | 297 | 298 | 342 | 326 |
| ஜனவரி 75 | 341 | 325 | 327 | 371 | 289 | 298 | 342 | 326 |
| பிப்ரவரி 75 | 353 | 320 | 326 | 372 | 279 | 300 | 335 | 325 |

பொதுவாக எல்லா குறியீடுகளுமே 1969—70 ஆண்டிலிருந்து பெப்ரவரி 75க்கு இரட்டடிப்பாயுள்ளன என்பது தெளிவாகிறது. சில மாநகரங்களில் பெப்ரவரியில் சற்றே இறங்குமுகம் தெரிகிறது.

VII பத்திரங்களின் விலை குறியீட்டெண்கள் (Index no. Secur.ty Prices)

அரசாங்க, மற்றும் அரசாங்கத்தைச் சார்ந்த பத்திரங்கள், கூட்டுப் பங்கு கம்பெனிகளின் கடன்பத்திரங்கள் (debentures) முன்னுரிமை பங்குகள் (Preference shares), மாறும் ஆதாயப் பங்கு பத்திரங்கள் (Variable dividend industrial securities), என்ற பகுதிகளுக்குத் தனித்தனியே குறியீட்டெண்களை வாராந்திர, மாதாந்தர, வருடாந்திரமாக ரிஸர்வ் பாங்க் ஆஃப் இந்தியா வெளியிடுகிறது. இவற்றின் அடிப்படை ஆண்டு 1961-62 விவரங்களுக்கு கீழ்க்காணும் பட்டியலைக் காண்க:—

அட்டவணை 12. பத்திரங்களின் விலை குறியீட்டெண்கள்

| வருடம் | அரசாங்க பத்தி-ரங்கள் | கூட்டுப் பங்கு கம்பெனி கடன் பத்தி-ரங்கள் | முன்-னுரிமை பத்தி-ரங்கள் | மற்றும் ஆதாய பங்கு பத்தி-ரங்கள் |
|---|---|---|---|---|
| 1955—66 | 94.6 | 93.9 | 94.4 | 75.9 |
| 66—67 | 94.3 | 91.8 | 90.9 | 81.1 |
| 67—68 | 95 5 | 91.5 | 87.1 | 77.5 |
| 68—69 | 98.3 | 92.6 | 86.1 | 87.9 |
| 69—70 | 99 0 | 93.5 | 87.6 | 95.1 |

இதே பட்டியல் 1970—71 ஆண்டை அடிப்படையாகக் கொண்டு கணக்கிடப்பட்டுள்ளது. அப்பட்டியலில் உள்ள விவரங்கள் பின்வருமாறு.

அட்டவணை 13: புது வரிசை—பத்திரங்களின் விலை குறியீட்டெண்கள்

| வருடம் | அரசாங்க பத்தி-ரங்கள் | கூட்டுப் பங்கு கம்பெனி கடன் பத்திரங்கள் | முன்னுரிமை பத்தி-ரங்கள் | மாறும் ஆதாய பங்கு பத்திரங்கள் |
|---|---|---|---|---|
| 1971—72 | 98.5 | 98.8 | 97.7 | 95.5 |
| 72—73 | 98 8 | 97.7 | 103.1 | 93.7 |
| 73—74 | 98.8 | 97.0 | 125.5 | 94.0 |
| 74—75 | 96.5 | 95.0 | 99.4 | 87.0 |

இவற்றைத் தவிர மாநிலப் பட்டியல்கள், பம்பாய், மதராஸ், கல்கத்தா, அஹமதாபாத், டில்லி போன்ற நகரங்களில் தனித் தனியே கிடைக்கும்.

VIII கனிப் பொருள் உற்பத்திக் குறியீடு

இன்டியன் ப்யூரோ ஆஃப்மைன்ஸ் (Indian Bureau of mines) என்ற நிறுவனம் இந்த குறியீட்டெண்களை வெளியிடுகிறது. அடிப் படை ஆண்டு—1970. நான்கு பகுதிகளிக்கான தனித்தனி குறியீடுகளும் கணிக்கப்படுகின்றன. பகுதிகளின் விவரங்களும் நிறைகளும் அட்டவணை 64-லிலும், 70—75 ஆண்டுகளுக்கான குறியீட்டெண்கள் அட்டவணை 15-லிலும் உள்ளன.

அட்டவணை 14: கனிப்பொருள் பகுதிகளும் நிறைகளும்

| | பகுதிகள் | நிறைகள் |
|---|---|---|
| A. | நிலக்கரி, மற்றும் லிக்னைட் | 623.6 |
| B. | இயற்கை வாயுவும், கச்சா பெட்ரோலியம் முதலியன | 166.5 |
| C. | உலோகங்கள்: இரும்பு (68.3) மாங்கனீஸ் (19.3) ஏனையவை (23.2) | 121.8 |
| D. | அலோகங்கள் சுண்ணும்பு (48.2) மைகா (5.1) ஏனையவை (34.8) | 88.1 |
| | மொத்தம் | 1000.0 |

அட்டவணை 15: கனிப்பொருள் உற்பத்திக் குறியீட்டெண்கள்

| ஆண்டு | குறியீட்டெண் |
|---|---|
| 1970 | 100 |
| 1971 | 101 |
| 1972 | 105 |
| 1973 | 104 |
| 1974 | 112 |
| 1973. ஜனவரி | 137 |

Source: Monthly Abstract of Statistics, MAY, 75

IX நாட்டின் நிகர ஆக்கக் குறியீடுகளும் தலா (per capita) நிகர ஆக்கக் குறியீடுகளும்

இவைகளை ரிஸர்வ் பாங்க் ஆஃப் இந்தியா என்ற நிறுவனம் 1960—61 ஆண்டினை அடிப்படையாகக் கொண்டுவெளியிடுகிறது. அடுத்த பட்டியலில் 1960—61 லிருந்து 1973—74 ஆண்டுகளுக் கான இரு குறியீட்டெண்களையும் காணலாம். இரண்டு வரிசை களும் 1960—61-ம் ஆண்டுவிலை அளவில் கணக்கிடப் பட்டுள்ளன.

அட்டவணை 16: நிகர ஆக்க குறியீடுகளும், தலா நிகர ஆக்கக் குறியீடுகளும்

| ஆண்டு | நிகர ஆக்க குறியீடு | தலா நிகர ஆக்கக் குறியீடு |
|---|---|---|
| 1960—61 | 100.0 | 100.0 |
| 1961—62 | 103.5 | 101,2 |
| 1962—63 | 105.5 | 100.8 |
| 1963—64 | 113.3 | 104.1 |
| 1964—65 | 119.7 | 109.6 |
| 1965—66 | 113.7 | 101.7 |
| 1966—67 | 115.0 | 100.8 |
| 1967—68 | 125.2 | 107.4 |
| 1968—69 | 129.5 | 108.5 |
| 1969—70 | 136.8 | 112.2 |
| 1970—71 | 143.5 | 115.1 |
| 1971—72 | 145.5 | 114.0 |
| 1972—73 | 144.2 | 110.4 |
| 1973—74 | 148.7 | 111.3 |

மூலம்: Monthly Abstract of Statistics, May, 1972

X தொழிற் உற்பத்தி குறியீட்டெண்கள்—புதிய வரிசை

வெளியிடுவோர்—CSO நிறுவனம். அடிப்படை ஆண்டு 1970; இவைகள் 1974—ம் ஜூனிலிருந்து வெளியிடப்படுகின்றன.

இதில் இடம் பெறுபவை:—உணவுத்துறைகள்; டீ; பானங்கள், சிகரெட், பஞ்சணல், காலணிகள், மரச்சாமான்கள், காகிதம் மற்றும் அதன்பொருள்கள், தோல்பொருள்கள், ரப்பர், ரசாயனப் பொருள்கள், உறவகைகள், மருந்து வகைகள், ஸேல் முதலியன, நெருப்பெட்டிகள், பெட்ரோலியம் பொருள்கள், சிமெண்ட், அடிப்படை உலோகங்கள், இரும்பு-எஃக்கு பொருள்கள், மற்ற உலோகப் பொருள்கள், பொறி செய்பொருள்கள், மின்சாரக் கருவிகள், போக்குவரத்துச் சாதனங்கள், மின்சார உற்பத்தி முதலியன,

அட்டவணை 17: தொழிற் உற்பத்தி குறியீட்டெண்கள்

| ஆண்டு | பொது குறியீடு | சுரங்கத் துறை | எல்லா பொறிசெய் பொருள்கள் | |
|---|---|---|---|---|
| 1970 | 184 3 | 149.9 | 178.9 | அடிப்படை 1960 ஆண்டு |
| 1971 | 186.1 | 153.4 | 178.9 | |
| 1972 | 199.4 | 164.2 | 191.4 | |
| 1973 | 200.7 | 163.5 | 193.3 | |

| | | | | |
|---|---|---|---|---|
| 1974 ஜுன் | 11.14 | 107.0 | 111.2 | அடிப்படை 1970 ஆண்டு |
| ஜுலை | 117.9 | 110 0 | 118.6 | |
| ஆகஸ்ட் | 115.2 | 108.0 | 114.9 | |
| செப்டம்பர் | 114 1 | 112 0 | 113.0 | |

மூலம்: Monthly Abstract of Statistics, May 1975

XI பத்திரங்களின் விலை வு குறியீட்டெண்கள்

RBI நிறுவனம் தொழிற்சாலைகளுக்கான பத்திரங்களின் விலைவு குறியீட்டெண்களை வெளியிடுகிறது. மொத்தமாக இந்தியா நாட்டிற்கும்' குறிப்பாக ஐந்து மாநகரங்களுக்கான குறியீட்டெண்கள் RBI-மாதாந்திர இதழில் இடம் பெறுகின்றன. இவைகளுக்கான அடிப்படை ஆண்டு 1970-71. முன்னுரிமை பங்குகளுக்கும், சாதாரணப் பங்குகளுக்கும் தனிகுறியீடுகள் உண்டு. ஒவ்வொன்றிலும் பகுதிகள் பிரிக்கப்பட்டு, தனித்தனி குறியீடுகளும் கணக்கிடப்படுகின்றன. அடுத்த அட்டவணைகளில் சில குறியீட்டெண்களைக் காணலாம்.

அட்டவணை 18: பங்குகளின் குறியீட்டெண்கள்-பல மாநகரங்களிலும், மொத்தமாகவும்

| ஆண்டு | இந்தியா | பம்பாய் | கல்கத்தா | சென்னை | டெல்லி | அஹமதாபாத் |
|---|---|---|---|---|---|---|
| முன்னுரிமை பங்குகள் | | | | | | |
| 1973—74 | 107,02 | 110.44 | 106.97 | 99.76 | 100.88 | 116.67 |
| 1974—74 | 111.89 | 118 30 | 111.67 | 101.66 | 102.29 | 121.02 |
| சாதாரண பங்குகள் | | | | | | |
| 1973—74 | 99.60 | 100.20 | 91.69 | 116 69 | 90.85 | 107.71 |
| 1974—75 | 90 88 | 91.06 | 80.10 | 115 09 | 80.34 | 98.47 |

மூலம்: RBI—இதழ் ஏப்ரல் 197.5

## பயிற்சி கணக்குகள்

1. குறியீட்டெண்களைக் கணக்கிடுவதற்கு ஃபிஷர் தரும் வாய்பாடு என்ன? அது காலத்திருப்பச்சோதனைக்கு உட்படுகிறது என்று காண்பி. (பி.காம். 1975)

2. குறியீட்டெண் என்றால் என்ன? பொருளாதாரத் துறையிலும் வியாபாரத் துறையிலும் அதன் முக்கியத்துவம் என்ன? (பி.காம்)

3. காலத்திருப்பச் சோதனை, மற்றும் காரணித் திருப்பசோதனை இரண்டினையும் நன்கு விளக்குக. ஃபிஷரின் குறியீட்டெண் இரண்டு சோதனைகளுக்கும் உட்படுகின்றது என்று காட்டுக. இப்படி உட்படாத மற்ற குறியீட்டெண்களை ஒதுக்கிவிட வேண்டியது தானா?
(எம்.காம்)

4. நடப்பு ஆண்டின் நிறைகள், அடிப்படை ஆண்டின் நிறைகள் —இவைகளை விளக்குக. (பி.ஏ.)

5. கீழ்கண்ட குறியீடுகளை கணக்கிடும் முறைகளை சுருக்கமாக விளக்குக:—

(i) சார்பிகளின் சாதாரண சராசரி முறை

(ii) நிறையிட்ட மொத்த குறியீடு முறை

(iii)சாதாரண மொத்த முறை

ஒவ்வொன்றிற்கும் ஓர் உதாரணம் தருக. (ஐ ஏ.எஸ்)

6. குறியீட்டெண்கள் கீழ்கண்டதுறைகளில் எவ்வாறு பயன் படுகின்றன என்பதனை விளக்குக— (i) வியாபார நிலைகளைப் பகுத்தாய்வதற்கு (ii) பொருளாதார செயல் (economic activity)களை விடுவதற்கு (iii) உண்மையான கூலிகளை நிர்ணயிப்பதற்கு
(ஐ ஏ.எஸ்)

7. விலை குறியீட்டெண்களின் உபயோகம் என்ன? அவைகளை கணக்கிடுவதில் நாம் எதிர்பார்க்கக் கூடிய பிரச்சினைகள் எவை.
(பி ஏ ஆனர்ஸ்)

8. நிறையிடாத மற்றும் நிறையிடப்பட்ட குறியீட்டெண்களில் உள்ள வித்தியாசங்கள் என்ன? நிறைகள் ஏன் தேவைப் படுகின்றன? (பி.ஏ.ஆனர்ஸ்)

9. ஒரு குறியீட்டெண் நல்லது என்று கருத எந்தெந்த தெளி விலக்கணங்கள் தேவை? (பி.காம்)

10. கீழ்கண்டவற்றை விளக்குக- (அ) அடிப்படை மாற்றுதல் (ஆ) புரி இணைத்தல் (இ) குறைவாக்குல். (எம்.காம்)

11. வாழ்க்கைத்தர குறியீட்டெண் என்றால் என்ன? அதனை எப்படி கணக்கிடுவது? (பி.காம்)

12. குறியீட்டெண்களில் திருப்புதல் என்றால் என்ன? கால திருப்புச் சோதனை, மற்றும் காரணி திருப்புச்சோதனை இரண்டினையும் விவரித்துக் கூறுக. இரண்டுசோதனைக்கும் உட்படும் ஒரு குறியீட்டெண் எது?

13. கீழ்கண்ட விவரங்களிலிருந்து 1944—ம் ஆண்டை அடிப் படையாக வைத்து மற்ற ஆண்டுகளுக்கு குறியிட்டெண்களை கண்டுபிடி.

14. 1965-ம், மற்றும் 1966-ம் ஆண்டுகளில் சில பொருள்களின் விலைகள் கீழ் உள்ளன. மொத்த விலை குறியீட்டெண்ணைக் கண்டு பிடி.

| பொருள் | விலைகள் 1965 | (ரூபாய்) 1975 |
|---|---|---|
| A | 0.90 | 1.10 |
| B | 0.29 | 0.35 |
| C | 0.45 | 0.65 |
| D | 0.28 | 0.40 |
| E | 0.85 | 1.15 |
| மொத்தம் | 2.77 | 3 65 |

15. மூன்று பொருள்களின் விலைகளும், அளவுகளும் தரப் பட்டுள்ளன. அவைகளிலிருந்து விலைசார்பிகளைக் கண்டுபிடி. மதிப்புகளை நிறையாக்கி, கூட்டுச்சராசரி முறையிலும், பெருக்கல் சராசரி முறையிலும் குறியிட்டெண்ணை நடப்ப ஆண்டிற்கு நிறுவு.

| பொருள் | $p_0$ | $q_0$ | $p_0$ |
|---|---|---|---|
| சர்க்கரை | 3.0 | 20கிலோ | 4.0 |
| மாவு | 1.5 | 40 ,, | 1.6 |
| பால் | 1.0 | 10 லிட்டர் | 1.5 |

16. லாஸ்பெய்ரேயின் குறியீட்டெண்ணை கீழ்கண்ட விவரங் களுக்கு கணக்கிடு.

| | விலைகள் | | அளவுகள் |
|---|---|---|---|
| பொருள்கள் | 1965 | 1975 | 1965 |
| A | 0.90 | 1.10 | 2 |
| B | 0.29 | 0.35 | 3 |
| C | 0.45 | 0.65 | 1 |
| D | 0.28 | 0.40 | 3 |
| E | 0.85 | 1.15 | 1 |

17. கீழ்கண்ட விவரங்களுக்கு, இரண்டு ஆண்டுகளின் அளவை களை சராசரியாக்கி நிறையிட்டு குறியிட்டெண் கணக்கிடுக.

| | விலைகள் | | அளவுகள் | |
|---|---|---|---|---|
| பொருள் | அடிப்படை | நடப்பு | அடிப்படை | நடப்பு |
| A | 20 | 25 | 10 | 16 |
| B | 25 | 28 | 9 | 7 |
| C | 40 | 40 | 20 | 24 |

18. கீழ்காணும் விவரங்களுக்கு ஃபிஷரின் குறியீட்டெண் கண்டுபிடி

(a)

| பொருள்கள் | 1000 டன்களில் உற்பத்தி அடிப்படை | நடப்பு | விலைகள் அடிப்படை ரூ. அ | நடப்பு ரூ அ |
|---|---|---|---|---|
| 1 | 71 | 26 | 3—8 | 3—2 |
| 2 | 107 | 83 | 2—0 | 1—14 |
| 3 | 62 | 48 | 2—9 | 1—12 |

(எம்.ஏ.)

(b)

| பொருள்கள் | அடிப்படை ஆண்டு விலை | அளவு | நடப்பு ஆண்டு விலை | அளவு |
|---|---|---|---|---|
| A | 6 | 50 | 10 | 56 |
| B | 2 | 100 | 2 | 120 |
| C | 4 | 60 | 6 | 60 |
| D | 10 | 30 | 12 | 24 |
| E | 8 | 40 | 12 | 36 |

(எம்.ஏ.)

(c)

| பொருள்கள் | 1966 $p_0$ | $q_0$ | 1967 $p_1$ | $q_1$ |
|---|---|---|---|---|
| அரிசி | 9.3 | 100 | 4.5 | 90 |
| கோதுமை | 6.4 | 11 | 3.5 | 10 |
| சோளம் | 5.1 | 5 | 2.7 | 3 |

(பி.காம்)

(d)

| பொருள்கள் | அடிப்படை ஆண்டு விலை | அளவு | நடப்பு ஆண்டு விலை | அளவு |
|---|---|---|---|---|
| அரிசி | 4 | 20 | 6 | 30 |
| கோதுமை | 5 | 10 | 4 | 8 |
| எண்ணெய் | 3 | 8 | 4 | 6 |
| நெய் | 2 | 10 | 2 | 15 |

இவ்விவரங்களுக்கு L, P, ME, பௌலி குறியீட்டெண்களையும் கணக்கிடு.

(e)

| பொருள்கள் | அடிப்படை ஆண்டு 1970 விலை | அளவு | நடப்பு ஆண்டு 1972 விலை | அளவு |
|---|---|---|---|---|
| A | 12 | 11 | 16 | 12 |
| B | 15 | 13 | 20 | 12 |
| C | 20 | 15 | 25 | 15 |
| D | 22 | 20 | 30 | 14 |
| E | 18 | 20 | 32 | 16 |

| (f) பொருள்கள் | விலை | அளவு | விலை | அளவு |
|---|---|---|---|---|
| கூலம் | 0.81 | 3054 | 0.94 | 2585 |
| கோதுமை | 1.09 | 797.4 | 1.21 | 812.6 |
| உருளைக்கிழங்கு | 0.95 | 416.1 | 1.36 | 329.1 |
| சர்க்கரை | 0.07 | 10.044 | 0.04 | 13.820 |
| பார்லி | 0.06 | 197.7 | 0.63 | 280.2 |

—மற்ற குறியீட்டெண்களையும் கண்டுபிடி.

| (g) பொருள்கள் | உற்பத்தி டன்களில் | | விலைகள் | |
|---|---|---|---|---|
| | 1938—39 | 1941—42 | 1938—39 | 1941—42 |
| அரிசி | 4100 | 4955 | 107 | 151 |
| கோதுமை | 1265 | 1214 | 69 | 85 |
| கம்பு | 643 | 640 | 72 | 87 |
| ராகி | 699 | 824 | 64 | 81 |

—ME குறியீட்டெண் என்ன?

(டிப்ளமா 1945)

| (h) பொருள் | உற்பத்தி | | விலை | |
|---|---|---|---|---|
| | 1936—37 | 1942—43 | 1936—37 | 1942—43 |
| அரிசி | 26.8 | 23.0 | 150 | 330 |
| கோதுமை | 7.9 | 9.0 | 112 | 188 |
| பஞ்சு | 0.7 | 0.5 | 626 | 1174 |
| சணல் | 1.6 | 1.6 | 193 | 336 |

—மற்றவைகளையும் கணக்கிடு.

| (k) பொருள்கள் | அடிப்படை ஆண்டு | | நடப்பு ஆண்டு | |
|---|---|---|---|---|
| | p | q | p | q |
| 1 | 20 | 4 | 24 | 5 |
| 2 | 15 | 5 | 24 | 3 |
| 3 | 30 | 2 | 12 | 5 |
| 4 | 50 | 1 | 40 | 2 |

19. குறிப்பிட்ட குறியீட்டெண்களைக் கண்டுபிடி.

| பொருள்கள் | விலைகள் | | | | | நிறைகள் |
|---|---|---|---|---|---|---|
| | 1940 | 1941 | 1942 | 1943 | 1944 | |
| A | 6 | 8 | 9 | 10 | 8.5 | 10 |
| B | 4 | 3.25 | 5 | 6 | 5.5 | 8 |
| C | 13 | 12 | 14 | 15 | 13 | 6 |
| D | 9 | 11 | 10 | 11 | 12 | 7 |
| E | 27 | 31 | 33 | 34 | 32 | 4 |

(i) விலைசார்பிகளின் சாதாரண கூட்டுச்சராசரி குறியீட்டெண்.
(ii) ,, ,, பெருக்கல் ,, ,,
(iii) 1941, 1942 ஆண்டிற்கான நிறையிட்ட குறியீட்டெண்.

20. 1949—1952 ஆண்டுகளுக்கான கல்கத்தா நகரின் வாழ்க்கைத் தரகுறியீட்டெண்ணைக் கணக்கிடு.

பகுதி குறியீட்டெண்கள்

| ஆண்டு | உணவு | உடை | விறகு, விளக்கு | வீட்டு வாடகை | ஏனையவை |
|---|---|---|---|---|---|
| 1949 | 383.2 | 440.4 | 469.1 | 110.0 | 279.2 |
| 1950 | 394.0 | 432.9 | 352.0 | 116.9 | 287.1 |
| 1951 | 396.7 | 551.4 | 366.0 | 116.9 | 291.8 |
| 1952 | 380.2 | 504.2 | 336.8 | 116.9 | 283.6 |
| நிறைகள் | 71.28 | 2.89 | 9.27 | 6.69 | 98.7 |

21. கீழ்க்கண்ட பட்டியலிலிருந்து 1940-ம் ஆண்டின் வாழ்க்கைத்தர குறியீட்டெண்ணைக் கணக்கிடு. (எம்.ஏ. 1951)

| பொருள் | அலகு | விலைகள் 1939 | 1940 | நிறைகள் |
|---|---|---|---|---|
| | | ரூ.அ | ரூ.அ | |
| அரிசி | மணங்கு | 8—0 | 10—0 | 8 |
| கோதுமை | ,, | 5—0 | 8—0 | 15 |
| பருப்புகள் | ,, | 6—0 | 7—0 | 6 |
| சர்க்கரை | சேர் | 0—4 | 0—6 | 4 |
| நெய் | ,, | 1—4 | 2—0 | 5 |
| துணி | கஜம் | 0—8 | 0—10 | 10 |
| விறகு | மணங்கு | 1—4 | 1—14 | 5 |
| சிகரெட் | பாக்கெட் | 0—5 | 0—7 | 3 |
| பேப்பர் | குயர் | 0—3 | 0—5 | |
| மண்ணெண்ணெய் பாட்டில் | | 0—4 | 0—4 | 3 |

குறிப்பு: 1 ரூபாய் = 16 அணுக்கள்; $p_0 = p_1$ = நிறைகள் என்று வைத்துக் கொள்க.

22. பெருக்கல் சராசரியைப் பயனுக்கி 1950 அடிப்படையில் ஒரு குறியீட்டெண்ணைக் கண்டுபிடி.

| பொருள் | நிறை | விலைகள் 1950 ரூ. அ. பை | 1951 ரூ. அ. பை |
|---|---|---|---|
| 1 | 20 | 8—0—0 | 12— 0—0 |
| 2 | 12 | 2—4—0 | 2—13—0 |
| 3 | 4 | 0—0—9 | 0— 0-9 |
| 4 | 8 | 1—0—0 | 1—12—0 |
| 5 | 6 | 20—0—0 | 22— 0—0 |

குறிப்பு: 1 ரூ. = 16 அணுக்கள்; 1 அணு = 12 பைக்கள்.

(பி. ஏ.)

23. கீழ்க்கண்ட விவரங்களுக்கு ஒரு நிறையிட்ட கூட்டுச்சராசரி குறியீட்டெண்ணைக் கண்டுபிடி.

| பொருள்கள் | அலகு | அளவு | விலைகள் (ரூ.) 1963 | 1973 |
|---|---|---|---|---|
| சிமென்ட் | 100 பவு. | 500 பவு. | 5.0 | 8.0 |
| மரம் | கன அடி | 2000 கன அடி | 9.5 | 14.2 |
| எஃகுத் தகடுகள் | அந்தர் | 50 அந்தர் | 34.0 | 42.0 |
| செங்கல் | 1000 க்கு | 20,000 | 12.0 | 24.0 |

(பி. ஏ. ஆனர்ஸ்)

24. ஒரு குடும்பச் செலவு பட்டியல் அடியில் வருமாறு உள்ளது. 1963-ம் ஆண்டை அடிப்படையாக வைத்து 1973-ம் ஆண்டின் வாழ்க்கைத்தர குறியீட்டெண் ஒன்றைக் கண்டுபிடி.

(பி. எஸ்ஸி. 1975)

| பொருள் | 1963 விலை | 1963 அளவு | 1973 விலை | 1973 அளவு |
|---|---|---|---|---|
| அரிசி | 4.5 | 6 | 8.5 | 5 |
| பருப்பு வகைகள் | 3.0 | 2 | 5.5 | 2 |
| காய்கறிகள் | 1.5 | 2 | 2.5 | 2 |
| எண்ணெய், நெய் | 6.0 | 3 | 9.0 | 2 |
| மாமிசம், மீன் | 6.5 | 1 | 8.0 | 1 |
| மசாலாப் பொருள்கள் | 3.0 | 1 | 4.5 | 1 |
| விறகு | 4.0 | 2 | 7.0 | 2 |

25. கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து ஒரு வாழ்க்கைத்தரகுறியீட்டெண்ணை நிறுவுக—(1) மொத்தச் செலவுமுறை (2) குடும்ப வரவு–செலவு முறை.

| பொருள் | 1934-ன் அளவுகள் | 1930-ல் விலை ரூ. அ | 1934-ல் விலை ரூ. அ |
|---|---|---|---|
| அரிசி | 6 மணங்கு | 5 –12 | 6—0 |
| கோதுமை | 6 ,, | 5—0 | 8—0 |
| பருப்பு | 1 ,, | 6—0 | 9 –0 |
| அர்ஹார் | 6 ,, | 8—0 | 10—0 |
| நெய் | 4 சேர் | 2—0 | 1—8 |
| சர்க்கரை | 1 மணங்கு | 20—0 | 15—0 |

[குறிப்பு: (1) வாய்பாடு= $\frac{\Sigma p_1 q_0}{\Sigma p_0 q_0} \times 100$.

(2) வாய்பாடு= $\frac{\Sigma PW}{\Sigma W}$; $P = p_1/p_0^{\times 100}$; $W = p_0 q_0$]

26. 1970 ஏப்ரல் மாதத்திற்கு ஒரு வாழ்க்கைத்தர குறியீட்டெண்ணைக் கணக்கிடு.

| பகுதி | நிறை | பகுதி குறியீட்டெண் (ஏப்ரல் 1970) |
|---|---|---|
| உணவு | 42 | 358 |
| விறகு | 8 | 275 |
| துணிமணிகள் | 10 | 312 |
| வீட்டுவாடகை | 15 | 240 |
| கல்வி | 9 | 384 |
| மருத்துவம் | 4 | 256 |
| ஏனையவை | 12 | 425 |

(பி.எஸ்ஸி 1975)

27 சென்னையில் 1930—ம் ஆண்டின் மொத்த விலை குறியீட்டெண்களை—

(i) விலைசார்பிகளின் கூட்டுச் சராசரி முறையில்

(ii) ,, இடைநிலை ,,

(iii) ,, பெருக்கல் ,,

28 அடியில் கண்ட விவரங்களுக்கு துய்ப்போர் விலைகுறியீட்டெண்ணை கணக்கிடு. (ஐ.ஏ.எஸ்)

| பகுதி | குறியிட்டெண் | நிறைகள் |
|---|---|---|
| உணவு | 352 | 48 |
| விறகு, விளக்கு | 220 | 10 |
| உடை | 230 | 8 |
| வீட்டு வாடகை | 160 | 12 |
| ஏனையவை | 190 | 13 |

29 இங்கிலாந்து நாட்டின் சில புள்ளி விவரங்கள் கீழ்வருமாறு. ஒரு குறியீட்டெண்களை கணக்கிடுக. (பி.எஸ்ஸி.75)

| பகுதி | நிறை | குறியீட்டெண் |
|---|---|---|
| உணவு | 314 | 105.4 |
| சாராயம், குடிவகைகள் | 63 | 103.5 |
| புகையிலை | 74 | 100.0 |
| வீட்டுவசதி | 107 | 111.1 |
| விறகு, விளக்கு | 66 | 110.2 |
| நீடித்த பொருள்கள் | 62 | 101.3 |
| துணிமணிகள், காலணிகள் | 95 | 104.2 |
| போக்குவரத்து | 100 | 100.7 |
| ஏனையாவை | 63 | 103.2 |
| வேலையாட்கள் | 56 | 105.2 |

30 1955—ஆண்டை அடிப்படையாக்கி, 1960—ம் ஆண்டின் ஃபிஷரின் விழுமிய குறியீட்டெண்ணை கணக்கிடு.

| | 1955 | | 1960 | |
|---|---|---|---|---|
| பொருள் | ($p_0$) விலை | அளவு ($q_0$) | விலை ($p_1$) | அளவு ($q_1$) |
| A | 20.5 | 292.1 | 22.4 | 304.2 |
| B | 24.2 | 82.5 | 28.5 | 95.2 |
| C | 15.1 | 93.4 | 19.4 | 98.6 |
| D | 26.4 | 49.5 | 32.8 | 56.2 |
| E | 18.2 | 24.3 | 19.1 | 25.6 |

31. 1948-49 விலைகளின் அடிப்படையில் நான்கு ஆண்டுகளில் நம் நாட்டில் முதலீடான தொகைகள் (கோடி ரூ. அளவில்) கீழே உள்ளன. 1950—51 ம் ஆண்டின் அடிப்படையில் சாதாரணமான ஒரு முதலீடு குறியீட்டெண்ணை (Investment Index Number) நிறுவுக.
(எம்.ஏ. 1966

| ஆண்டு | முதலீடு | ஆண்டு | முதலீடு |
|---|---|---|---|
| 1950—51 | 721 | 1958—59 | 1317 |
| 1955—56 | 1261 | 1959—60 | 1482 |
| 1956—57 | 1446 | 1960—61 | 1826 |
| 1957—58 | 1678 | 1961—62 | 1736 |

32 கீழேயுள்ள பட்டியலில் 1939—ம் ஆண்டிலிருந்து 1954—ஆண்டுவரையிலான விலைகுறியீட்டெண்கள் உள்ளன. அடிப்படை

ஆண்டை 1939 லிருந்து 1946—ம் ஆண்டாக மாற்றி மொத்த பட்டியலையும் அமைக்கவும்

| | | | |
|---|---|---|---|
| 1939 | 100 | 1947 | 380 |
| 1940 | 110 | 1948 | 370 |
| 1941 | 120 | 1949 | 350 |
| 1942 | 200 | 1950 | 360 |
| 1943 | 320 | 1951 | 348 |
| 1944 | 400 | 1952 | 340 |
| 1945 | 410 | 1953 | 320 |
| 1946 | 400 | 1954 | 300 |

33 பட்டியலில் இடம் பெற்றுள்ள பொருள்களுக்கு விலை சார்பிகளை கண்டுபிடி. குறிப்பிட்ட நிறைகளை பயன்படுத்தி, உணவு பொருள்களுக்கு ஒரு குறியிட்டெண்ணை நிறுவு.

| பொருள் | அலகு | விலை 1939 | விலை 1953 | நிறை. |
|---|---|---|---|---|
| அரிசி | சேர் | .07 | .45 | 22 |
| பட்டாணி | ,, | .07 | .50 | 6 |
| கோதுமை | ,, | .09 | .51 | 3 |
| சோளம் | ,, | .07 | .45 | 1 |
| பாஜ்ரா | ,, | .08 | .46 | 4 |
| துவரை | ,, | .12 | .54 | 4 |
| பருப்பு | ,, | .11 | .49 | 1 |
| நாட்டுச்சர்க்கரை | ½ சேர் | .06 | .27 | 1 |
| சர்க்கரை | ,, | .24 | .88 | 5 |
| டீ | பவுண்டு | .61 | 2 52 | 2 |
| மீன், உலர்ந்தது | டஜன் | .06 | .21 | 3 |
| ,, புதியது | ஒன்று | 1.05 | 3.05 | 1 |
| ,, பிரான் (prauwn) | டஜன் | .40 | 1.75 | 2 |
| ,, பம்லோஸ் (bmlos) | ,, | .12 | .80 | 2 |
| ஆட்டிறைச்சி | ½ சேர் | .28 | 1.07 | 5 |
| பால் | ,, | .30 | 1.00 | 7 |
| வனஸ்பதி | 2 பவு | .75 | 2.50 | 2 |
| உப்பு | சேர் | .08 | .15 | 1 |
| மிளகாய், உலர்ந்தது | ½ சேர் | .20 | 1.03 | 3 |
| புளி | ,, | .07 | .36 | 2 |
| மஞ்சள் | ,, | .12 | .80 | 2 |
| உருளைக்கிழங்கு | ,, | .07 | .24 | 1 |
| வெங்காயம் | ,, | .05 | .07 | 1 |
| கத்திரிக்காய் | ,, | .12 | .22 | 5 |

| | | | | |
|---|---|---|---|---|
| பூசணி | ,, | .07 | .22 | 5 |
| தேங்காய் எண்ணெ | ,, | .16 | .85 | 2 |
| நல்ல எண்ணெ | ,, | .13 | .75 | 2 |
| டீ, தயாராயுள்ளது (readymade) | கப் | .04 | .06 | 5 |

மற்றும் — உணவு பொருள்குறியீட்டெண்ணின் நிறை 53: விளக்கு. விறகு குறியீட்டெண்—301. 2, அதன் நிறை = 8; துணி மணிகள்—குறியீடு = 407.7, நிறை = 9; வீட்டுவாடகை—குறியீடு= 106.3, நிறை 14; ஏனையவைகள் குறியீடு 346.7, நிறை = 16—என்றால், வாழ்க்கைத்தர குறியீட்டெண் எவ்வளவு?

34) கீழுள்ள விவரங்களிலிருந்து, குறிப்பிட்ட குறியீட்டெண்களை கணக்கிடு.

| பொருள்கள் | ஆண்டுகள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1953 | | 1954 | | 1955 | | 1956 | |
| | விலை | அளவு | வி | அ | வி. | அ | வி | அ |
| பஞ்சு துணிகள் | .338 | 4521.0 | .350 | 4125.2 | .349 | 4384.2 | .348 | 4339.1 |
| கம்பளி | 1.729 | 503.8 | 1.706 | 389.9 | 1.421 | 428.2 | 1.371 | 454.9 |
| ரேயான் | .351 | 1223.0 | .340 | 1154.8 | .341 | 1419.2 | .320 | 1201.1 |
| பட்டு. | 5.295 | 5.4 | 4.920 | 6 4 | 45.94 | 7.2 | 4.486 | 7.7 |

1) சாதாரண மொத்த விலை குறியீட்டெண் = $\Sigma p_1/\Sigma p_0$ (ii) சாதாரண அளவு குறியீட்டெண் m = $\Sigma q_1/\Sigma q_0$ (iii) சாதாரண கூட்டுச் சராசரி விலை சார்பிகள் குறியீட்டெண் = $\Sigma (p_1/p_0)$ (ir) அதே போன்ற அளவு குறியீட்டெண் = $\Sigma (q_1/q_0)$ (v) L, p— குறியீட்டெண்கள்

35) நிலை அடிப்படை குறியீட்டெண், சங்கிலி அடிப்படை குறியீட்டெண் இவைகளை விளக்குக. ஒன்றை மற்றொன்றாய் மாற்றுவது எப்படி என்று விளக்குக. (பி.எஸ்ஸி. 75)

36) கீழ்கண்ட விவரங்களிலிருந்து சங்கிலி குறியீட்டெண்களையும், நிலை அடிப்படை குறியீட்டெண்களையும் கணக்கிடு.

| ஆண்டுகள் | 1948 | 49 | 50 | 51 | 52 | 53 | 54 | 55 | 56 | 57 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| விலைகள் | 78 | 88 | 76 | 78 | 94 | 99 | 102 | 112 | 99 | 75 |

37) 1958—ம் செப்டம்பர் மாதம் 13-ம் தேதியுடன் முடியும் வாரத்திற்கான பகுதி விலை குறியீட்டெண்களின் பட்டியல் இங்

குள்ளது. அடிப் படை—1939—ம் ஆகஸ்டுடன் முடியும் ஆண்டு. மொத்த விலை குறியீட்டெண்ணை. கணக்கிடு. (பி.எஸ்ஸி.75)

| பகுதி | நிறை | குறியீட்டெண் |
|---|---|---|
| உணவு பண்டங்கள் | 31 | 473.6 |
| பொறிசெய் பொருள்கள் | 30 | 390.2 |
| தொழிற்சாலை கச்சாபொருள்கள் | 18 | 570.2 |
| குறை—பொறிசெய் பொருள்கள் | 17 | 405.3 |
| ஏனையவைகள் | 4 | 624.4 |

38) கீழ் கண்ட விவரங்களுக்கு சங்கிலிசார்பிகளை கணக்கிடு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆண்டு | | 1940 | 41 | 42 | 43 | 44 |
| 45 | 46 | 47 | 48 | 49 | 50 | 51 |
| விலை | | 7.37 | 8.56 | 9.06 | 9.62 | 9.94 |
| 10.37 | 11.00 | 10.50 | 9.37 | 10.12 | 10.62 | 10.00 |

39) நிலைகுறியீட்டெண்கள் சில உள்ளன. அவைகளுக்கு சங்கிலிகுறியீட்டெ ண்களை கண்டுபிடி:

| ஆண்டு | 1945 | 46 | 47 | 48 | 49 | 50 |
|---|---|---|---|---|---|---|
| குறியீட்டெண் | 376 | 392 | 408 | 380 | 392 | 400 |

40) கீழேயுள்ள சங்கிலி குறியீட்டெண்களிலிருந்து நிலை கு. எண்களை கணக்கிடு.

| ஆண்டு | 1945 | 46 | 47 | 48 | 49 | 50 |
|---|---|---|---|---|---|---|
| குறியீட்டெண் | 92 | 102 | 104 | 98 | 103 | 101 |

41) கீழ் கண்ட விவரங்களிலிருந்து நடப்பு ஆண்டுக்கு விலை சார்பிகளை கணக்கிட்டு, அடிப்படை ஆண்டின் மொத்தவிலை (pq) களை நிறையாக்கி, ஒருகுறியீட்டெண் கணக்கிடு.

| பொருள் | அலகு | அடிப்படை அளவு | ஆண்டு விலை | நடப்பு ஆண்டு விலை |
|---|---|---|---|---|
| A | லிட்டர் | 7 | 16.0 | 19.6 |
| B | கிலோகிராம் | 6 | 2.0 | 3.2 |
| C | டஜன் | 16 | 5.6 | 7.0 |
| D | மீட்டர் | 21 | 1.5 | 1.7 |

42) p—என்பது மணங்கு ஒன்றின் விலை (ரூபாய்); q—என்பது—லட்சம் டன் அளவுகளில். 1951—ம் 1952—ம் ஆண்டுகளுக்கான விவரங்களை கீழே காணலாம். லாஸ்பெய்ரேயின், மற்றும் பாஸ் சேயின் மொத்த விலை குறியீட்டெண்களை 1952—ம் ஆண்டிற்கு கண்டுபிடி.

| பொருள் | 1951 p | 1951 q | 1952 p | 1952 q |
|---|---|---|---|---|
| அரிசி | 16.8 | 209.6 | 17.5 | 225.4 |
| கோதுமை | 18.6 | 60.9 | 23.7 | 73.8 |
| சோளம் | 10.1 | 59.8 | 11.9 | 72.4 |
| பருப்பு | 24.1 | 33.3 | 19.0 | 41.4 |
| பாஜ்ரா | 10.1 | 23.1 | 13.3 | 31.4 |

(பி.எஸ்ஸி.75)

## விடைகள்

13) முறையே—100, 67, 88, 80, 96, 93, 92, 100, 112. 107.

14) 131.8

15) விலைசார்பிகள் (p)—133.3, 106.7, 150.0

கூட்டுச்சராசரி $= \frac{\Sigma pv}{\Sigma v} = 122.3.$ . $v = p_0 q_0$

பெருக்கல் சராசரி G = 121.3

இங்கு $\log G = \frac{\Sigma V . \log P}{\Sigma . V}$ என்பது வாய்பாடு

16) 129.9

17) 106.3

18) (a) 86 (b) 190 (c) 49.1 (d) 124-96

L = 121.83. p= 127.91, ME = 125. 13 பௌளி = ½ (L+P) = 124 85

f ஃபிஷர் = 105.79; L = 108.07, p = 103.55, ME = 105.85

g. 136.3, 136.3 (b). 205.8; L = 206.8, p = 204. 86, ME = 205.9

k 88.3

19 (i) 110. 0, 123.2, 136.0, 126.2
(ii) 108.6, 122.4, 134.8, 125.2
(iii) 111.7, 122.0

20) 368.36; 361.94; 369.25; 352.61

21) L = 139, p = 139, ஃபிஷர் = 139

22) 135 23) 148

25) i 118.2, 118 8 இரண்டு விடைகளும் சமம்—ஏனென்றால் ஒரே நிறைகளேயே பயன்படுத்தியுள்ளோம். 26) 335.36

27) கூட்டுச் சாராசரி 95.49, 70.72
இடைநிலை ... 98.86 79.45
பெருக்கல் ... 94.26 68.13

28) 276.4 29) 104.82 30) 114.89

31) 100.0; 174.9; 200. 6; 232.7; 182.7; 205.6: 253. 3; 240.8

32) 25.0; 27.5; 30 0; 50.0; 80.0; 100.0; 102.5; 100.0; 95.0; 92.5; 87 5; 90.0; 87.0: 85.0; 80.0; 750

33) 6.4286; 7,1429; 5.6676. 6.4286; 5.7500; 4.5000; 4.4545. 4.5000; 3.6667;4. 1311; 3.5000; 2.9048; 4.3750; 6.6667: 3.8214; 3.3333 1.8750; 5.1500;5.1429; 6.6667; 3.4286; 1.4000 1.8333; 31429; 5.3125, 5.7692; 1.5000. குறியீடு.469.2; 379-8

34) விலை: 100, 94.9: 86.9; 84.6
வரவு: 100, 90.8, 99.8, 96.0
விலை சார்பி;100, 90.8, 92.3, 89.5
அளவு சார்பி: 100, 95 4, 107.8, 106.8
L: 100, 101.0, 95.7, 93.8
P: 100, 101.0, 96.3, 94.0.

36) அடிப்படை எண்கள்: 100; 112.82; 97.35; 100.00; 120.50, 126.80; 130.80; 143.50: 126.90: 96.16;

சங்கிலித் தொடர் குறியீட்டெண்கள்: 100; 112.82; 86.36; 102.70; 120.50; 105.30; 103.00; 109.80, 88.39; 97 77;

37) 460.389

38) 100; 116; 106; 106; 103; 104; 106; 95; 89; 108; 105; 94

39) 100; 100.2; 104.1; 93.1; 103 2; 102

40) 92; 93.8: 97.6; 95.6; 98.5; 98 5

41) சார்பிகள் 122.5; 160; 125; 93.3
குறியீட்டெண்=121.5

## அத்தியாயம் V

# 5. காலத் தொடர் வரிசைகளின் ஆய்வு

## [Analysis of Time Series]

அறிமுகம்:-

5.1 ஆதிகாலந் தொட்டே மனிதன் தன் வாழ்க்கைக் குறிப்புகளை ஏதாவது ஒரு வழியில் பதிவு செய்துகொண்டே வந்திருக்கிறான். இன்று நம் நாட்டில் வழக்கத்தில் இருந்து வரும் பற்பல நாட்காட்டிகளில் "கலியுக சகாப்தம்" என்பதே மிகத் தொன்மையானது. கி.பி.1975-ம் ஆண்டான இந்த ஆண்டில் கலி தொடங்கி 5047 ஆண்டுகள் ஆகியுள்ளன என்பது ஒரு கணக்கு. பல சரித்திர நிகழ்ச்சிகளைக் கலியுக சகாப்தத்தைக் கொண்டே அளவிடும் முறையும் உள்ளது. மற்றும் ஆண்டுகளை, பிரபவ, விபவ... அக்ஷய என்று 60- தொடர் வரிசையில் எண்ணும் வழக்கமும் உள்ளது. சாதாரணமாக தாது, ஈசுவர வருடங்களில் பஞ்சம் நிகழக்கூடும் என்ற நம்பிக்கையும் உள்ளது. இக்கணக்குப் படி பஞ்சம், 60 ஆண்டுகளுக்கு ஒரு முறை நிகழக்கூடும்.

ஆனால் தற்காலத்தில் நாம் காலத் தொடர்வரிசையைப் பற்றி,வடிவப்பட வழியாகவும் (Graph), கணக்கியல் வழியாகவும் ஆராய்வோம். இத்தகைய ஆராய்ச்சிகளில் காலம் ஒரு மாறியாக அமையும். நாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளும் மற்றொரு மாறியை காலத்தின் சார்பலன் என்று கருதுவோம். உதாரண மாக பாங்குகளில் பணம் கட்டுதல், வாங்குதல் போன்ற நிகழ்ச்சி களை எடுத்துக் கொள்வோம். இந்நிகழ்ச்சிகளை நாள்வாரியாக கணக்கிடலாம். இவ்விவரங்களின்படி திங்களன்று (வாரத் துவக்கத்தில்) அதிகமாக வேலைகள் நடைபெற்றிருப்பதைக் காணலாம். ஐஸ்க்ரீம் விற்பனைகளைப் பற்றிய மாதாந்திர விவரங்களைத் திரட்டினால், விற்பனை கோடை காலத்தில் அதிக மாகவும், குளிர்காலங்களில் குறைவாகவும் இருப்பதைப் பார்க் கலாம். மற்ற, ஏனைய, மாறிகளையும், நாள்தோறுமோ வாரந் தோறுமோ மாதந்தோறுமோ, அல்லது ஆண்டு தோறுமோ

அளவிட்டு, விவரங்களைத் திரட்டலாம் t-என்பது காலத்தைக் குறித்தால், f(t) என்பது கருதப்படும் மாறியின் அளவு. அந்த காலத்தில் எவ்வளவு என்பதைக் காட்டும். இதனை ஒரு வரை படத்தின் வாயிலாக விளக்கலாம். உதாரணமாக அடுத்த பட்டியலில் (அட்டவணை-1) அமெரிக்க 'நாட்டில் ஆண்டுதோறும் வியாபார நிமித்தமாக, ஆண்டுவாரியாக வெட்டப்பட்ட மரங்களின் அளவுகள் உள்ளன.ம் வரை படம்1-இதை விளக்கும்.




படம் - 1

ஆண்டுகள்

அமெரிக்க நாட்டில் வெட்டப்பட்ட மர அளவுகள்

அட்டவணை1. அமெரிக்கா நாட்டில் வெட்டப்பட்ட மரங்களின் அளவுகள் 1945-57- (பில்லியன் கனஅடிகள் அளவில்

| ஆண்டு | | ஆண்டு | |
|---|---|---|---|
| 1945 | 2.7 | 1951 | 4.8 |
| 1946 | 2.0 | 1952 | 4.5 |
| 1947 | 4.0 | 1953 | 5.5 |
| 1948 | 3.9 | 1955 | 6.4 |
| 1949 | 3.9 | 1956 | 7.0 |
| 1950 | 3.6 | 1957 | 7.1 |

ஆங்காங்கு ஏற்ற விளக்கங்கள் இருப்பினும், பொதுவாக ஒரு நெடுங்காலப் போக்கு உள்ளது. ஆண்டுதோறும் வெட்டப்பட்ட மரங்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே வந்துள்ளது என்பதே அது.

அடுத்த பட்டியலில், 1963-70 ஆண்டுகளில் இங்கிலாந்தில் மாதந்தோறும் நிகழ்ந்த ஆகாயவிமான பயணமைல்களின் கணக்கைக் காணலாம். (அட்டவணை-11) இதனை 'வரைபடமாக அமைத்தால் படம்-2, கிடைக்கும். இந்தப் படத்திலும் ஒரு




படம் : 2 இங்கிலாந்து நாட்டில் விமானங்கள் ஓடிய மைல்கள் 1963—70 ஆண்டுகளுக்கான மாதாந்திர விவரங்கள்

நெடுங்காலப் போக்கு உள்ளதைக் காண்கிறோம். அது மட்டுமன்றி ஆண்டுதோறும் சற்றேறக்குறைய ஒரே மாதிரியான ஏற்றவிளக்கங்கள் உள்ளதையும் காண்கிறோம். ஒவ்வொரு ஆண்டு வகை படமும் ஒரே வகையான தோரணையைப் (patters) பெற்றுள்ளது எனலாம்.

அட்டவணை 2: இங்கிலாந்து நாட்டில் மாதந்தோறும் நிகழ்ந்த ஆகாய விமானப் பயண மைல்கள் (ஆயிரம் அளவில்) 1963-1970

(அட்டவணை அடுத்த பக்கம் பார்க்கவும்)

மூன்றாவதாக தமிழ்நாட்டில் சென்னை மாநகரத்திலுள்ள தனியார் மற்றும் அரசாங்கத்திற்கு சொந்தமான 5 மருத்துவ மனைகளில் நிகழ்ந்த பிறப்புகளின் எண்ணிக்கையைக் காண்கிறோம். இவை 1949–58 ஆண்டுகளுக்கு மாதாந்திர அளவில் கணிக்கப் பட்டவை. இதன் வரை படத்தை படம் 3ல் பார்க்கலாம்.

அட்டவணை 3 சென்னை மாநகர் மருத்துவமனைகளில் நிகழ்ந்த பிறப்புகள்

(அட்டவணை 3-யை பார்க்கவும்)

(மாதவாரியாக)—1949—1958 ஆண்டுகளில்*

அட்டவணை 2

| மாதம் | 1963 | 1964 | 1965 | 1966 | 1967 | 1968 | 1969 | 1970 |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஜனவரி | 6,827 | 7,269 | 8,350 | 8,186 | 8,334 | 8,639 | 9,491 | 10,840 |
| பிப்ரவரி | 6,178 | 6,775 | 7,829 | 7,444 | 7,899 | 8,772 | 8,919 | 10,436 |
| மார்ச் | 7,084 | 7,819 | 8,829 | 8,484 | 9,994 | 10,894 | 11,607 | 13,589 |
| ஏப்ரல் | 8,162 | 8,371 | 9,948 | 9,864 | 10,078 | 10,455 | 8,852 | 13,402 |
| மே | 8,462 | 9,069 | 10,638 | 10,252 | 10,801 | 11,179 | 12,537 | 13,103 |
| ஜூன் | 9,644 | 10,248 | 11,253 | 12,582 | 12,950 | 10,588 | 14,759 | 14,033 |
| ஜூலை | 10,466 | 11,030 | 11,424 | 11,637 | 12,222 | 10,794 | 13,667 | 14,147 |
| ஆகஸ்ட் | 10,748 | 10,882 | 11,391 | 11,577 | 12,246 | 15,770 | 13,731 | 14,057 |
| செப்டம்பர் | 9,963 | 10,333 | 10,665 | 12,246 | 13,281 | 13,812 | 15,110 | 16,234 |
| அக்டோபர் | 8,194 | 9,'09 | 9,396 | 9,637 | 10,366 | 10,857 | 12 185 | 12,389 |
| நவம்பர் | 6,848 | 7,685 | 7,775 | 8,094 | 8,730 | 9,290 | 10.645 | 11,595 |
| டிஸம்பர் | 7,027 | 7,602 | 7,993 | 9,280 | 9,614 | 10,925 | 12,161 | 12,772 |

அட்டவணை 3

| ஆண்டு | ஜனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | ஜூன் | ஜூலை | ஆகஸ்ட் | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1949 | 997 | 835 | 950 | 1049 | 1100 | 1074 | 1242 | 1335 | 1357 | 1436 | 1340 | 1258 |
| 1950 | 890 | 1024 | 1169 | 1190 | 1301 | 1256 | 1407 | 1404 | 1466 | 1466 | 1382 | 1388 |
| 1951 | 1219 | 1123 | 1297 | 1387 | 1576 | 1566 | 1638 | 1787 | 1876 | 1842 | 1668 | 1568 |
| 1952 | 1321 | 1204 | 1385 | 1465 | 1673 | 1628 | 1733 | 1884 | 1960 | 2010 | 1915 | 1787 |
| 1953 | 2100 | 1609 | 1846 | 1838 | 2040 | 2003 | 2241 | 2318 | 2244 | 2476 | 2362 | 2429 |
| 1954 | 2058 | 1672 | 2079 | 2122 | 2345 | 2274 | 2423 | 2618 | 2706 | 2860 | 2580 | 2429 |
| 1955 | 2350 | 2001 | 2470 | 2431 | 2485 | 2599 | 2804 | 2947 | 2719 | 2742 | 2782 | 2819 |
| 1956 | 2499 | 2331 | 2923 | 2702 | 3001 | 2722 | 2892 | 2935 | 2766 | 2849 | 2735 | 2607 |
| 1957 | 2554 | 2212 | 2649 | 2765 | 3074 | 2932 | 2819 | 2900 | 2713 | 2948 | 2935 | 2895 |
| 1958 | 2839 | 2004 | 2494 | 2768 | 3216 | 3169 | 3271 | 3410 | 3335 | 3417 | 3289 | 3234 |
| மொத்தம் | 18827 | 16015 | 19262 | 19717 | 21811 | 21223 | 22470 | 23538 | 23142 | 24046 | 22988 | 22414 |

*மூலம்: (ஆசிரியரே திரட்டியவை) Journal of Indian Medical Association Vol. 38 No. 11 (1962)

நான்காவது அட்டவணையில் அதே மருத்துவமனைகளில் அதே கால இடைவெளியில் நிகழ்ந்த இரட்டைப் பிறப்புகளின் (TW NS) எண்ணிக்கையைக் காணலாம். இதற்கான வரை படம் 4ல் பார்க்கலாம். (அட்டவணை அடுத்த பக்கம்)

ஐந்தாவதாக அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஜனத்தொகை புள்ளி விவரங்களை அட்டவணை Vலும்; படம் 5லும் காணலாம். இந்த புள்ளிவிவரங்கள் 10 ஆண்டு அளவில் உள்ளன. புள்ளிகளில் ஒரு போக்கு உள்ளது மிக நேர்த்தியாகத் தெரிகிறது.

அட்டவணை 5. அமெரிக்க ஐக்கிய நாட்களின் ஜனத்தொகை

| ஆண்டு | ஜனத்தொகை (மில்லியன் அளவில்) |
|---|---|
| 1850 | 23 |
| 1860 | 31 |
| 1870 | 39 |
| 1880 | 50 |
| 1890 | 63 |
| 1900 | 75 |
| 1910 | 92 |
| 1920 | 106 |
| 1930 | 123 |
| 1940 | 132 |
| 1950 | 151 |
| 1960 | 179 |

இத்தகைய விவரக்குறிப்புகளைக் காலதொடர் வரிசைகள் என்று அழைக்கிறோம். அதாவது குறிப்பிட்ட கால அளவு இடைவெளியுடன் பல ஆண்டுகள் சேகரிக்கப்பட்ட புள்ளியியல் விவரங்

அட்டவணை 4: சென்னையில் இரட்டை பிறப்புகள் (மாதவாரியாக)*.

| ஆண்டு | ஜனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | ஜூன் | ஜூலை | ஆகஸ்ட் | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1949 | 10 | 13 | 12 | 14 | 14 | 15 | 20 | 17 | 23 | 27 | 18 | 12 | 195 |
| 1950 | 15 | 16 | 21 | 18 | 20 | 13 | 16 | 29 | 16 | 14 | 12 | 15 | 205 |
| 1951 | 14 | 18 | 20 | 15 | 20 | 20 | 26 | 27 | 24 | 29 | 20 | 28 | 261 |
| 1952 | 16 | 13 | 19 | 22 | 22 | 26 | 28 | 26 | 41 | 25 | 33 | 16 | 287 |
| 1953 | 16 | 19 | 18 | 24 | 26 | 24 | 35 | 30 | 33 | 42 | 26 | 18 | 311 |
| 1954 | 20 | 15 | 20 | 27 | 31 | 29 | 27 | 39 | 30 | 27 | 32 | 32 | 329 |
| 1955 | 22 | 20 | 30 | 26 | 29 | 35 | 40 | 35 | 41 | 24 | 27 | 34 | 363 |
| 1956 | 24 | 27 | 42 | 36 | 36 | 38 | 34 | 23 | 33 | 37 | 36 | 35 | 401 |
| 1957 | 32 | 33 | 30 | 33 | 36 | 30 | 48 | 38 | 33 | 40 | 28 | 27 | 413 |
| 1958 | 47 | 29 | 34 | 40 | 37 | 32 | 36 | 51 | 51 | 53 | 36 | 46 | 492 |
| மொத்தம் | 216 | 203 | 246 | 255 | 271 | — | 310 | 325 | 325 | 323 | 268 | — | 5287 |




படம் 3. சென்னை மாநகர 5 மருத்துவ மனைகளில் நிகழ்ந்த பிறப்புகள் மாதவாரியாக




படம்-4 சென்னை மாநகரின் 5 மருத்துவமனைகளில் நிகழ்ந்த இரட்டைபிறப்புகள் - மாதவாரியாக

களைத்தான் "காலத்தொடர் வரிசைகள்" என்கிறோம். அவைகளின் தன்மைகளை ஆராய்வதே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும்.




படம் 5. அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஜனத்தொகை
(மில்லியன் அளவில்)

நாம் இதுகாறும் ஆய்ந்தவற்றுள் பற்பல மாறிகளைக் கண்டோம். ஆனால் இத்தொடர் வரிசையில் காலம் என்பது ஒரு மாறியாக செயல்படுகிறது என்பதுதான் இத்தொடரின் தனிச்

சிறப்பு. காலத்தொடர் வரிசைகளுக்கு உதாரணமாக, மாத, காலாண்டு கால அளவுகளில் ஒரு பொருளின் விற்பனை, அதே போல் ஒரு பொருளின் விலை பல அளவு கால இடைவெளிகளில் இருக்கும் நிலை, உற்பத்தி, ஜனத்தொகை முதலியனவற்றைக் கூறலாம். இத்தொடர் வரிசைகள் பெரும்பாலும் நாட்டின் பொருளாதாரத் துறையில் பெருமளவு சம்பந்தப்பட்டிருக்கின்றன. நாம் இப்பொழுது புள்ளியியல் முறைகளின் மூலம் இத்தொடரின் பயன் என்ன என்பதைப்பற்றியும், இத்தொடர் அமைவதற்கான காரணங்களைப்பற்றியும், இத்தொடரின் உதவியினால் நாம் எதிர்காலத் திட்டங்களை எவ்வாறு அமைத்துக் கொள்வது என்பது பற்றியும் ஆராய்வோம்.

இத்தொடர் எல்லா ''சமூக விஞ்ஞான'' பிரச்னைகளிலும் எழும் என்பதைக் காணலாம். இங்கே செயல் ''காலம்'' என்ற மாறியைப் பற்றி ஆராய சிறந்த நுணுக்கமான அறிவு தேவைப் படுகிறது. இந்தக் காலம் என்ற மாறியானது மற்ற மாறிகளைப் போல் தன்னிச்சையாக செயல்படாது ஒரே சீராக செயல்படும் என்பது தெளிவு. இதன் போக்கானது கடந்த காலத்திலிருந்து எதிர்காலம் வரை ஒரே சீரான இயக்கத்துடன் ஒரே திசையில் செல்கிறது. இதனால்தான் வரையறுக்கப்பட்ட இடைவெளி (regular interval) யைக் கொண்டு காலத்தொடர் வரிசை மூலமாக சில காலம் வரை புள்ளி விவரங்கள் சேகரிக்கப் படுகின்றன.

2.5 குறியீட்டு முறை : சாதாரணமாக காலத்தை t என்ற மாறியினால் குறிப்பிடுவோம். இது ஒன்றிலிருந்து n வரை மாறும். இது ஒரு குறிப்பிட்ட நாளையோ, அல்லது வாரத்தையோ, அல்லது மாதத்தையோ குறிக்கலாம். அல்லது மூன்று, ஆறு மாத கால இடைவெளியையும், ஓர் ஆண்டு இடைவெளியையும் குறிக்கலாம். அந்த இடைவெளியின் மையப்புள்ளிதான் $\delta t$ ஆல் குறிக்கப்படுவது என்பதை நினைவில் வைக்கவேண்டும்.

நாம் கருதும் மாறியின் அளவை t காலத்தில் $y_t$ என்று குறிப்பிடுவோம்.

5.3 நாட்காட்டியின் பிரச்னைகள்: ஒவ்வொரு மாதத்திலுள்ள நாட்களின் எண்ணிக்கை வெவ்வேறாக இருக்கின்றன. (உதா) பிப்ரவரியில் 28 நாட்கள், டிஸம்பரில் 31 நாட்கள். எனவே நாம் கருதுவது ஒரு மாதத்தின் உற்பத்தி என்றால், அது பிப்ரவரியில் சற்று குறைவாகவும், டிசம்பரில் சற்று அதிகமாகவும் இருப்பதற்கு

இந்த நாட்கள் வித்தியாசமும் காரணமாக இருக்கலாம். இவைகளை நீக்கவேண்டும் சாதரணமாக இதற்கு கீழ்கண்ட காரணியில் அந்த மாதத்து உற்பத்தியைப் பெருக்கலாம்.

$$\text{காரணி} = \left( \frac{30}{\text{அந்த மாதத்திலுள்ள நாட்கள்}} \right)$$

இதனால் ஓர் ஆண்டுக்கு 360 நாட்கள்தான் என்றாகிறது. வேறு வழிகளிலும் இந்தத் திருத்தத்தை செய்யலாம். உதாரணமாக ஜனவரி மாதம் 31-ம் தேதியிலும், மார்ச் மாதம் 1-ம் தேதியிலும் உண்டாகும் உற்பத்தியை பிப்ரவரி மாத உற்பத்தியுடன் மொத்தமாக்குகிறது.

## 5.4 காலத் தொடர் வரிசையின் பகுப்புகள் (Components)

இதுகாறும் காலத்தொடர் வரிசையில் உள்ள பகுப்புகளைக் கொண்டு நான்கு வகைகளாகப் பிரிக்கலாம் எனக் கண்டறிந்துள்ளனர்.

(1) நெடுங்காலப் போக்கு (Trend or long-term movement)

(2) நெடிய அல்லது குறுகிய கால இடைவெளி கொண்டுள்ள சுழல் ஊசலாட்டங்கள்

(3) பருவகால மாறுபாடுகள்.

(4) ராண்டம்(இயைபிலா) அல்லது முறையற்ற மாறுபாடுகள்

மேற்கூறியவற்றுள் ஒன்றோ, ஒன்றிற்கு மேற்பட்டவைகளோ ஒரு காலத்தொடர் வரிசையின் போக்கை நிர்ணயிக்கலாம். அவைகளைப் பற்றி ஆராய்ந்து காலத்தொடர் வரிசை மாற்றங்களுக்கான காரணங்களை அப்புறப்படுத்தலுக்கே, காலதொடர் வரிசை ஆய்வுகள் என்று பெயர். மேற்கூறியவற்றுள் முதல் மூன்றினுக்கு முறையான (Systematic) போக்குகள் என்றும் நான்காவதற்கு முறையற்ற அல்லது இயைபிலா (ராண்டம்) போக்கு என்றும் பெயர்.

இவைகள் எவ்வாறு ஒரு தொடர் வரிசையில் அமைகின்றன என்பதற்கு இருவகைக் கோட்பாடுகள் உள்ளன. ஒன்று அவைகள் பெருக்கல் முறையில் அமைகின்றன என்பது. அதாவது t என்ற காலத்தில் எடுக்கப்படும் அளவிற்கு $y_t$ என்று குறிப்பிட்டு, அது மேற்கூறிய நான்கின் பெருக்குத் தொகைக்கு சமம் எனக் கணக்கிடுவது.

அதாவது $Y_t \;\; T_t \times S_t \times C_t \times I_t$ — (1)

இதில் $T_t$ என்பது நெடுங்காலப் போக்கு, $S_t$ பருவகால மாறு பாடுகள், $C_t$ சுழல் ஊசலாட்டங்கள், $I_t$ என்பது ராண்டம் போக்கை குறிக்கும். இரண்டாவது கோட்பாடு $Y_t$ என்பது மேற்கூறியவற்றின் கூட்டுத்தொகை என கணக்கிடுவது.

$$Y_t = T_t + S_t + C_t + I_t \quad (2)$$

ஆனால் இரண்டாம் முறை அவ்வளவு அதிகமாக பயன்படுத்தப் படுவதில்லை. காரணம். இம்முறையில் ஒரு போக்கு மற்றொரு போக்கைத் தழுவியிருப்பதைப்போல் உள்ளதுதான். ஆனால் உண்மையில் மேற்கூறிய நான்கு அமைப்புகளும், ஒன்றிற்கொன்று தொடர்பற்று தனிப்பட்ட முறையில் செயல்பட்டு காலத்தொடர் வரிசையுள் அங்கம் வகிக்கின்றன.

5.5 பன்னெடுங்காலப் போக்குகள்—பன்னெடுங்கால போக்குகள் என்பவை ஒரே சீரான இறக்கம் அல்லது ஏற்றம் கொண்டவை. இவைகள் முறையான நீண்டகால அசைவுகளைக் கொண்டவை. Yt என்ற விவரங்களை ஒரு வரைபடதாளில் குறிப்பிட்டால், அப் புள்ளிகள் எல்லாம் ஒரே சீராக மேல்நோக்கியோ அல்லது கீழ் நாக்கியோ காணப்படும். சில தொடர்கள் ஒரு குறிப்பிட்ட கால வளர்ச்சிக்குப் பின் சிறிது சிறிதாக இறக்கம் கொண்டு காணப்படும். இவைகளையும் பன்னெடுங்காலப் போக்கு எனலாம். ஆனால் இவ்கைத் தொடர்களில் திடீர், திடீரென்று மாற்றங் களோ, ஏற்ற இறக்கங்களோ காணப்படா. படம் 1-5 பார்த்தால் இத்தகைய நெடுங்காலப் போக்கு உள்ளதைக் காணலாம்.

"பன்னெடுங்காலப் போக்கு" என்ற பதத்தை சரியாக வரையறுத்து கூறமுடியாத அளவில் உள்ளதுதான் இத்தொடர் களில் உள்ள ஒரு குறைபாடு. பன்னெடுங்காலம் என்பது எத்தனை மாதங்கள் அல்லது ஆண்டுகள்? சில விஷயங்களில் நெடுங்காலம் என்பது மற்ற சில விஷயங்களுக்கு குறுகிய காலமாகி விடுகிறது. உதாரணமாக நூறுவருட மழையளவுகளை ஆராய்ந்து பார்த்தால்' முதலிலிருந்து கடைசி வரை ஒரு வகைப் போக்கு (trend) நிலவுவதைப் பார்க்கலாம். இரண்டாயிரம் ஆண்டுகளுக் கான மழையளவுகளை (இவைகளை ஒரு வகை சிவப்பு மரங்களின் குறுக்கு வெட்டு வளையங்களைக் கொண்டறியலாம்) ஆராய்ந்தால் அந்த நீண்ட காலப் போக்கில், குறிப்பிட்ட அதே நூற்றாண்டின் போக்கு குறுகிய ஊசலாட்டமாக அமைந்திருக்கலாம் அப் பொழுது அந்த ஒரு நூற்றாண்டைக் கொண்டு கணக்கிடப்பெறும் போக்கானது தவறான ஒரு கருத்தைக் காண்பிக்கலாம்.

5.6 சுழல் ஊசலாட்டங்கள் (cyclical fluctuations) ஒரு வருடத்திற்கு ஒரு முறையோ அல்லது அதற்கு மேலோ காலத்தொடர் வரிசையில் ஏற்படும் சுழல் போக்கிற்கு சுழல் ஊசலாட்டங்கள் என்று பெயர். ஒரு முழுமையான காலத்திற்கு ஒரு சுழல் என்று பெயர். இந்த சுழல் என்பது கால அளவில் மாறுபாடு கொண்டதாக இருக்கும். சுழலின் ஏற்ற இறக்கங்களில், ஒரு சுழலுக்கும் மற்றொன்றிற்கும் வித்தியாசம் அதிகமாக இருக்கும். பொருளாதாரத்துறையில் மிகச் சிறப்பாக பேசப்படும் வாணிகச் சுழலை (Trade cycle) இதற்கு உதாரணமாகக் கூறலாம். பொருளாதார நிலையில் மிகவும் உயர்த்திருக்கும் ஒரு நாட்டின் மக்கள் நெருக்கம் ஒரு வரையறைக்கு உட்பட்டு இருக்கும் ஆனல் உயர்ந்த பொருளாதார நிலையானது மக்களை சுகபோகங்களில் ஈடுபடச் செய்யும். அதனல் மக்கட் தொகை அதிகரிக்கும்; அதனல் பொருளாதார நிலை சீர்குலையும் மக்கள் பிணி, பஞ்சம், முதலியவற்றல் அல்லல் படுவர். இயற்கைக் காப்பு என்ற இத்தகைய நிலை மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தி, சமநிலைப்படுத்துகிறது. இந்த சுழலைத்தான் சுழல் ஊசலாட்டங்கள் என்கிறோம்.

சுழல் ஊசலாட்டங்களுக்கு கீழ்க்கண்ட வரைபடத்தைக் காட்டலாம்




படம் 6. அரிசி உற்பத்தி சுழல் ஊசலாட்டங்கள்

5.7 பருவகால மாறுபாடுகள் (Seasonal variations)

இவைகளும் கால நிர்ணயம் கொண்டவை. இவைகள் ஓராண்டு காலமும், அதற்கு குறைந்த அளவும் கொண்டவை. இவைகள் குறிப்பிட்ட கால அளவுகளுக்கு ஒரு முறை எனத் திரும்ப திரும்ப நிகழ்வன. இவைகளுக்கு உதாரணமாக ஒவ்வொரு நாளின் தட்ப வெப்ப நிலைகளையும் வருடத்தில் ஓரிரு முறை வரும் பண்டிகைகளின் காரணமாக விற்பனையாகும் பொருள்களையும் கூறலாம். இத்தகைய மாறுபாடுகளுக்கு மக்களின் பழக்க வழக்கங்

களும், காலநிலையின் மாறுபாடுகள் ஆகியவைகளே காரணங்கள் எனலாம். இம்மாறுபாடுகளைப் பற்றிய தீவிர ஆராய்ச்சி ஒரு தொழிலின் விற்பனை முறைகளைச் சீர்திருத்த மிகவும் உதவும் இதனால்தான் பல நிறுவனங்கள் பருவகாலங்களுக்கேற்ப தங்கள் பொருள்களை உற்பத்தி செய்து விற்பனையைப் பெருக்குகின்றன. மழைக்காலங்களில் குடை, மழைகோட்டுகள் முதலிவற்றின் விற்பனை அதிகமாக இருக்கும். கோடை காலங்களில் குளிர்பானங்கள், ஐஸ்கிரீம் முதலியவற்றின் விற்பனை அதிகமாக இருக்கும். இவைகளை பருவகால மாறுபாடுகளுக்கு உதாரணமாகக் கூறலாம்.

## 5.8 முறையற்ற மாறுபாடுகள் (Irregular fluctuations)

மேற்கூறிய மாறுபாடுகளுக்கான காரணங்களைக் கண்டறிந்து அவைகளை நீக்கிய பின்பு நமக்கு கிடைக்கும். காலத்தொடர் வரிசையுள் சிற்சில ஏற்ற இறக்கங்கள் காணப்படும். இத்தகைய ஏற்ற இறக்கங்களுக்கான காரணங்களை அளவிட்டோ அறிந்தோ கூறுவது முடியாததாகும். இவைகளின் காரணமாக ஏற்ற இறக்கங்களில் ஒரு ஒழுங்கற்ற தன்மை காணப்படும். வெள்ளம், பஞ்சம், போர் முதலியவற்றை ஓரளவிற்கு இத்தகைய முறையற்ற மாறுபாடுகளுக்குக் காரணமாக சொல்லலாம். மேலும் சுழல் அசைவாட்டங்கள், பருவகால மாறுபாடுகள், இவைகளைத்தவிர்த்து பின்பும் கணக்கிட முடியாத அளவிலுள்ள மாறுபாடுகளையும், முறையற்ற மாறுபாடுகளில் அடக்கலாம். மேற்கூறியவற்றை இப்பொழுது விளக்கமாக ஆராய்வோம். இவைகளுக்குப் பெருக்குத் தொகை சமன்பாட்டையே பயன்படுத்துவோம். உபயோக்கும் அளவைகள் Ti க்கும் Yii க்கும் ஒன்றாகவே இருத்தல் அவசியம். மற்றவைகளின் அளவுகளை விகிதாசங்களில் கூறுவது வழக்கம்.

## 5.9 பன்னெடுங்காலப் போக்கினை அளவிடும் முறைகள்:-

பருவகால மாறுபாடுகள், சுழல்மாறுபாடுகள், மற்றும் முறையற்ற மாறுபாடுகளை நீக்கியவுடன் நமக்கு கிடைப்பவை பன்னெடுங்காலப் போக்குகள், சுழல் மாறுபாடுகள் வருடத்திற்கு ஒரு முறை நிகழ்வனவாக இருப்பின், காலத்தொடரில் வருடாந்திர மொத்தங்களையோ, வருடாந்திர சராசரிகளையோ கணக்கிட்டு தொடரை அமைத்தால், சுழல் மாறுபாடுகள் விலகக் காணலாம். எனவே காலத்தொடரானது சுழல் மாறுபாடுகளிலிருந்து விடுபட்டிருக்கும். நமக்கு கொடுக்கப்பட்டுள்ள தொடர் மாதாந்திர கணக்குகளைக் கொண்டு (புள்ளி விவரங்களுடன்) இருப்பின், வருடாந்திர மொத்த அளவுகளையோ, சராசரி

களையோ கணக்கிட சுழல் மாறுபாடுகள் நீங்கும். இவ்வாறு நீக்கப்பட்ட தொடரின் மாதாந்திரப் போக்கினை (பன்னெடுங்காலப் போக்கு Interpolation) இடை உருச்சேர்த்தல் என்ற முறையின் மூலம் கணக்கிடலாம். மற்ற இரு வகைகளான சுழல் ஊசலாட்டங்கள், முறையற்ற மாறுபாடுகளை நீக்குவதற்கு உரிய முறைகளைக் கீழே ஆராய்வோம்.

### 5.9.1 இயல்பாக கையினால் வளைகோட்டைப் பொருத்துதல் (Free-hand curve fitting)

கொடுக்கப்பட்டுள்ள ஆண்டு புள்ளி விவரங்களை நேர்கோடு வரைபடமாக வரைந்து கொள்ளுதல், இம்முறையின் முதல் படியாகும். பின்பு கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களை பெரும்பாலும் உள்ளடக்கியதான ஒரு வளைகோட்டை கையினால் இயல்பாக (free hand) வரைய வேண்டும். இம்முறையில் பல நன்மை, தீமைகள் உள்ளன. ஒரே புள்ளிகளிடையே வரையப்படும் கோடு, நபருக்கு நபர் மாறுபடும். அவரவர்கள் தத்தம் நோக்குடன் வரைகோட்டை வரைந்திருப்பர். இம்மாதிரியான வரைகோட்டு முறை மிகவும் சுலபமானதும், எந்த வகையான போக்கையும் தனித்துக் காட்டக் கூடியதாகவும் இருக்கும். நபருக்கு நபர் கோடுகள் வரைவதில் ஏற்படும் வித்தியாசம் இம்முறையின் பெரும் குறைதான். கணக்கியல் வழியில்,கோடு எந்த அளவில் கொடுக்கப்பட்ட புள்ளிகளுக்கு ஏற்ப உள்ளது என்பதைக் கணக்கிட முடியாது.

### 5.9.2 நகரும் சராசரிகள் முறை (method of moving averages)

நகரும் சராசரிகள் என்ற முறையின் மூலமும் போக்கினை அளந்து, அறிய இயலும். இம் முறையின்படி முதலில் கொடுக்கப்பட்ட ஆண்டு புள்ளி விவரங்களை எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விவரங்களிலிருந்து, எத்தனை மாதங்களுக்கு அல்லது ஆண்டுகளுக்கு ஒரு முறை சுழல் ஊசலாட்டங்களின் ஒரு சுழல் நிறைவெய்துகிறது எனக் கணக்கிடவேண்டும். இதனைக் கணக்கிட கொடுக்கப்பட்ட மொத்த புள்ளி விவரங்களில் எத்தனை சுழல் ஊசலாட்டங்கள் (அல்லது சுழல்கள்) உள்ளன எனக் கணக்கிட்டு ஒரு சுழல் சராசரியாக எத்தனை மாதங்களுக்கு ஒரு முறை வருகிறது எனக்கண்டறியலாம். பொதுவாக ஒரு சுழல் நிறைவெய்த K மாதங்கள் ஆகிறது எனக் கொள்வோம். கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களில் முதலாவதாக K மாதங்களுக்கான மொத்தத்தைக் கணக்கிட்டு அதை K ஆல் வகுக்க, K மாதங்களுக்கான சராசரி கிடைக்கும். பின்பு (K + 1) எண்ணிக்கையைக் கூட்டி முதல் எண்ணிக்கையைக் கழித்து வருவதைக்

K ஆல் வகுத்தால் அடுத்த K மாதங்களுக்கான சராசரி கிடைக்கும். இவ்வாறே கணக்கிட்டுக் கொண்டு போனால் நகரும் சராசரிகள் கிடைக்கும். நகரும் சராசரிகளை எந்த கொடுக்கப் பட்ட மூல (original) புள்ளி விவரங்களுக்கு எதிரே எழுதுவது என்பது, k என்பது ஒற்றைப் படை எண்ணா அல்லது இரட்டைப் படை எண்ணா என்பதைப் பொறுத்திருக்கும்.

வகை 1 k என்பது ஒற்றைப்படை எண் எனக் கொள்வோம். எடுத்துக்காட்டாக k = 5 என்போம். விவரங்களும், கணக்கிடும் முறைகளும் அடுத்த அட்டவணையில் உள்ளன.

அட்டவணை 6: நகரும் சராசரிகளைக் கணக்கிடுதல்: K ஒற்றைப்படை எண் -5

| மாதங்கள் | மாறியின் மதிப்புகள் | 5-மாதங்களின் மொத்தங்கள் | நகரும் சராசரி |
|---|---|---|---|
| 1 | $x_1$ | | |
| 2 | $x_2$ | | |
| 3 | $x_3$ | $x_1+x_2+x_3+x_4+x_5$ $T_3$ | $T_3/5=\bar{X}_3$ |
| 4 | $x_4$ | $x_2+x_3+x_4+x_5+x_6$ $T_4$ | $T_4/5=\bar{X}_4$ |
| 5 | $x_5$ | $x_3+x_4+x_5+x_6+x_7$ $T_5$ | $T_5/5=\bar{X}_5$ |
| 6 | $x_6$ | | |
| 7 | $x_7$ | | |
| 8 | $x_8$ | | |
| 9 | $x_9$ | | |
| 10 | $x_{10}$ | | |
| 11 | $x_{11}$ | $x_9+x_{10}+x_{11}+x_{12}+x_{13}=T_{11}$ | $T_{11}/5=\bar{X}_{11}$ |
| 12 | $x_{12}$ | | |
| 13 | $x_{13}$ | | |

முதலில், முதல் ஐந்து மாதங்களின் மொத்தத்தை

$$(x_1+x_2+x_3+x_4+x_5)\ T_3$$

எனக் கணக்கிடுகிறோம். இதனை 5ல் வகுக்க கிடைக்கும் சராசரி $T_3$. இவ்விரண்டையும் 3-வது மாதத்திற்கு எதிரே எழுதுவோம்.

ஏனென்றால், மூன்றாவது மாதத்தை மையமாகவும் முதல் இரண்டு மாதங்களையும், கடைசி இரண்டு மாதங்களையும் கூட்டிவரும் சராசரி ஆதலால் இதனை 3-வது மாதத்தின் சராசரி என்பதுதான் பொருத்தமாகும். அடுத்து $(x_2+x_3+x_4+x_5x+_6)$ என்ற 5 மாதங்களின் மொத்தத்தை $T_4$ எனக் கணக்கிட்டு அதனை 5-ஆல் வகுக்க கிடைக்கும் மதிப்பான $\bar{X}_4$ என்ற சராசரியை 4-வது மாதத்திற்கானது எனக் கருதுவோம். இவ்வாறே தொடர்ந்து செய்ய நமக்கு $x_3$, $x_4$ ... $x_{11}$ என்ற நகரும் சராசரிகள் கிடைக்கும். இந்த சராசரி மதிப்புகள் அந்த காலித் தொடர்வரிசையின் போக்கினை நன்கு எடுத்துக் காட்டும்.

**வகை-2 k— என்பது இரட்டைப்படை எண். இதை 4 எனக் கொள்வோம். அடுத்த அட்டவணையில், விவாக்குறிப்புகளையும், செய்முறைகளையும் காணலாம்.**

**அட்டவணை 7: நகரும் சராசரிகளை கணக்கிடுதல்: K-இரட்டை எண் = 4**

| மாதங்கள் | மாறியின் மதிப்புகள் | 4 மாத மொத்தங்கள் | 4 மாத சாரசரி | மையமாக்கப்பட்ட சராசரிகள் |
|---|---|---|---|---|
| 1 | $y_1$ | | | |
| 2 | $y_2$ | $\rightarrow y_1+y_2+y_3+y_4=T_1$ | $T_1/4=L_1$ | |
| 8 | $y_3$ | $\rightarrow y_2+y_3+y_4+y_5=T_2$ | $T_2/4\ L_2$ | $(L_1+L_2)/_2=\bar{X}_3$ |
| 4 | $y_4$ | $\rightarrow y_3+y_4+y_5+y_6=T_3$ | $T_3/4\ L_3$ | $(L_2+L_3)/_2=\bar{X}_4$ |
| 5 | $y_5$ | ⋮ | ⋮ | |
| 6 | $y_6$ | ⋮ | ⋮ | |
| 7 | $y_7$ | ⋮ | ⋮ | |
| 8 | $y_8$ | ⋮ | ⋮ | |
| 9 | $y_9$ | ⋮ | ⋮ | |
| 10 | $y_{10}$ | | | |
| 11 | $y_{11}$ | | | |
| 12 | $y_{12}$ | $\rightarrow y_{10}+y_{11}+y_{12}+_{13}=T_{10}$ | $T_{10}/_4=L_{10}$ | $(L_9+L_{10})/_2=\bar{X}_{11}$ |
| 13 | $y_{13}$ | | | |

இங்கு முதல் 4 மாதங்களின் மொத்த = $y_1+y_2+y_3+y_4=T_1$ இதனை சராசரியாக்க $\frac{T_1}{4}=L_1$ என்ற மதிப்பு கிடைக்கிறது. மதிப்பை எந்த மாதத்திற்கு பொருத்தமானது எனக்கருதுவது? மைய அளவு முறைகளைப் பார்த்தால் இது 2-3 மாதங்களுக்கிடையே யான மதிப்பு என்று கூறலாம். அதேபோல் $y_2+y_3+y_4+y_5=T_2$ என்பதையும், அதற்கு பொருத்தமான சராசரியான $L_2$ வையும் 3 – 4 மாதங்களிடையேயான மதிப்பு என்று கூறலாம். எனவே இவை இரண்டையும் கூட்டி சராசரி யாக்கினல் கிடைக்கும் மதிப்பு 3-வது மாதத்திற்குப் பொருத்தமாகிறது. இந்த முறைக்கு மையமாக்கும் முறை (Centering) என்று பெயர். இரட்டைப்படை எண்களைக் கொண்ட நகரும் சாராசரிகளை இவ் வாறு மையமாக்காவிட்டால், அவைகள் எந்தெந்த மாதங் களின் (அல்லது கால அளவுகளின்) சராசரி என்று கூறுவது கடினம் நமக்கு இந்த எடுத்துக்காட்டில் $\overline{X}_3$-யில் தொடங்கி $X_{11}$ வரை கிடைக்கின்றன. இவைகள் நெருங்காலப்போக்கினை குறிப்பலைவகள் எனக் கொள்வோம்.

இரண்டு எடுத்துக் காட்டுகளிலும் ஒரு பொது தன்மை இருப் பதை கவனிக்கலாம். கொடுக்கப்பட்ட விவரங்கள் மாதம் 1—லிருந்து 13 வரையில் இருப்பினும், நகரும் சராசரிகள் 3-ம் மாதத் திலிருந்து 11-ம் மாதம் வரைதான் கிடைக்கின்றன. எனவே முதலிரெண்டு மாதங்களுக்கும், கடைசி இரண்டு மாதங் களுக்குமான நகரும் சராசரிகள் அல்லது நெடுங்கால போக்கு அளவுகள் கிடைப்பதில்லை. இது இந்த முறையில் உள்ள ஒரு குறைபாடுதான்.

### 5.9.3 இம்முறையில் உள்ள சாதகங்களும், பாதகங்களும்:-

நன்முக தேர்ந்து எடுக்கப்பட்ட கால அளவுள்ள நகரும் சராசரிகள் சுழல் ஊசலாட்டங்களை நீக்கி நெடுங்காலப் போக்கினை அளவிட இயலும். எனவே "முறையான கால அளவு நிர்ணயம்" என்பது இம்முறைக்கு இன்றியமையாததாகும். இத்தகைய கால அளவு நிர்ணயங்களைக் கொண்ட நகரும் சராசரிகள், நெடுங் காலப்போக்கினின்று விலக்கிச் எடுத்து செல்லும் மற்றைய மாறுபாடுகளைத் தவிர்க்க வல்லது.

ஒரே கால அளவுள்ளதும், ஒரே மாதிரியான ஏற்றவிறக்கங்கள் கொண்டதுமான சுழல் ஊசலாட்டங்களை இம்முறையில் அறவே நீக்கலாம். நெடுங்காலப் போக்கு நேர்கோடாக இல்லாமல் வளைவு கோடு போக்காக இருப்பின், இம்முறையைப் பின்பற்றுவதில் பல சிரமங்கள் உள்ளன. மேல் நோக்கிய குவிந்த போக்கினை, நகரும் சராசரிகள் மூலம் கணக்கிட்டால், மதிப்பிடும் போக்குகள் உண்மையில் இருக்கவேண்டியதை விட அதிகமாகக் காட்டும். அதேபோல் மேல் நோக்கிய குழிந்த போக்கினை உடைய காலத்தொடர் வரிசையில் இம்முறையைப் பயன் படுத்தினால் குறைவான அளவுடையதான போக்குகளைக் காட்டும். இம்முறையும் பலவித வேறுபாடுகள் கொண்டது. வேறுபட்ட நிலைகளுக்குத் தக்கபடி மாறுபாடுகளைக் காட்டும். இதில் கால அளவு நிர்ணயம் அனேகமாக ஒன்றாகவே இருக்கும். இந்த முறையில் அடுத்து நிகழும் எதிர்கால கணிப்புகளை சரிவர நிகழ்த்தமுடியாது.

எடுத்துக்காட்டு 1

நகரும் சராசரிகளைக்கொண்டு நெடுங்கால போக்கினை அளவிடுதல்

| வருடம் | பாங்க் கொடுத்த பணம் (கோடியில்) | 5 ஆண்டு கூடுதல் | 5 ஆண்டு நகரும்சாரசரி |
|---|---|---|---|
| 1956 | 53 | — | — |
| 1957 | 73 | — | — |
| 1958 | 76 | 343 | 68.6 |
| 1959 | 66 | 384 | 76.8 |
| 1960 | 69 | 410 | 82.0 |
| 1961 | 94 | 421 | 84.2 |
| 1962 | 105 | 434 | 86.8 |
| 1963 | 86 | 469 | 93.8 |
| 1964 | 79 | 472 | 94.4 |
| 1965 | 104 | 459 | 91.8 |
| 1966 | 97 | 473 | 94.6 |
| 1967 | 92 | — | — |
| 1968 | 101 | — | — |

எடுத்துக்காட்டு 2: நகரும் சராசரிகளை மையமாக்கி கணக்கிடுதல்

| வருடம் | உற்பத்தி | 4 ஆண்டு மொத்தம் | 4 ஆண்டு சராசரி | மையமாக்கப் பட்ட நகரும் சராசரி |
|---|---|---|---|---|
| 1961 | 464 | — | — | — |
| 1962 | 515 | — | — | — |
| | | → 1964 | 491.0 | |
| 1963 | 518 | | | 495.7 |
| | | → 2002 | 500.5 | |
| 1964 | 467 | | | 503.6 |
| | | → 2027 | 506.75 | |
| 1965 | 502 | | | 511.6 |
| | | → 2066 | 516.5 | |
| 1966 | 540 | | | 529.5 |
| | | → 2170 | 542.5 | |
| 1967 | 557 | | | 553.0 |
| | | → 2254 | 563.5 | |
| 1968 | 571 | | | 572.5 |
| | | → 2326 | 581.5 | |
| 1969 | 586 | — | — | — |
| 1970 | 612 | — | — | — |

### 5.9.4 கணித வளைகோடுகள் முறை

**(Method of mathematical curves)**

இம்முறையே மற்ற எல்லா முறைகளை விட சிறந்த முறையாக கருதப்படுகிறது. இம்முறைபடி நெடுங்காலப் போக்கானது கணித சமன்பாடு (mathematical equation) ஒன்றை ஒட்டயமைந்துள்ளதாக அனுமானித்து பிறகு சமன்பாட்டிலுள்ள மாறிலிகளை (constant) சமன்பாட்டை அமைத்துக் கொள்வோம். இச்சமன்பாட்டை உபயோகித்து குறிப்பிட்ட காலத்திற்குரிய நெடுங்கால போக்கின் மதியீட்டைக் கணக்கிட இயலும். "குறைந்த வர்க்க முறை" (method of least squares) மூலம் சமன்பாடுகளை அமைக்கலாம். கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களை ஒரு சாதாரண வரைப்படத் தாளில் சுமாராகப் பொருத்திப் பார்க்க அது ஒரு நேர்க்கோடு அல்லது K படித்தான வளைகோடு (K degree polynomial) என்பதைக் கணிப்பர். அரை-லாகிரத (Semi logarithmic) அல்லது முழு-லாகிருத வரைதாளிலும் வரைந்து நெடுங்காலப் போக்கு எத்தகையது என அனுமானிப்பது உண்டு.

### 5.9.5 ஒரு நேர்கோட்டைப் பொருத்துதல் (Fitting of straight line)

$y_t = a_0 + a_1 t$ என்பது சமன்பாடு. இங்கு நாம் மதிப்பிட வேண்டிய மாறிலிகள் $a_0$, $a_1$ என்பவை.

இப்பொழுது $V = \Sigma [y_t - (a_0 + a_1 t)]^2$ என்று எழுதுவோம். அதாவது $y_t$ என்பது கொடுக்கப்பட்ட மதிப்பு; $(a_0 + a_1 t)$ என்பது சமன்பாட்டின் மூலம் கிடைக்கும் மதிப்பு. பொருத்தும் நேர்கோடு செம்மையாக இருக்குமானால் இந்த இரண்டு மதிப்புகளுக்கிடையே இருக்கும் வித்தியாசம் சிறியதாக இருக்கும். V என்பது, அத்தகைய வித்தியாசங்களின் வர்க்கங்களின் கூட்டுத்தொகை. குறைந்த வர்க்கமுறை என்பது V வகை கணித முறையில் மிகச் சிறியதாக இருத்தல் வேண்டும் என்பதே.

இதற்கான சமன்பாடுகள் (வகை கணிதமுறையில்) $\frac{\delta V}{\delta a_0} = 0$ $\frac{\delta v}{\delta a_1} = 0$ என்பன

வகையிட, $\Sigma (y_t - \overline{a_0 + a_1 t}) (-1) = 0.$
$\Sigma (y_t - \overline{a_0 + a_1 t} (-t) = 0$ என்ற சமன்பாடுகள் கிடைக்கும், இவைகளை எளிதாக்கினால் கீழ்க்கண்ட சமன்பாடுகள் கிடைக்கின்றன.

$$\left.\begin{aligned} \Sigma y_t &= n a_0 + (\Sigma t)\, a_1 \\ \Sigma t.\, y_t &= (\Sigma t).\, a_0 + (\Sigma t^2).\, a_1 \end{aligned}\right\} \quad \text{— (2)}$$

இவைகளை இயல்பான (Normal) சமன்பாடுகள் என்று அழைப்பார்கள். இவைகளைத் தீர்க்க, $a_0$, $a_1$ இவைகளின் மதிப்புகள் கிடைக்கும்.

எடுத்துக் காட்டு 3: கொடுக்கபட்ட விவரங்களைக் கொண்டு ஒரு நேர்க்கோட்டு போக்கை அமைக்கவும்; 1969ம் ஆண்டு உற்பத்தி எவ்வளவாக இருக்கும் என்றும் மதிப்பிடவும்.

| ஆண்டுகள் | 1961 | 1962 | 1963 | 1964 | 1965 | 1966 | 1967 |
|---|---|---|---|---|---|---|---|
| உற்பத்தி (000,மணங்கு) | 81 | 90 | 92 | 83 | 94 | 99 | 92 |

இங்கு கொடுக்கப்பட்ட ஆண்டுகள் ஏழு- (ஒற்றைப் படை எண்), எனவே இவைகளின் இடைநிலையான 1964ம் ஆண்டை 0 என்று குறித்து tன் மதிப்புகளை முறையே -3, -2, -1, 0, 1, 2, 3 என்று கணக்கிடுதல் எளிது. விவரங்கள் பட்டியலில் உள்ளன.

| ஆண்டு | tன் மதிப்பு | உற்பத்தி | $t^2$ | $t_y$ |
|---|---|---|---|---|
| 1961 | —3 | 80 | 9 | – 240 |
| 1962 | —2 | 90 | 4 | —180 |
| 1963 | —1 | 92 | 1 | —92 |
| 1964 | 0 | 83 | 0 | 0 |
| 1965 | 1 | 94 | 1 | 94 |
| 1966 | 2 | 99 | 4 | 198 |
| 1967 | 3 | 92 | 9 | 273 |
| மொத்தம் | 0 | 630 | 28 | 56 |

நேர்க் கோட்டு போக்கு $y = ao + a_1 t$

இடல்பான சமன்பாடுகள் $\Sigma y = a_0 . n + a_1 . \Sigma t$

$$\Sigma ty = a_0 . \Sigma t + a_1 . \Sigma t^2$$

மதிப்புகளைப் பொருத்த,

$7a_0 + 0 = 630$, அதாவது $a_0 = 90$

$28a_1 = 56$ $a_1 = 2$

∴சமன்பாடு $y = 90 + 2t$

இங்கு $t = (1964-x)$ ஆதலால். $y = 90+2\,(x-1964)$
இப்பொழுது 1969-ம் ஆண்டுக்கான உற்பத்தியைக் கணக்கிட $x=1969$ அல்லது $t= 5$ என்றே பொருத்த வேண்டும்,
1969-ம் ஆண்டுக்கான உற்பத்தி= $90+0 = 100$ என்பது.

நகரும் சராசரி முறையில் போக்கு மதிப்புகளைக் கண்டு பிடித்திருந்தால் 1969-ம் ஆண்டுக்கான உற்பத்தியின் மதிப்பீடு கிடைத்திருக்காது, இங்கு குறிப்பிடத்தக்கது.

எடுத்துக்காட்டு 4: கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து ஒரு நேர்க் கோட்டைப் பொருத்தி, அதிலிருந்து எல்லா ஆண்டுகளுக்குமான மதிப்பீடுகளை கணக்கிட்டு மற்றும் அதே போக்கு இன்னமும் 4 ஆண்டுகள் இருக்கும் என்ற கருத்தில் 1961-ம் ஆண்டில் எவ்வளவு நோயாளி படுக்கைகள் தேவைப்படும் என்று மதிப்பிடு.

| ஆண்டு. | 1946 | 47, | 48 | 49 | 50 | 51 | 52 | 53 | 54 | 55 | 56 | 57 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மருத்துவ மனைகளின் நோயாளி படுக்கைகள் | 473, | 465, | 472, | 477, | 505, | 516. | 531 | 546. | 553, | 563, | 586, | 595 |

இங்கு கொடுக்கப்பட்ட ஆண்டுகள் 12-இரட்டைப்படை எண். எனவே முன் போலவே இவைகளின் இடைநிலையான 1951 5என்ற ஆண்டை மையமாக்கி, அரையாண்டை அலகாக்கினல் முறையே t-ன்மதிப்புகள் —11, - $a$, —7, —5, —3, —1, +3, +5, +7, +9 +11 என்று வரும் இப்பொழுதும் $\Sigma$ t= o என்று வருவதால் கிடைக்கும் இயல்பான சமன்பாடுகளின் தீர்வு காணல் எளிதாகிறது.

நேர்க்கோடு $y = a_0 + a_1 t$

இயல்பான சமன்பாடுகள் $\Sigma y = 12\, a_0 + (\Sigma t) . a_1$

$\Sigma yt = (\Sigma t)\, a_0 + (\Sigma t^2) .\, a_1$

எனவே $12 a_0 = 6287_1\ a_0 = 523.92$

$5729_1 = 3561\ _1\ a_1 = 6.33$

$y = 523.92 + 6.33t$

| ஆண்டு | t | y | $t^2$ | yt | Y-ன் மதிப்புகள் |
|---|---|---|---|---|---|
| 1946 | —11 | 473 | 121 | —5203 | 445.29 |
| 47 | —9 | 465 | 81 | —4185 | 466.95 |
| 48 | —7 | 472 | 49 | —3304 | 479.61 |
| 49 | 5 | 477 | 25 | —1515 | 492,27 |
| 1950 | —3 | 505 | 9 | —516 | 504.93 |
| 51 | —1 | 5 6 | 1 | 531 | 517.59 |
| 52 | +1 | 531 | 1 | 638 | 530.25 |
| 53 | 3 | 546 | 9 | 1638 | 542.91 |
| 54 | 5 | 553 | 25 | 2765 | 555.57 |
| 55 | 7 | 568 | 49 | 3976 | 567.23 |
| 56 | 9 | 586 | 81 | 5274 | 580.89 |
| 57 | 11 | 595 | 121 | 6545 | 593.55 |
| | 0 | 6287 | 3621 | 3621 | |

இப்பொழுது முறையே t-ன் மதிப்புகளை சமன்பாட்டில் பொருத்தி கணக்கிட 1946-ம் ஆண்டிலிருந்து மற்ற ஒவ்வொரு ஆண்டின் மதிப்பீடும் கிடைக்கும். இவைகள் கடைசி நிரலில் உள்ளன.

இதே போக்கு மேலும் 4 ஆண்டுகளுக்கு இருக்குமானல் 1961-ம் ஆண்டிற்கு t=19 என்று பொருத்த வேண்டும்.

மதிப்பீடு = $523.92 + 6.32 \times 19 = 644.19$ அல்லது 645 படுக்கைகள் தேவைப்படும்.




படம் 7

ஆஸ்பத்திரி நோயாளி படுக்கை எண்ணிக்கைகளுக்கான நேர்கோடு

அடுத்தபடம் -7ல் கொடுக்கப்பட்ட விபரங்களும் நேர்கோடும் பொருத்தப்பட்டிருப்பதைக் காணலாம். முதல் சில ஆண்டுகளுக்கு நேர்கோடு அவ்வளவு பொருத்தமாக இல்லை. ஆனால் 1951-ம் ஆண்டிற்கு பிறகு பொருத்தம் மிக நேர்த்தியாக உள்ளது என்றே கூறவேண்டும்.

குறைந்த வர்க்க முறையை உபயோகபடுத்தி இருபடி சமன் பாடுகளையும், அதற்கும் அதிகமானபடித்தான சமன்பாடுகளையும் கொடுக்கப்பட்ட விவரங்களுக்கு பொருத்தலாம். வழிமுறை நேர்கோடு ஒட்டியது தான்; ஆனால் மேலும் சற்று கடினமான, எண்ணிக்கை அதிகமான இயல்பான சமன்பாடுகளை நிறுவி தீர்வுகள் காணவேண்டும்.

5.96 இருபடி சமன்பாட்டை பொருத்துதல்.

கொடுக்கப்பட்ட விவரங்கள் $y_1\, y_2\ \ y_n$ என்பன. இவை களுக்கு பொருத்த வேண்டியவளைகோடு $y = a_0 + a_1 t + a_2 t^2$ என்பது எனவே மதிப்பிடவேண்டிய மாறிலிகள் $a_3$, $a_1$, $a_2$; இவை மூன்றையும் கணக்கிட நமக்கு மூன்று சமன்பாடுகள் தேவை. இவைகளை நிறுவ நாம் குறைந்த வாக்க முறையை பயன்படுத்துவோம்.

முன்போலவே,

$$U = \sum_{i=1}^{n} \left( y_i - \overline{a_0 + a_1 t + a_2 t^2} \right)^2$$ என்று எழுதி, வகை கணித வழியில் U — என்பது மிகக் குறைவாக இருக்கவேண்டும் என்போம். அப்பொழுது கிடைக்கும் சமன்பாடுகள்:

$$\frac{\delta U}{\delta a_0} = o\ ; \quad \frac{\delta U}{\delta a_1} = o\ ; \quad \frac{\delta U}{\delta a_2} = o.$$

U - வினை முறையே வகையிட

$$\frac{\delta V}{\delta a_0} = 2 . \Sigma\, ( y_i - \overline{a_0 + a_1 t + a_2 t^2}) . (-1) = o$$

$$\frac{\delta U}{\delta a_1} = 2 . \Sigma\, (y_i - \overline{a_0 + a_1 t + a_2 t^2}) . (-t) = o$$

$$\frac{\delta U}{\delta a_2} = 2 . \Sigma\, (y_i - \overline{a_0 + a_1 t + a_2 t^2}) . (-t^2) = o$$ என்று வருகிறது.

இவைகளை எளிதாக்கினால்

$$\Sigma y_i = a_0.n + a_1.(\Sigma t) + a_x(\Sigma t^2)$$
$$\Sigma ty = a_0.(\Sigma t) + a_1.(\Sigma t^2) + a_2.(\Sigma t^3)$$
$$\Sigma t^2.y_i = a_0.(\Sigma t^2) + a_i(\Sigma t^3) + a_2.(\Sigma t^4)$$

என்ற மூன்று இயல்பான சமன்பாடுகள் கிடைக்கும்; இவைகளை தீர்ப்பதால் $a_0, a_1, a_2$ —களின் மதிப்புகளைப் பெறலாம்.

குறித்த எடுத்துக்காட்டில் இந்த சமன்பாடுகள் அதிகமான எண்களை யுடையதாக அமையும்; அவைகளை எளிதாக்க, நேர் கோடுமுறையில் செய்தது போல், ஒரு பொருத்தமான மூலத்தை தேர்ந்தெடுத்து, பொருத்தான அலகினையும் தேர்ந்தெடுத்து t-ன் மதிப்புகளைப் பெற்றால், $\Sigma t_1$ $\Sigma t^3$ இரண்டும் பூஜ்யமாக அமையு மாறு செய்யலாம். அப்படி செய்தால் இயல்பான சமன்பாடுகள் எளிதானவைகளாகின்றன. கணக்கை செய்ய கணித கணிப்பான்கள் (Calculators) கிடைத்தால். இந்த மூலமெடுக்கும் முறையைக்கூட தவிர்க்கலாம்.

எடுத்துக்காட்டு 5: *1960-65* ஆண்டுகளுக்கான விலைப்பட்டியல் கீழே உள்ளது. இவைகளுக்கு ஓர் இருபடி வளைகோடு பொருத்தி அதிலிருந்து *1967*ம் ஆண்டிற்கான விலையை மதிப்பீடு செய்க.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1960 | 1961 | 1962 | 1963 | 1964 | 1965 |
| 100 | 107 | 128 | 140 | 181 | 192 |

மூலத்தை *1962*ம் ஆண்டாக வைத்து. t–ன் மதிப்புகளை முறையே, —2, —1, 0, 2, 3 என்று எழுதுவோம். கணக்கு விவரங்கள் அடுத்த பட்டியலில்;

| ஆண்டு X | விலைகள் yi | t | $t^2$ | $t^3$ | $t^4$ | ty | $t^2y$ |
|---|---|---|---|---|---|---|---|
| 1960 | 100 | —2 | 4 | —8 | 16 | —200 | 400 |
| 1961 | 107 | —1 | 1 | —1 | 1 | —107 | 107 |
| 1962 | 128 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 1963 | 140 | +1 | 1 | +1 | 1 | 140 | 140 |
| 1964 | 181 | +2 | 4 | +8 | 16 | 362 | 724 |
| 1965 | 192 | +3 | 9 | +27 | 81 | 576 | 1728 |
| — | 848 | +3 | 19 | +27 | 1195 | 771 | 2099 |

போக்கின் சமன்பாடு $Y = a_0 + a_1t + a_2t^2$ ; இங்கு t = X - 1962

இயல்பான சமன்பாடுகளில், மதிப்புகளை பொருத்த

$$848 = 6a_0 + 3a_1 + 19a_2$$
$$771 = 3a_0 + 19a_1 + 27a_2$$
$$2099 = 19a_0 + 27a_1 + 1195a_2$$

இவைகளைத் தீர்ப்பது எளிதான காரியமில்லை. எனவே அடுத்த பக்கத்தில் வேறு ஒரு முறையில் இதனைச் செய்வோம்.

இதே கணக்கில் மூலத்தை X...களில் இடைநிலையான 1962.5 என்று வைத்து, அரையாண்டை அலகாக வைத்து t—ன் மதிப்புகளை முறையே —5, —3, —1, 1, 3, 5 என்றும் எழுதிக்கணக்கிடலாம். இந்த விவரங்ககள் அடுத்தபட்டியலில் உள்ளன.

| விலைகள் y | $t$ | $t^2$ | $t^3$ | $t^4$ | $ty$ | $t^2y$ |
|---|---|---|---|---|---|---|
| 100 | —5 | 25 | —125 | 625 | —500 | 2500 |
| 107 | —3 | 9 | —27 | 81 | —321 | 963 |
| 128 | —1 | 1 | —1 | 1 | —128 | 128 |
| 140 | +1 | 1 | 1 | 1 | +140 | 140 |
| 181 | +3 | 9 | 27 | 81 | +543 | 1629 |
| 192 | +5 | 25 | 125 | 625 | +960 | 4800 |
| 848 | 0 | 0 | 0 | 1414 | +694 | 10,160 |

சமன்பாடுகளில் இந்த மதிப்புகளை பொருத்த

$$\left.\begin{aligned} 848 &= 6a_0 + \quad\quad + 70a_2 \\ 694 &= \quad\quad 70a_1 \\ 10960 &= 70a_0 + \quad\quad + 1414a_2 \end{aligned}\right\} \begin{aligned} &(i) \\ &(ii) \\ &(iii) \end{aligned}$$ என்றுவரும்

இப்பொழுது $a_1$—ன் மதிப்பு மிக எளிதாக கிடைக்கின்றது,

$$a_1 = \frac{694}{70} = 9.914$$

மற்ற இரண்டு சமன்பாடுகளை தீர்ப்போம்.

(i)×70 $420a_0 + 4900\ a_2 = 59360$

(iii)×6 $420a_0 + 8484\ a_2 = 60960$

கழிக்க $358492 = 1600\ a_2 = \frac{1600}{3584} = 0.4465$

எனவே $6a_0 = 848 - 70a_2 = 816.6550$

அல்லது $a_0 = 136.1142$

சமன்பாடு $Y = 136.1142 + 9.914\ t + .4465t^2$

அல்லது $Y = 136.1142 + 9.914 \left(\frac{X - 1962.5}{2}\right) + .4465 \left(\frac{X - 1962.5}{2}\right)^2$

1967—ம் ஆண்டிற்கு சரியான t-ன் மதிப்பு 9—என்பது அதனை பொருத்தினால் கிடைக்கும் மதிப்பீடு = 261.5067

### 5.9.7 பலபடித்தான வளைகோட்டைப் பொருத்துதல்

**பொதுவாக, $Y = a_0 + a_1t + a_1t + a_2t^2 + .. + a_kt^k$ என்ற வளைகோட்டைப் பொருத்துவதற்கும், மேற்கூறிய குறைந்த வர்க்க முறையைப் பயன்படுத்தி (k + 1) சமன்பாடுகளை நிறுவலாம்.**

**$U = \Sigma [\ y - (\ a_0 + a_1t + ... a_kt^k\ )\ ]^2$ என்பது மிகக்குறைவாக $\frac{\delta U}{\delta a_i} = 0 \quad i = 0_1\ 1, 2 ... k.$ இவைகளை எளிதாக்க நமக்கு கீழ் வரும் (k + 1) சமன்பாடுகள் கிடைக்கும்.**

$$\Sigma\ y = a_0 . n + a_1\ (\Sigma\ t) + a_2\ (\Sigma\ t^2 + ... + a_k\ (\Sigma t^k\ )$$

$$\Sigma\ ty = a_0 . (2t) + a_i . (\Sigma\ t^2) + a_2 . (\Sigma\ t^3) + ... + a_k)\ \Sigma\ t^{k+1})$$

$$\Sigma\ t^k\ y = a_0 . (\Sigma t^k\ ) + a_1 . (\Sigma t^{k+1}) + a_2 . (\Sigma t^{k+2} + .. + a_k . (\Sigma t^{2k}\ )$$

**அதாவது, கொடுக்கப்பட்ட சமன்பாட்டை முறையே, 1, t, $t^2$ ... $t^k$ என்பவைகளால் பெருக்கி, சமன்பாட்டையே மொத்தமாக்கினால், மேலுள்ள இயல்பான சமன்பாடுகள் கிட்டும்.**

எடுத்துக்காட்டு 6: $y = a_0 + a_1 t + a_2 t^2 + a_3 t^3$ என்ற வளைகோட்டை கொடுத்துள்ள விவரங்களுக்குப் பொருத்துக.

| x | 1911 | 1912 | 1913 |
|---|---|---|---|
| y | 1.2 | 8.1 | 27.3 |

இங்கு $t = (x^{-1912})$ என்று வைத்துக்கொள்வோம். அப் பொழுது இயல்பான சமன்பாடுகள் கீழ்வருமாறு அமையும்.

$\Sigma y = a_0 . n + a_1 . . (\Sigma t) + a_2 . (\Sigma t^3)\ a_3 (\Sigma t^3$

$\Sigma ty = a_0 . (\Sigma t) + a_1 . (\Sigma t^2) + a_2 . (\Sigma t^3) + a_3 . (\Sigma t^4)$

$\Sigma t^2 y = a_0 . (\Sigma t^2) + a_1 . (\Sigma t^3) + a_2 . (\Sigma t^4) + a_3 . (\Sigma t^5)$

$\Sigma t^3 y = a_0 . (\Sigma t_3) + a_1 . (\Sigma t^4) + a_2 . (\Sigma t^5) + a_3 . (\Sigma t^6)$

இங்கு நாம் $\Sigma t^6$ வரையும் $\Sigma t^3 y$ வரையும் கணக்கிடவேண்டும். பட்டியலை அமைப்போம்.

| x | y | t | $t^2$ | $t^3$ | $t^4$ | $t^5$ | $t^6$ | $t_y$ | $t^2_y$ | $t^3_y$ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 11 | 1.2 | —1 | 1 | —1 | +1 | —1 | 1 | —1.2 | 1.2 | —1.2 |
| 12 | 8 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 13 | 27.3 | +1 | 1 | 1 | +1 | 1 | 1 | +27.3 | 27.3 | +27.3 |
| மொத்தம் | 36.6 | 0 | 2 | 0 | 2 | 0 | 2 | +26.1 | 28.5 | +26.1 |

மூலத்தை சரியாகத் தேர்ந்தெடுத்தலால், $\Sigma t = \Sigma t^3 = \Sigma t^5 = 0$ என்று வந்துள்ளதைக் கவனிக்கவும். இந்த மதிப்புகளை இயல் பான சமன்பாடுகளில் பொருத்தினல்,

$36.6 = 3a_0\ 2a_2$

$26.1 = 2a_2 + \ + 2a_2$

$28.5 = 2a_0 \ + 2a_1$

$26.1 = 2a_2 + 2a_3$

தீர்க்க: $a_0 = 8.1\ a_2 = 6.15$ என்ற விடைகள் வருகின்றன.

மற்ற இருசமன்பாடுகளையும் தீர்ப்பது எளிதல்ல. ஏனென் றல் இரு சமன்பாடுகளும் $a_1 + a_3 = 13.05$ என்ற ஒரே சமன்

பாடுவாகத்தான் உள்ளன. ஒவ்வொன்றையும் 6.525 என்று வைத்துக் கொள்ளலாம்.

அப்பொழுது சமன்பாடு;

$$y = 8.1 + 6.525t + 6.15t^2 + 6.555t^3; \quad t = x - 1912$$

என்று வருகிறது.

குறிப்பு: பயிற்சிக்காக, எளிதாக கருதப்பட்ட எடுத்துக்காட்டாதலால் இவ்வாறுவரும்; மூன்றுக்குமேல், விவரங்கள் இருப்பின் $\Sigma t$ மற்றும் $\Sigma t^3$ சமனாக இருக்காது; எனவே இத்தகைய இடர்பாடும் நேராது.

### 5.9.8 மற்றைய வளைகோடுகளை பொருத்துதல்:

கொடுக்கப்பட்ட விவரங்களுக்கு எத்தகைய வளைகோட்டை பொருத்துவது என்பது ஒரு பிரச்சினை—மேலே கூறியவற்றில் இத்த பிரச்சினைக்கு விடை இல்லை. கருதிய வளைகோடு ஒரு படித்தானதா,' இருபடித்தானதா, அல்லது இன்னமும் அதிக படித்தானதா என்பதை எப்படி நிர்ணயிப்பது என்ற விவரங்கள் இதுவரைத் தரப்படவில்லை. ஏதாவதொன்றை கருதினால், அந்த வளைகோட்டை பொருத்துவதற்கான வழிமுறைகள் விளக்கப் பட்டன.

கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து, இந்தப் பிரச்சினைக்கு எவ்வாறு தீர்வு காணுவது என்பதை இப்பொழுது நோக்குவோம். இரண்டு முறைகள் உள்ளன எனப் பொதுவாகக் கூறலாம். (1) வரைபட முறை: விவரங்களை வரைபடத்தில் பொருத்தி அந்தப் புள்ளிகள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதைக் கவனிப்பது. பொதுவாக ஒரு நேர்கோட்டில் அடங்கும் என்று கருதினால் நேர்கோட்டைப் பொருத்தலாம்; வளைகோடுதான் அப்புள்ளிகளின் போக்கு என்றால், எந்தப் படித்தான (degree) பல்லுறுப்புக் கோவையைப் பொருத்துவது? இரண்டடுக்கா, மூன்றடுக்கா, அல்லது நான்கடுக்கா? அல்லது இத்தகைய வளைகோடுகளே இல்லாமல் வேறு ஏதாவதொன்றா? படிப்படியாகப் பொருத்திப் பார்த்து—முதலில் இரு அடுக்கு, பிறகு மூன்றடுக்கு இவ்வாறு—புள்ளிகள் இந்த வளைகோடுகளுக்குப் பொருத்தமானவை என்று கருதமுடியுமா என்பதனை முடிவு செய்வது. இதில் பற்றற்ற முறையில் விடை கிடைக்கும் என்றுகூற இயலாது. ஒருவர் ''பொருத்தம் பரவாயில்லை', எனலாம்;

வேறொருவர் பொருத்தம் சரியாக இல்லை' என்றும் கூறிவிடலாம். (2) கணக்கியல் முறைகளைப் பயன்படுத்துவது. இதனை விளக்கு வோம்.

கொடுக்கப்பட்ட விவரங்கள்: $y_1, y_2, y_3, y_4, y_5, y_6, \ldots$ என்பவை. இவைகளின் வித்தியாசங்களை (differences) கணக்கிடுவோம் முதல்படியில்; அவைகளை $\Delta_1$ என்று குறிப்பிடுவோம்; பிறகு அந்த வித்தியாசங்களுக்கு வித்தியாசங்களை—அதாவது முதல் நிலை விவரங்களுக்கு இரண்டாம் படி வித்தியாசங்களை—கணக்கிட்டு அவைகளை $\Delta^2$ என்றழைப்போம். இவ்வாறே பல படிகள் செல்லலாம். அதாவது:

| விவரகள் (1) | முதல்படி வித்தியாசம் (2) | இரண்டாம் படிவித்தியாசம் (3) | மூன்றும்படி வித்தியாசம் (4) | ... |
|---|---|---|---|---|
| y | $\Delta_d$ | $\Delta^2$ | $\Delta^3$ | ... |
| $y_1$ | $\Delta_1 = y_2 - y_1$ | $\Delta^2_1 = \Delta_2 - \Delta_1$ | $\Delta^3_1 = \Delta_2^2 - \Delta_1^2$ | ... |
| $y_2$ | $\Delta_2 = y_3 - y_2$ | $\Delta^2_2 = \Delta_3 - \Delta_2$ | $\Delta^3_2 = \Delta^3_2 - \Delta_2^2$ | ... |
| $y_3$ | $\Delta_3 = y_4 - y_3$ | $\Delta_3^2 = \Delta_4 - \Delta_3$ | $\Delta^2_3 = \Delta^2_4 - \Delta_2^2$ | ... |
| $\cdot_4$ | $\Delta_4 = y_5 - y_4$ | $\Delta^3_4 = \Delta_5 - \Delta_4$ | | |
| $y_5$ | $\Delta_5 = y_6 - y_5$ | | | |
| $y_6$ | . | | | |
| : | . | | | |

இரண்டாம்(2) நிரலில் (column) உள்ள எண்கள் ஏறக்குறைய சமமதிப்பானவையாக இருப்பின், பொருத்தமானது நேர்கோடு தான்; மூன்றும்(3) நிரலில் உள்ள எண்கள் சற்றேறக்குறைய சமமதிப்புகளானால், இரண்டடுக்கு வளைகோட்டை பொருத்த வேண்டும்; இவ்வாறே அதிகப்படி வளைகோடுகளைப்பற்றி முடிவு செய்யலாம் [மிக அதிகமான 'படி' வளைகோடு 4-ம் அடுககுவரை தான்; இதற்கும் மேல்படித்தான வளைகோடுகளை பொருத்துவதே இல்லை என்று துணிந்து கூறலாம்.]

இதற்கு விளக்கம்: -முதலில் $y = a_0 + a_1 t$ என்றுகருதுவோம்; இப்பொழுது $t = 1$ என்றால் மதிப்பு $y_1 = a_0 + a_1$ ; $t_2$ என்றால், மதிப்பு $y_2 = a_0 + a_1 . 2$; அவ்வாறே, $y_3 = a_0 + 3a_1$, $y_4 = a_0 + 4a_1$, .. என்று வரும் முதல்படி வித்தியாசங்களை கணக்கிட

$\triangle_1 = a = \triangle_2 = \triangle_3 = \triangle_4 = \ldots\ldots\ldots$ என்று கிடைக்கும். எனவே முதல்படி வித்தியாசங்கள் சமமாக இருப்பின், பொருத்தப்பட வேண்டிய வளைகோடு நேர்கோடு என்பது தெளிவாகின்றது.

வளைகோடு இருபடித்தானது என்போம்; அதாவது $y = a_0 + a_1t + a_2t^2$

அப்பொழுது

$$y_1 = a_0 + a_1 + a_2$$
$$y_2 = a_0 + 2a_1 + 4a_2$$
$$y_3 = a_0 + 3a_1 + 9a_2$$
$$y_4 = a_0 + 4a_1 + 16a_2$$

எனவே $\triangle_1 = 3a_2 + a_1$; $\triangle_2 = 5a_2 + a_1$; $\triangle_3 = 7a_2 + a_1 \ldots\ldots$

அப்பொழுது $\triangle_1^2 = 2a_2$; $\triangle_2^2 = 2a_2$; $\triangle_3^2 = 2a_2 \ldots\ldots$

எனவே, இரண்டாம் படி வித்தியாசங்கள் சமமாக உள்ளன.

இவ்விரண்டு முறைகளிலும் நாம் ஒரு முடிவுக்கு வரமுடியவில்லை என்றால் வேறு வகை வளைகோடுகளைப்பற்றி ஆராயவேண்டும் என்று பொருளாகும். அப்பொழுது நமக்குத் தேர்ந்தெடுக்க இருக்கும் களம் மிக விஸ்தாரமானதாகிவிடுகிறது. குறிப்பாக சில வளைகோடுகளைப்பற்றி மட்டும் விளக்குவோம்.

(அ) லாகிருதமுறை (அல்லது மடக்கைமுறை) வளைகோடுகள்

(i) $y = ab^t$ என்ற வளைகோடு

லாகிரதம்களை எடுக்க:

(அடிப்படை 10 என்றும் வைத்துக் கொள்ளலாம்)

$$\log y = \log a + t \,.\, \log b$$

அல்லது $Y = A + Bt$ இங்கு $Y = \log y$; $A = \log a$; $B = \log b$.

இப்பொழுது Y மற்றும் t என்பவை ஒரு நேர்கோட்டில் அமைவதைக் காணலாம். எனவே y என்ற மாறியைக் கருதாது Y(=log y) என்ற மாறியைக் கருதி முன்போலவே குறைந்த வர்க்கமுறையில் A,B-களின் மதிப்புகளைப் பெறலாம்.

இயல்பான சமன்பாடுகள்:

$$\Sigma Y = A \,.\, n + B \,.\, \Sigma t$$
$$\Sigma Yt = A \,.\, \Sigma t + B \,.\, \Sigma t^2$$

இவைகளைத் தீர்த்தால் A, B-களின் மதிப்பு கிடைக்கும். அப்பொழுது a = antilog A; b = antilog B என்று கணக்கிட்டு, a,b களின் மதிப்புகளைப் பெறலாம்.

எடுத்துக்காட்டு 7: கொடுக்கப்பட்ட விவரங்களுக்கு ஒரு $Y = ab^t$ என்ற வளைகோட்டைப் பொருத்துக.

| ஆண்டுகள் | 1962 | 1963 | 1964 | 1965 | 1966 |
|---|---|---|---|---|---|
| உற்பத்தி | 70 | 75 | 82 | 88 | 95 |

1968-ம் ஆண்டுக்கான உற்பத்தியின் மதிப்பீடு என்ன? பட்டியல் நிறுவுவோம்.

| ஆண்டு X | உற்பத்தி Y | y=log Y | t=X—1964 | $t^2$ | ty |
|---|---|---|---|---|---|
| 1962 | 70 | 1.8451 | —2 | 4 | —3.6902 |
| 1963 | 75 | 1.8751 | —1 | 1 | —1.8751 |
| 1964 | 82 | 1.9138 | 0 | 0 | 0 |
| 1965 | 88 | 1.9445 | 1 | 1 | +1.9445 |
| 1966 | 95 | 1.9777 | 2 | 4 | +3.9554 |
| மொத்தம் | — | 9.5562 | 0 | 10 | +0.3346 |

எனவே, இயல்பான சமன்பாடுகள்:

$5A = 9.5562$ $\quad$ $A = 1.9111$

$10B = 0.3346$ $\quad$ $B = 0.03346$

அதாவது $a = \text{antilog } A = 8.149$

$b = \text{antilog } B = 1.080$

எனவே வளைகோடு: $Y = (8.149)\ (1.080)^t$ ; இங்கு $t = X1964$ 1968-ம் ஆண்டுக்கான உற்பத்தியை மதிப்பிட $t = 4$ என்று பொருத்தவேண்டும். இதைவிட:

$y = \log Y = 1.9111 + 0.03346t$ என்ற சமன்பாட்டில் பொருத்துவது எளிது. $y = 2.04494$.

$Y = \text{antilog } (2.04494) = 110.7$

ஆக, 1968-ம் ஆண்டுக்கான உற்பத்தியின் மதிப்பீடு 1.107 என்பது.

குறிப்பு: இத்தகைய வளைகோடு பொருத்தமாக இருக்குமா என்பதனைக் காண, கொடுக்கப்பட்ட விவரங்களை அரை-லாகிருத வரைத்தாளில் (semi-logarithmic graph paper) பொருத்தலாம். அப்பொழுது புள்ளிகள் ஒருநேர்கோட்டு முறையாகவே அமைந்திருக்கும்.

(ii) வளைகோடு $Y = A \times^{B}$ என்றும் இருக்கலாம். இரு பக்கமும் லாகிரதம்களை எடுக்க:

$$\log Y = \log A + B \cdot \log X$$

இதனை $y = a + Bx$ என்று எழுதினல் $y = \log Y$ ; $a = \log A$; $x = \log X$ என்ருகும். அதாவது, இரு மாறிகளும் லாகரிதமாக்கப்பட்டுள்ளன ; மற்றும் அவைகளிடையே ஒரு நேர்கோட்டுப் பொருத்தமுள்ளது மேற்கூறினதுபோலவே, இந்தப் போக்கை அளவிட, இரட்டைபடி லாகரிதமிக் வரைதாள்களை (double logarithmic graph paper) பயன்படுத்தலாம்.

எடுத்துக்காட்டு 8 : கீழ்கண்ட விவரங்களுக்கு $x^n y = c$ என்ற வளைகோட்டைப் பொருத்தி, n, c களின் மதிப்புகளைக் கணக்கிடுக. மற்றும் இரட்டைபடி லாகிரதமிக் வரைத்தாளில் புள்ளிகளை வரைந்தும், n, c களை மதிப்பிடுக. (பி.எஸ்ஸி)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| x | *37.36* | *31.34* | *26.43* | *19.08* | *16.33* | *14.04* |
| y | *10.16* | *12.26* | *14.30* | *20.80* | *24.54* | *28.13* |

கொடுக்கப்பட்ட வளைகோடு $x^n y = c$
இரு பக்கமும் லாகிரதம் எடுக்க :

$$n\log x + \log y = \log C$$

அதாவது $nX + Y = C$ அல்லது $Y = C - nX$ என்ற நேர் கோடு கிடைக்கின்றது. எனவே, இயல்பான சமன்பாடுகள்.

$$\left.\begin{aligned} \Sigma Y &= 6C - n \cdot (\Sigma x) \\ \Sigma XY &= C \cdot (\Sigma x) - n \cdot (\Sigma x^2) \end{aligned}\right\}$$ என்டவை. தேவைப்பட்டவைகளை அடுத்த பட்டியலில் கணக்கிடுவோம்.

| $X = \log x$ | $Y = \log y$ | $X^2$ | $XY$ |
|---|---|---|---|
| 1.5724 | 1.0068 | 2.4724 | 1.5831 |
| 1.4961 | 1.0885 | 2.2383 | 1.6285 |
| 1.4221 | 1.1553 | 2.0224 | 1.6430 |
| 1.2806 | 1.3181 | 1.6399 | 1.6880 |
| 1.2130 | 1.3899 | 1.4714 | 1.6859 |
| 1.1473 | 1.4599 | 1.3163 | 1.6749 |
| 8.1315 | 7.4185 | 11.1607 | 9.9034 |

இயல்பான சமன்பாடுகள்.

$$7.4185 = 6C - 8.1315\,n$$

$$9.9034 = 8.1315\,C - 11.1607\,n$$

இவைகளைத் தீர்த்தால் $C = 2.6882$ ; $n = 1.0712$

அதாவது $c = \text{antilog}\ C = 487.7$

எனவே, வளைகோடு $x^{1.0712}.y = 487.7$ என்பது.

குறிப்பு : இந்த இரண்டு வளைகோடுகளையும் —$Y = ab^t$ ; $Y = AX^B$ —பொருத்த நாம் குறைந்தவர்க்கமுறையைப் பின்பற்றவில்லை என்பதனை நினைவில் வலியுறுத்த வேண்டும். லாகிருதமாக்கப்பட்ட மாறிகளுக்கே, நாம் குறைந்தவர்க்க முறையைப் பயன்படுத்தியுள்ளோம் என்பது நினைவில் வைத்துக்கொள்ளத் தக்கது. நேர்வழியில் குறைந்த வர்க்கமுறையைப் பயன்படுத்தினால் கிடைக்கும் இயல்பான சமன்பாடுகளைத் தீர்ப்பது கடினம்.

உதா: $Y = ab^t$.

$U = \Sigma (Y - ab^t)^2$ என்பதை மிகக் குறைவானதாக்க

$\frac{\delta U}{\delta a} = 0 = \frac{\delta U}{\delta b}$ என்று கிடைக்கும்.

வகையிட $\frac{\delta U}{\delta a} = 2\,\Sigma\,(Y—ab^{t})\,(—b^{t}) = O$ (i)

$$\frac{\delta U}{\delta b} = 2\,(\Sigma Y—ab^{t})\cdot(atb^{t-1}) = O \quad \text{(ii)}$$

என்ற சமன்பாடுகள் கிடைக்கும். இவைகளை எளிதாக்க

$$\left.\begin{array}{l}\Sigma\, Yb^{t} — \Sigma\, ab^{t} = O \\ \Sigma\, ytb^{t-1} — a.\Sigma\, tb^{2t-1} = O\end{array}\right\}$$ என்ற சமன்பாடுகள் வருகின்றன. இங்கு b-ன் மதிப்பு தெரியாதிருக்கும்பொழுது $6^{t}$-ஐ கணக்கிட்டு, அவைகளை மொத்தமாக்கி $\Sigma\, Yb^{t}$ என்பதைப் பெறுவது எளிதில்லை. எனவேதான், லாகிரதமாக்கிய பிறகு குறைந்த வர்க்கமுறையை நாம் பயன்படுத்துகிறோம்.

(ஆ) போக்கை அளவிட ஏனைய வளைகோடுகள்

பலபடித்தான பல்லுறுப்புக் கோவை, மற்றும் லாகிரதமிக் வளைகோடுகளை அல்லாது, நெடுங்காலபோக்கை அளக்க வேறு பல வளைகோடுகளும் பயன்படுத்தப் படுகின்றன. அவைகளில் முக்கியமானவை — லாஜிஸ்டிக் வளைகோடு, மேக்ஹேமின் வளைகோடு முதலியன. இவைகளைப்பற்றிய விவரங்களையும், கொடுக்கப்பட்ட விவரங்களுக்கு இவைகளைப் பொருத்தும் முறைகளையும் வேறொரு அத்தியாயத்தில் (அத்தியாயம் I) காணலாம்.

பல சமயங்களில் நமக்கு உகந்ததாகப்படும் வளைகோடு மேலே கூறியவற்றுள் ஒரு வகையிலும் அடங்காது புதியதாகத் தோன்றலாம். அப்பொழுது, பலவேளைகளில் ஏதாவதொரு மாறி மாற்றத்தினால் (variate transformation) அந்த வளைகோட்டை நாம் எளிதாக்கிவிடக் கூடும். உதாரணமாக $y = a + \frac{b}{x^2}$ என்ற வளைகோட்டை எடுத்துக்கொள்வோம். இதில் $t = \frac{1}{x^2}$ என்ற மாறி மாற்றத்தைச் செய்தால், வளைகோடு $y = a + bt$, அதாவது நேர்கோடாக அமைந்துவிடுகிறது.

5.8.9 அரைச் சராசரி முறை (Semi-average method) குறைந்த வர்க்க முறை எளிதானதே ஆனாலும், ஒரு நேர் கோடு பொருத்த மற்றுமொரு முறையும் கையாளப்படுகின்றது. அதற்கு தான் அரைச்சராசரி முறை என்று பெயர். கொடுக்கப்பட்ட

விவரங்களை இரு சமபாதிகளாக பிரித்துகொள்ள வேண்டும். இரு பாதிகளுக்கும் தனித் தனியே கூட்டுச் சராசரி கணக்கிடவேண்டும். அவைகளை $\bar{Y}_1$, $\bar{Y}_2$ என்போம் அப்பொழுது $(t_1, \bar{Y}_2)$, $(t_2, \bar{Y}_2)$ என்ற புள்ளிகளிடையே செல்லும் நேர்கோடு. கொடுக்கப்பட்ட விவரங்களுக்கு பொருத்தமான நேர்கோடாக கருதப்படும். காலத் தொடர் வரிசையின் விவரங்கள் ஒற்றைப்படை $(2m+1)$ யாக இருப்பின், நடுமையத்திலுள்ளதை நீக்கி இரு விரிவுகளாக்கு வோம். அதாவது,

$t_1, t_2, \ldots t_m, t_{m+1}, t_{m+2}$ $t_{2m+1}$ என்ற காலங்களுக்கு $y_1, y_2 \ldots y_m, y_{m+1}, y_{m+2} \cdots y_{2m+1}$ என்ற மதிப்புகள் இருப்பின், $y_{m+1}$ என்ற மதிப்பை விட்டுவிட்டு'

$$\bar{Y}_2 = \frac{1}{m}(y_2 + y_2 + \ldots + y_m), \bar{Y}_2 = \frac{1}{m}(y_{m+2} + y_{m+3} + \ldots + y_{2m+1})$$ என்று கணக்கிடவேண்டும்.

கொடுக்கப்பட்ட விவரங்கள் இரட்டை படையாக இருப்பின் சரிபாதியாக இருகூறுகள் பிரித்தல் எளிது. இந்த முறையில் நேர் கோடு பொருத்துவதாலுல், எவர் செய்தாலும் ஒரே விடைதான் வரும். எனவே, இது இயல்பாக கையினுல் வளைகோட்டை பொருத்துதலைவிட திருத்தமானதுதான்..எனினும், இந்த முறை நேர்கோடுக்கு மட்டுமே பயன்படுவதால், மற்ற வேளைகளில் இதனை கையாள முடியாது. மற்றும், சராசரிகளுக்கு பொதுவாக எந்தெந்த முறைபாடுகள் உண்டோ, அவையெல்லாம் இந்த முறையிலும் இடம்பெறும்.

எந்தெந்த விவரங்களுக்கு எந்தெந்த வளைகோடு சிறந்தது என்று முடிவுசெய்வது எளிதான காரியமல்ல. கொடுக்கப்பட்ட விவரங்களை, சாதாரண வரைத்தாளிலோ, அல்லது லாகரிதமிக் வரை தாளிலோ புள்ளிகளாக வரைந்து, அவைகளின் போக்கினை ஆராய்வது ஒருவழி; மற்றொருவழி, விவரங்களின் நேரிடை வித்தி யாசங்களை (முதல். நிலை, இரண்டாம் நிலை. என்றவாறு) ஆராய்தல். அல்லது, லாகரிதம்களை எடுத்த பிறகு வித்தியாசங் களை ஆராய்தல். மற்றுமொருவழி, மாறி மாற்றம் செய்வது இவைகளைப்பற்றியபல விவரங்கள் ஆங்காங்கே கூறப்பட்டுள்ளன. மிகுந்த பயிற்சிகளுக்கும் அனுபவங்களுக்கும் பிறகே, இவ்வித பிரச்சினைக்கு தீர்வு காணுதல் சாத்தியமாகும் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும், உதாரணமாக:- அமெரிக்கா

ஐக்கிய நாடுகளில் ஒரு நகரத்திலுள்ள மத்ருதுவமனைகளில்நிகழ்ந்த பிறப்புகளின் எண்ணிக்கை விவரங்கள் மணிவாரியாக- இரவு பன்னிரண்டுமணிமுதல் அடுத்தநாள் இரவுவரை- சேகரிக்கப் பட்டன. இவைகளின் போக்கை அளவிடும் பொழுது, மாறி மாற்றம் செய்தால் போக்கு ஒரேசீராக அமைகிறது என்று கண்டனர். அந்த மாற்றமானது கீழ்வருமாறு - ஒருமணியளவில் பிறந்த குழந்தைகளின் சராசரி எண்ணிக்கை x என்றால் $y = \sqrt{x}$ என்பதே மாறி மாற்றம். அப்பொழுது ஒரு நாளின் இவை வெளியில் நிகழும் சராசரி பிறப்புகளின் வரைபடம் கீழ்வருமாறு அமையும்.




படம்8: ஒரு நாளில் நிகழும் சராசரி பிறப்புகளின் வரைபடம் (அமெரிக்கா ஐக்கியநாடுகளில் ஒருநகர மருத்துவமனைகளில் நிகழ்ந்தவை)

## 5.10 ஆண்டு போக்கிலிருந்து மாதந்திர போக்கில் அளவிடுதல்

சாதரணமாக போக்கை அளவிடும் பொழுது ஆண்டுகளுக்கா விவரங்களை மட்டுமே பயன்படுத்திருப்போம். நடைமுறையில், ஆண்டுகளுக்கான மதிப்பீடுகளே அல்லாமல் மாதாந்திர மதிப்பீடுகளும் தேவைப்படலாம். உதாரணமாக, ஒரு நிறுவனத்தில் உற்பத்தியாகும் சரக்குகளின் அளவு ஆண்டுகளுக்கு மட்டும் கிடைத்தால் போதது; மாதந்திர அளவிலும் அவைகளின் மதிப்பீடுகள் தேவை. எனவே, வருடாந்திர அளவில் கணக்கிடப் பட்ட போக்கு வளைகோட்டிலிருந்து. ஒவ்வொரு மாதத்திற்குமான போக்கு மதிப்பீட்டை பெருதல் எப்படி என்று தெரியவேண்டும்,

சென்ற எடுத்துக் காட்டில் (எ.கா.3), நெடுங்கால போக்கை அளவிடும் நேர்கோடு

$Y_t = a_0 + a_1 t$ என்பது. அங்கு $Y_t$ என்பது ஓர் ஆண்டிற்கான மதிப்பீடானதால், அதனை 12- ஆல் வகுக்க நமக்கு மாதாந்திர மதிப்பீடு கிடைக்கும். அதாவது

$$Y_t = \frac{a_0}{12} + \frac{a_1}{12} t$$

இங்குt- என்பது இன்னமும் வருடத்தை குறிப்பிடுமாதாலல் அதனையும் $t_2$-ஆல் வகுத்தல் அவசியம். எனவே மாதாந்திர போக்கை அளவிடும் போக்கு

$$Y_t = \frac{a_0}{12} + \frac{a_1 t}{144}$$

இங்கு t- ஒரு மாதத்தைக் குறிப்பிடும்.

எடுத்துக் காட்டாக, அதே உதாரணத்தில் 1961-ம் ஆண்டில் ஒரு மாதத்தின் சராசரி போக்கு [1961-ம் ஆண்டிற்கு t-ன் மதிப்பு(-3)]

$$Y_t = \frac{90}{12} + \frac{(2)\ (-3)}{144} = 7.5 - .0\ 5\ 3 = 7.447$$

என்றுவரும். மாதத்தின் சராசரி போக்கை அளவிடும் சமன்பாடு

$$Y_t = 7.5 + \frac{1}{72} t$$

பொருத்தப்பட்டது வளைகோடாக இருப்பின், அதற்கு தகுந்தார் போல் t-ஐ மாற்ற வேண்டும். $Y\ a_0 + a_1 + a_2 t^2$ என்பது வருடபோக்கானல், மாதாந்திர அளவில் ,போக்கானது

$$Y = \frac{a_0}{2} + a_0 \left(\frac{t}{12}\right) + \frac{a_1}{12} \left(\frac{t}{12}\right)^2$$ என்று அமையும்

**8.11 அளவிட்ட நெடுங்கால போக்கிலிருந்து வேறொரு ஆண்டிற்கு மைய ஆண்டை மாற்றுதல்.**

எடுத்துக்காட்டு -3-ல் மையத்தை 1964-ம் ஆண்டாக கருதியுள்ளோம். இந்த மையத்தை 1962-ம் ஆண்டாக மாற்றுவது தெப்படி? $Y_t$=90 + 2t என்பது மையத்தை 1964-ம் ஆண்டாகக் கொண்டது. 1962-ம், 1964- ஆண்டை விட இருஆண்டுகள் குறைவு. எனவே 1962-ம் ஆண்டின் மதிப்பீடு = 90 + 2(-2) 86 எனவே புது சமன்பாட்டில் $a_0$-ன் மதிப்பு 86ஆக இருக்க வேண்டும்.

Yt = 86 + 2t என்பதுதான் 1962-ம் ஆண்டை மையமாகக்கொண்ட சமன் பாடு. ஆண்டுகளை அளவிடும்போது, 1962-ம்

ஆண்டிலிருந்து தான் அளவிடவேண்டும். அதாவது 1966-ம் ஆண்டின் மதிப்பீடை கணக்கிட புது சமன்பாட்டை உபயோக படுத்தினால் t = 4 என்றாகிறது. எனவே 1966-ம் ஆண்டின் மதிப்பீடு

$$86 + 8 = 94$$

5.15 பருவகால மாறுபாடுகளை அளவிடும் முறைகள்:-

பருவகால மாறுபாடுகள், ஆண்டில் சில குறிப்பிட்ட மாதங்களில் ஏற்படும் அதிகபட்ச உற்பத்தி, விற்பனை, அல்லது குறைந்த பட்ச உற்பத்தி, விற்பனைபோன்றவைகளை எடுத்தியம்புவது ஆகும். பொருளாதார வர்த்தகத்துறையில் இத்தகைய பருவகால மாறு பாடுகளை (seasonal variations) அதிகமாகக் காணலாம். இவைகள் மாதாந்திர, காலாண்டு கணக்கில் இருக்கும். ஒவ்வொரு வருடமும் மார்ச் மாதம் 31-ம் தேதியுடன் அரசாங்க அலுவலங்களில் அந்த ஆண்டிற்கான பொருளாதாரக் கணக்கு முடிந்து விடுகிறது. ஆகையால் அரசாங்க அலுவலங்களில். மார்ச் மாதத்தில் அதிகமாக செலவு இருப்பதைப் பார்க்கலாம்,

கோடை காலங்களில் குளிர் பதனப்பெட்டி (Refrigerators) மின்விசிறிகள், காற்றை குளிரச்செய்யும் கருவிகள் (Air-coolers) செருப்புகள், ஐஸ்க்ரீம், மற்றும் குளிர்பானங்கள் முதலியவைகளுக்கு அதிக கிராக்கி இருக்கிறது. மழைக்காலங்களிலும் குளிர்காலங்களிலுமே குடை, மழைக்கோட்டு, கம்பளி, சால்வைகள் குல்லாக்கள், ஸ்வெட்டர்கள் முதலியவைகளின் தேவை அதிகம். டிஸம்பர், ஜனவரி மாதங்களில் துணிகளின் விற்பனை அதிகமாக இருக்கும். கிருஸ்துமஸ், பொங்கல் போன்ற பண்டிகைகள் வருவதால் அவைகளை முன்னிட்டு புத்தாடைகள் வாங்குவோரின் எண்ணிக்கை மிகவும் அதிகமாக இருக்கும். விலையுயர்ந்த துணிகள் கூட இக்காலங்களில் விற்றுப் போகும். இத்தகை பண்டிகை காலங்களில் கடைகளில் இனிப்பு பலகாரங்களின் விற்பனையும் எண்ணை, வெண்ணை, சர்க்கரை போன்ற பொருள்களின் விற்பனையும் அதிகமாக இருக்கும். சாதாரணமாக ஜுன், ஜுலை மாதங்களில் பள்ளிக்கூடங்கள் கோடை விடுமுறைக்குப் பிறகு திறப்பதால், இம்மாதங்களில் பாடபுத்தகங்கள், நோட் புத்தகங்கள், பேனா, பென்ஸில், ரப்பர் போன்ற பொருள்களின் விற்பனை மிகஅதிகமாக இருக்கும். ஆனால் ஆண்டின் மற்ற மாதங்களில் இவற்றின் விற்பனை வெகுவாகக் குறைந்துவிடும் ஆக ஒவ்வொரு ஆண்டும் ஒரு குறிப்பிட்ட பருவத்தில்தான் பொருட்களின் விற்பனை அதிகமாக இருக்கும். அடுத்த ஆண்டும்.

இதே பருவத்தில்தான் விற்பனை அதிகமாக இருக்கும். மற்ற சமயங்களில் குறைந்துவிடும். இத்தகைய மாறுபாடுகளையே பருவகால மாறுபாடுகள் என்கிறோம்.

இத்தகைய பருவகால மாறுபாடுகளை எப்படி அளப்பது என்பதை இங்கு காணப் போகிறோம். இவைகளை அளவிடுவதற்கு முன்பு இவைகள் வாராந்திர, மாதாந்திர, காலாண்டு கால அளவு களில் ஏற்படுகின்றதா என நன்கறிதல் அவசியம்' அவைகளுக் கேற்ப வாராந்திர, மாதாந்திர, காலாண்டு குறியீட்டெண்களை (Seasonal indices) கணக்கிடவேண்டும். இதைக்கண்டறிய எத் தகைய காலத்தொடர்வரிசை கொடுக்கப்பட்டுள்ளன என்பதை யும் நன்கு ஆராயவேண்டும். பருவகால மாறுபாடுகளை அளவிட வேண்டிய தொடரில், மற்றைய நெடுங்காலப் போக்கு, சுழல் ஊசலாட்டங்கள், முறையற்ற போக்குகள் ஆகிய அனைத்தும் நீக்கப்பட்டிருக்க வேண்டும். இவ்வாறு வேறுபாடுகள் நீங்கியபின் உள்ள தொடரில் கணக்கிடப்படும் அளவிற்கு பருவகால குறியீட் டெண்கள் என்று பெயர். இவைகள் சதவிகிதத்தில் இருக்கும்.

கொடுக்கப்பட்ட தொடர் மாதாந்திர விவரங்களைக் கொண்டிருப்பின் மாதாந்திர குறியீட்டெண்கள் அளவிடப்படும். இவைகள் மொத்தம் பன்னிரண்டு இருக்கும். எவ்வொரு மாதத் திற்கும் ஒரு குறியீட்டெண் வீதம் இருக்கும். நல்லதொரு பருவ கால மாறுபாட்டு அளவு என்பது பருவகால மாறுபாடுகளை மட்டுமே அயத்தறியக் கூடியதாக இருக்கவேண்டும். காலத் தொடர் வரிசையில் உள்ள. நெடுங்காலப் போக்கு, சுழல் ஊசலாட்டங்கள் போன்றவை பருவகாலமாறுபாட்டு அளவையை எந்த விகிதத்திலும் பாதிக்கக்கூடாது. இந்த அளவையானது நல்லதொரு சராசரிக் கொண்டு அளவிடப்படவேண்டும். அப்போதுதான் காலத்தொடரிலுள்ள ஒரு சில புறக்கோடி எண்களால் (Extreme value) பாதிக்கப்படாமல் இருக்கும். பருவ கால மாறுபாடுகளை சரியான முறையில் எடுத்துக் காட்டவல்ல அளவீடுகளே புறந்த அளவீடுகள்.

பருவகால மாறுமாடுகளை—பருவகால குறியீட்டெண்களை அளவிட பலவித முறைகள் கையாளப்படுகின்றன. அவையாவன : 1) சாதரண சராசரி முறை, (2) நெடுங்கால போக்கு விகிதங்கள் 3) நகரும் சராசரி விகிதங்கள்முறை, 4) தொடர் உறவு (Link-relatives) முறைகள். முதலில் சாதாரண சராசரி முறையில் எவ்வாறு பருவகால மாறுபாடுகளை ஆராய்வது என ஆராய்வோம்.

### 5.12.1 சாதாரண சராசரி முறை (Method of simple average)

கொடுக்கப்பட்ட தொடரிலுள்ள புள்ளி விவரங்களை கால அளவுகளுக்கேற்படி )வாராந்திர, மாதாந்திர, காலாண்டு கால அளவுகளில்) ஒழுங்குபடுத்தி அமைத்துக் கொள்ள வேண்டும். எத்தனை ஆண்டுகளுக்குகான முழு விவரங்கள் உள்ளனவோ அவைகளை முறையாக எழுதிக்கொண்டு மொத்த விவரங்களில் ஒரு பருவத்திற்கு பொதுவான சராசரியைக் கணக்கிட வேண்டும். பல ஆண்டுகளில் உள்ள பல்வேறு பருவங்களுக்கும் தனித்தனியே சராசரி கணக்கிட வேண்டும்.

பின்பு $\frac{\text{தனித்தனி சராசரி}}{\text{மொத்த சராசரி}} \times 110$ என்பதே சாதாரண சராசரி இதையே பருவகால குறியீட்டெண் என்கிறோம். இதை கீழ்க் கண்ட உதாரணத்தின் மூலம் நன்கு விளக்கலாம்.

எடுத்துக்காட்டு 9:

| | ஆண்டுகள் | | | |
|---|---|---|---|---|
| காலாண்டுகள் | 1964 | 1965 | 1966 | 1967 |
| $Q_1$ | 75 | 86 | 90 | 100 |
| $Q_2$ | 60 | 65 | 72 | 78 |
| $Q_3$ | 54 | 63 | 66 | 72 |
| $Q_4$ | 59 | 80 | 85 | 93 |

1) காலாண்டு மொத்தங்கள்; $o\Sigma Q = 75 + 86 + 90 + +110 = 351$

$$\Sigma Q_2 = 60+65+72+72 = 275$$

$$\Sigma Q_3 = 54+63+66+72 = 316$$

$$\Sigma Q_4 = 59+85+93 = 80 = 317$$

2) காலாண்டு சராசரிகள் பருவகால தனித்தனி சராசரிகள்

$$\frac{\Sigma Q_1}{4} = 87.75$$

$$\frac{\Sigma Q_2}{4} = \frac{275}{4} = 68.75; \frac{\Sigma Q_3}{4} = \frac{255}{4} = 63.75;$$

$$\frac{\Sigma Q_4}{4} = \frac{317}{4} = 79.25$$

பொதுவான சராசரி $= 87.75 + 68.75 + 63.75 + 79.25$
$= \frac{99\ 50}{4} = 74.87$

எனவே

$Q_1$—க்கான பருவகால குறியீடு $= \frac{87.75}{74.875} \times 100 = 117.2$

$Q_2$ ,, ,, ,, $= \frac{68.75}{74.875} \times 100 = 91.8$

$Q_3$ ,, ,, ,, $= \frac{63.75}{74.875} \times 100 = 85.2$

$Q_4$ ,, ,, ,, $= \frac{79 \cdot 25}{74.875} \times 100 = 105.8$

இவை நான்கின் மொத்தம் = 400.0 என்பது குறிப்பிடத்தக்கது. அடுத்து எடுத்துக்காட்டில், மாதாத்திர பருவகால குறியீடுகளின் கணக்குகள் உள்ளன.

எடுத்துக்காட்டு 10: கொடுககப்பட்ட விவரங்களுக்கு மாதாத்திர பருவகால குறியீடுகளைக்கணக்கிடு. (பிஏ. (ஆனர்ஸ்) 1967.

மாதங்கள்

| ஆண்டுகள் | ஜனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே | ஜுன் | ஜுலை | ஆகஸ்ட் | செப்டம்பர் | ஆக்டோபர் | நவமபர் | டிசம்பர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1961 | 348 | 281 | 278 | 250 | 231 | 216 | 223 | 245 | 269 | 302 | 325 | 347 |
| 1962 | 342 | 309 | 299 | 268 | 249 | 236 | 243 | 262 | 288 | 321 | 342 | 364 |
| 1963 | 367 | 328 | 320 | 217 | 269 | 251 | 259 | 284 | 309 | 245 | 367 | 394 |
| 1964 | 392 | 349 | 342 | 311 | 290 | 273 | 282 | 305 | 328 | 364 | 379 | 417 |
| 1965 | 420 | 378 | 370 | 334 | 314 | 296 | 305 | 330 | 356 | 396 | 422 | 452 |

அடுத்த அட்டவணையில் கணக்கு விவரங்கள் உள்ளன

| மாதம் (1) | ஐந்தாண்டுகள் மொத்தங்கள் (2) | சராசரி (3) | குறியீடுகள் (4) = $\frac{(3)}{316.7} \times 100$ |
|---|---|---|---|
| ஜனவரி | 1839 | 367.8 | 116.1 |
| பெப்ரவரி | 1645 | 329 0 | 103.9 |
| மார்ச் | 1609 | 321.8 | 101.6 |
| ஏப்ரல் | 1450 | 2900 . | 91.4 |
| மே | 1353 | 270.9 | 85.1 |
| ஜன்ு | 1272 | 254.4 | 80.3 |
| ஜுலை | 1311 | 262 2 | 82.8 |
| ஆகஸ்ட் | 1426 | 285.2 | 90.0 |
| செப்டம்பர் | 1550 | 310.0 | 98.0 |
| அக்டோபர் | 1728 | 345 6 | 109.1 |
| நவம்பர் | 1845 | 369.0 | 116.6 |
| டிசம்பர் | 1974 | 394.8 | 124.7 |
| மொத்தம் | 19,002 | 3800.4 | 1200.0 |
| சராசரி | 1583.5 | 816.7 | 100.0 |

நவம்பர், டிஸம்பர், ஜனவரி மாதகுறியீடுகள் அதிகமாகவும், ஜுன்—ஜுலை மாதகுறியீடுகள் மிகக் குறைவாகவும் உள்ளன.

$$\frac{3800\ 4}{12} = \frac{1583.5}{5} = 316.7$$ என்பதையும் கவனிக்க

சாதரண சராசரி மிகவும் சுலபமான ஒன்றாகும். நெடுங்காலப் போக்கு அறவே நீக்கப்பட்ட காலத்தொடர் வரிசைக்தான் இம் முறை நல்ல பலனைத் தரும். அப்படி நெடுங்காலப் போக்கு முழுமையாக நீக்கபடாத தொடரில் இம்முறையைக் கையாண் டால், சாதாரண சராசரியானது, பருவகால மாறுபாடுகள் மட்டுமன்றி நெடுங்காலப் போக்கையும் பருவகால மாறுபாடுக

ளாகவே காட்டிவிடக்கூடும். இது பிழையானதாகும். சுலபமான முறை என்பதைத் தவிர இம்முறையில் வேறு ஒரு விசேஷமும் இல்லை. நெடுங்காலப் போக்கு, சுழல் ஊசலாட்டங்கள் இல்லாத காலத்தொடர் வரிசைக்கு இம்முறையின் உதவியால் பருவகால மாறுபாடுகளைக் கணக்கிடலாம்,

5.12.2 நெடுங்காலப் போக்கு - விகிதமுறை:- (Ratio -to -trend - method).

காலத்தொடர் வரிசையிலுள்ள நெடுங்காலப் போக்கில் (trend) ஒரு குறிப்பட்ட விகிதத்தில் பருவகால மாறுபாடுகள் உள்ளதாக, இம்முறையில் அனுமானிக்கப்படுகிறது. இவ்விகிதத்தை சரியான முறையில் அளவெடுத்தால் பருவகால மாறுபாடுகள் கிடைக்கும். சரியான சுழல் ,அளவுகளைக் கொண்டு சுழல் ஊசலாட்டங்களை நீக்கினுல் வரும் தொடரில் முறையற்ற மாறுபாடுகளும் ஓரளவு நீங்கியிருக்கும், இச்சரியான சுழல் அளவுகளை கவனமாக பரிசீலித்து நெடுங்காலப் போக்கை கணக்கிட வேண்டும், பொது வாக கணித வளைகோட்டுச் சமன்பாடுகளுள் எதாவதொன்றை ஒட்டி நெடுங்காலப் போக்கு அமைந்துள்ளதாக தீர்மானிக்கப் பட்டு ஒவ்வொரு மாதத்திற்கும் நெடுக்காலப் போக்கின் அளவு மதிப்பிடப்படுகிறது. கொடுக்கப்பட்ட மாத விவரங்களை மாதந்திர நெடுங்காலப் போக்கால் வகுத்து வரும் அளவை 100-ஆல் பெருக்க பருவகால குறியீட்டெண்கள் கிடைக்கும். இவைகளிலிருந்து சுழல் ஊசலாட்டங்கள் மற்றும் முறையற்ற மாறுபாடுகளை நீக்க இடைநிலை (median) அல்லது சராசரி கணக்கிடப் படுகிறது. மிகப் பெரிய அல்லது மிகச்சிறிய எண்களால், சராசரியின் வேறுபாடு அதிகமாவதால், அத்தகைய எண்களை ஒதுக்கிவிட்டு சராசரி கணக்கிடப்படும். இதுவே திருத்தப் பட்ட சராசரி என்று கூறப்படுகிறது. பொதுவாக இடைநிலையை உபயோகிப்பதே மிகவும் சிறந்தது. பன்னிரண்டு மாதங்களுக்கும் மொத்த குறியீட்டெண்கள் 1200 இருக்கவேண்டும். அளவிடப் பருவகால குறியீட்டெண்களின் கூட்டுத்தொகை 1200 எனவரா விட்டால் ஒவ்வொரு மாதத்தையும் பெருக்க வேண்டும்.

$$\frac{1200}{12 \text{ மாத மொத்த குறியீட்டெண்கள்}} \times 100$$

இம்முறையை கீழ்க்கண்ட உதாரணம் மூலம் நன்கு விளக்க லாம். சாதாரண சராசரி முறையைக் காட்டிலும் இம்முறை சிறந்தது. நகரும் சராசரி விகிதங்களில் முதலிலும் கடைசியிலும்

சில எண்கள் விடுப்பட்டுப் போகும்- இம்முறையில் எல்லா எண்களும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இதை சுலபமாக அளவிட முடியும். நகரும் சராசரிகளில் சுழல் ஊசலாட்டங்கள் பெரும் அளவு குறைக்கப்படுகின்றன. கணிதவளைகோட்டு முறைகளில் அந்த அளவிற்கு சுழல் ஊசலாட்டங்கள் குறைவதில்லை. நகரும் சராசரி விகிதங்களில் சில எண்கள் விட்டுபோனாலும் நல்லதொரு பிழையற்ற பருவகால குறியீட்டெண்கள் கிடைக்கும். இவைகளைக் கணிக்கும் முறையைக் கீழ்க்கண்ட உதாரணத்தின் மூலம் நன்கு விளக்கலாம்.

எடுத்துக்காட்டு 11; கீழ்கண்ட விவரங்களுக்கு பருவகால குறியீடுகள் கணக்கிடுக;

| ஆண்டுகள் | காலாண்டு பகுதிகள் | | | |
|---|---|---|---|---|
| | $Q_1$ | $Q_2$ | $Q_3$ | $Q_4$ |
| 1964 | 75 | 60 | 54 | 59 |
| 1965 | 86 | 65 | 63 | 80 |
| 1966 | 90 | 72 | 66 | 85 |
| 1967 | 100 | 78 | 72 | 93 |

(எம். காம்)

முதலில் ஆண்டுகளுக்கான மொத்தங்களை கணக்கிட்டு அவைகளுக்கு ஒரு நேர்கோட்டுப் போக்கை கணக்கிடுவோம்.

| ஆண்டு | மொத்தம் | Y காலாண்டு பகுதி சராசரி | X | $X^2$ | XY | போக்கு மதிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1964 | 248 | 62.0 | —3 | 9 | —186.0 | 63.475 |
| 1965 | 294 | 73.5 | —1 | 1 | — 73.5 | 71.075 |
| 1966 | 313 | 78.25 | 1 | 1 | + 78 25 | 78.675 |
| 1967 | 343 | 85.75 | 3 | 9 | + 257.25 | 86.275 |
| மொத்தம் | 1198 | 299.50 | 0 | 20 | +76 | — |

நெடுங்கால போக்கு: $Y = a + bx$

இயல்பான சமன்பாடுகள் $\Sigma Y = a.4 + b.\Sigma x$

$\Sigma XY = a.\Sigma x + 6.\Sigma x^2$

$$299.50 = 4a\ ; \qquad 76 = 20b$$

$$a = 74.875\ ; \qquad b = 3.8$$

போக்கு: $Y = 74.875 + 3.8x$

இந்த சமன்பாட்டிலிருந்து போக்கு மதிப்புகளை அளவிட்டால், நமக்கு முறையே 63 475 ; 71.075 ; 78.675 ; 86.275.

ஆண்டொன்றுக்கு அதிகரிப்பு 3.8. எனவே ஒரு காலாண்டு பகுதிக்கு, அதிகரிப்பு $\frac{3.8}{4} = 0.95$.

இப்பொழுது 1964-ம் ஆண்டின் காலாண்டுப் பகுதிகளுக்கான போக்கு மதிப்புகளைக் கணக்கிடுவோம். ஆண்டின் நடுப்பகுதிக்கு போக்கு 63.475 —அதாவது, இரண்டாம் காலாண்டு பகுதியின் பின்பாதிக்கும் மூன்றும் காலாண்டு பகுதியின் முன்பாதிக்கும் பொருத்தமானது. ஒரு காலாண்டு பகுதியின் அதிகரிப்பு 0.95 ஆனதால், அதில் பாதி பகுதிக்கு .475 அதிகரிக்கிறது. எனவே, இரண்டாம் காலாண்டு பகுதியின் போக்கு = 63.475 — 475 = 63 0; மூன்றும் காலாண்டு பகுதியின் போக்கு = 63.475 + .475 = 63.95 முதல் காலாண்டின் போக்கு 63.0 — .95 = 62 05; நான்காவது காலாண்டு பகுதியின் போக்கு = 63.95 + .95 = 64.90. அதாவது, 1964-ம் ஆண்டின் நான்கு பகுதிகளின் போக்கு அளவைகள்:

62.05, 63.0, 63.95, 64.90 என்பவை.

இதுபோலவே, மற்ற மூன்றுண்டுகளுக்கும் கணக்கிட அடுத்த பட்டியலிலுள்ள விவரங்கள் கிடைக்கும்.

காலாண்டு பகுதிகளின் போக்கு அளவைகள்

| ஆண்டு | காலாண்டு பகுதிகள் | | | |
|---|---|---|---|---|
| | $Q_1$ | $Q_2$ | $Q_3$ | $Q_4$ |
| 1964 | 62.05 | 63 00 | 63.95 | 64.90 |
| 1965 | 69 65 | 70 60 | 71.55 | 72.50 |
| 1966 | 77.25 | 78.20 | 79.15 | 80 10 |
| 1967 | 84 85 | 85 80 | 86.75 | 87.70 |

அடுத்து கொடுக்கப்பட்ட காலாண்டு பகுதி மதிப்புகளை இந்தப் போக்கு மதிப்புகளின் சதவீதங்களாகக் கணக்கிடவேண்டும். 1964-ம் ஆண்டின் முதல் பகுதிக்கு $= \frac{75}{62.05} \times 100 = 120.9$. இதுபோலவே மற்றவைகளுக்கும் கணக்கிடுவோம்.

காலாண்டு பகுதிகளின் போக்கு சதவீதங்கள்

| ஆண்டு | $Q_1$ | $Q_2$ | $Q_3$ | $Q_4$ | |
|---|---|---|---|---|---|
| 1964 | 120 9 | 95.26 | 84.45 | 92.64 | |
| 1965 | 123.5 | 92.06 | 88.04 | 110 6 | |
| 1966 | 116.5 | 92 06 | 83,37 | 106.1 | |
| 1967 | 117 9 | 90.90 | 82.99 | 106.0 | |
| மொத்தம் | 478.8 | 370.28 | 338.85 | 415.34 | |
| சராசரி | 119.7 | 92.57 | 84.7125 | 103.845 | 400.8275 |
| திருத்தப்பட்ட பருவ கால குறியீடு | 11.95 | 92.4 | 84.5 | 103.6 | |

சராசரிகளின் மொத்தம் 400 ஆக இல்லாமல் 400.8275 ஆக இருப்பதால், ஒவ்வொரு சராசரியையும் $\frac{400}{400.8275}$ என்ற காரணியால் பெருக்கினால் பருவகால குறியீடுகள் கிடைக்கும். இவைகளைக் கடைசி பத்தியில் காணலாம். இறுதியான பருவ கால குறியீடுகள் முறையே: 119.5, 92.4, 84.5, 103.6 என்பவை.

5.12.3 நகரும் சராசரி முறையில் பருவகால குறியீடுகளைக் கணக்கிடுதல்

நெடுங்கால விகித பருவகால குறியீடுகளைப் போலவே நகரும் சராசரி விகித பருவகால மாறுபாடுகளையும் கணிக்கலாம்.

சாதாரணமாக பருவகால மாறுபாடுகள் ஆண்டிற்கு ஒரு முறைதான் ஏற்படும். எனவே, பன்னிரண்டு மாத நகரும் சராசரிகளைக் கணக்கிடவேண்டும். கொடுக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்களிலிருந்து இவைகளை எப்படிக் கணக்கிடுவது என்பது பற்றி முன்பே கூறியுள்ளோம். இம்மாதிரியே காலாண்டு பருவ கால சுழல்களை 4 காலாண்டு நகரும் சராசரிகளைக் கொண்டு அமைக்கவேண்டும். கொடுக்கப்பட்ட உண்மையான எண்களை அதற்கு நேராக உள்ள நகரும் சராசரிகளால் வகுத்துவரும் ஈவை 100-ஆல் பெருக்கினால் நகரும் சராசரி பருவகால சதவிகிதங்கள் கிடைக்கும். மறுபடியும் இத்தகைய மாதாந்திர சதவிகிதங்களை அட்டவணைப்படுத்தி கொடுக்கப்பட்ட ஆண்டுகள் அனைத்திற்கும் ஜனவரி முதல் எல்லா பன்னிரண்டு மாதங்களுக்கும் பொதுவான சராசரி குறியீட்டெண்களைக் கணக்கிட வேண்டும். இவ்வாறு கணக்கிடப்பட்ட 12 மாத மொத்த குறியீடுகளின் மொத்தம் 1200 வரவேண்டும். மொத்தம் 1200 வரவில்லையென்றால் முன்பு உபயோகித்ததுபோல ஒவ்வொரு மாத மதிப்பையும் $\left(\frac{1200}{12 \text{ மாத மொத்தம்}}\right)$ என்ற காரணியால் பெருக்கினால் சரியான பருவகால குறியீட்டெண்கள் கிடைக்கும். இவைகளைக் கணிக்கும் முறையைக் கீழ்க்கண்ட உதாரணத்தின்மூலம் நன்கு விளக்கலாம். அடுத்த பட்டியலில் செய்முறைகளைப் பற்றிய விளக்கம் கணித வாயிலாகத் தரப்பட்டுள்ளது.

அட்டவணை 81

நகரும் சராசரி விகிதமுறையில் பருவகாலக் குறியீடுகளைக் கணக்கிடல்

| | ஆண்டுகள் | உற்பத்தி | 12 மாத மொத்தங்கள் | 12 மாத நகரும் சராசரி | மையப்படுத்தப் பட்ட நகரும் சராசரிகள் | நகரும் சராசரி விகித குறியீடுகள் |
|---|---|---|---|---|---|---|
| $K_1$ | ஜனவரி | $x_1$ | | | | |
| | பிப்ரவரி | $x_2$ | | | | |
| | மார்ச் | $x_3$ | | | | |
| | ஏப்ரல் | $x_4$ | | | | |
| | மே | $x_5$ | | | | |
| | ஜூன் | $x_6$ | | | | |
| | | ——→ | $x_1 + . + x_{12} = T_1$ | —— $T_1 \div 12 = A_1$ | | |
| | ஜூலை | $x_7$ | ———— | ————→ | $(A_1 + A_2) \div 2 = C_1$ | $(x_7 \div C_1) \times 100 = S_1$ |
| | | ——→ | $x_2 + \ldots K_1^1 - T_2$ | $T_2 \div 12\ A_2$ | | |
| | ஆகஸ்டு | $x_8$ | ———— | ————→ | $(A_2 + A_3) \div 2 = C_3$ | $(x^8 \div C_2) \times 100\ S_2$ |
| | | ——→ | $x_3 + .. + x_2^1\ T_3$ | $T_3 \div 12\ A_3$ | | |
| | செப்டம்பர் | $x_9$ | ———— | ————→ | $(A_3 + A_4) \div 2\ C_2$ | $(x_9 \div C_8) \times 100 = S_8$ |
| | | ——→ | $x_4 + \ldots + x_3^1 = T_4$ | $T_4 \div 12 = A_4$ | | |
| | அக்டோபர் | $x_{10}$ | ,, | ,, | | |
| | நவம்பர் | $x_{11}$ | ,, | ,, | | |
| | டிசம்பர் | $x_{12}$ | ,, | ,, | | |
| $K_2$ | ஜனவரி | $x'_1$ | ,, | ,, | | |
| | பிப்ரவரி | $x'_2$ | ,, | ,, | | |

$C_{24})100 = S_{24}$

$X'_3$ ,, ,,
$X'_4$ ,, ,,
$X'_5$ ,, ,,
$X'_6$ ,, ,,
$X'_7$ ,, ,,
$X'_8$ ,, ,,
$X'_9$ ,, ,,
$X'_{10}$ ,, ,,
$X'_{11}$ ,, ,,
$X'_{12}$ ,, ,,

$X''_1$ ,, ,,
$X''_2$ ,, ,,
$X''_3$ ,, ,,
$X''_4$ ,, ,,
$X''_5$ ,, ,,
$X''_6$ ——————— $\rightarrow (A_{24}+A_{25}) \div 2 = C_{24}(X''_6 \div$
$\longrightarrow X''_1 + \ldots \times X''_{12} = T_{25}$ $T_{25} \div 12 = A_{25}$
$X''_7$ ,, ,,
$X''_8$ ,, ,,
$X''_9$ ,,
$X''_{10}$
$X''_{11}$
$X''_{12}$

மார்ச்
ஏப்ரல்
மே
ஜூன்
ஜூலை
ஆகஸ்ட்
செப்டம்பர்
அக்டோபர்
நவம்பர்
டிசம்பர்

$K_3$ ஜனவரி
பிப்ரவரி
மார்ச்
ஏப்ரல்
மே
ஜூன்
ஜூலை
ஆகஸ்ட்
செப்டம்பர்
அக்டோபர்
நவம்பர்
டிசம்பர்

திருத்தப்பட்ட நகரும் சராசரி - விகித பருவகால குறியீடுகள்

| ஆண்டுகள் | மாதங்கள் | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஜன | பிப் | மார் | ஏப் | மே | ஜூன் | ஜூலை | ஆக | செப் | அக் | நவ | டிச |
| $K_1$ | — | — | — | — | — | — | $S_1$ | $S_2$ | $S_3$ | $S_4$ | $S_5$ | $S_6$ |
| $K_2$ | $S_7$ | $S_8$ | $S_9$ | $S_{10}$ | $S_{11}$ | $S_{12}$ | $S_{13}$ | $S_{14}$ | $S_{15}$ | $S_{16}$ | $S_{17}$ | $S_{18}$ |
| $K_3$ | $S_{19}$ | $S_{20}$ | $S_{21}$ | $S_{22}$ | $S_{23}$ | $S_{24}$ | — | — | — | — | — | — |
| சராசரிகள் | $A_1 = \frac{Sy+Sw}{200}$ | $A_2$ | $A_3$ | $A_4$ | $A_5$ | $A_6$ | $A_7$ | $A_8$ | $A_9$ | $A_{10}$ | $A_{11}$ | $A_{12}$ |
| திருத்தப்பட்ட சராசரிகள் | $A^1_1$ | $A^1_2$ | $A^1_3$ | $A^1_4$ | $A^1_5$ | $A^1_6$ | $A^1_7$ | $A^1_8$ | $A^1_9$ | $A^1_{10}$ | $A^1_{11}$ | $A^1_{12}$ |

இதில் $A_1^1 = \frac{1200}{(A_1+A_2...+A_{12})} \times A_1$ ; ∴ ——... ;

$$A^1_{12} = \frac{1200}{(A_1+...+A_{12})} \times A_{12}$$

எனவே $A^1_2 + A^1_2 + ... + A^1_{12} = 1200$ என்று வரும்.

அடுத்த எடுத்துக்காட்டில் ஒரு கணக்கு போடப்பட்டுள்ளது.

எடுத்துக்காட்டுகள் 12

1949—1953 ஆண்டுகளில் மாதந்தோறும் சென்னை மருத்துவ மனைகளில் நிகழ்ந்த பிறப்பு விவரங்களை கீழ்க்கண்ட பட்டியலில் காணலாம். அவைகளுக்கு 12 மாத நகரும் சராசரிகள் கணக்கிட்டு, சராசரி-விகித பருவகால குறியீடுகளைக் கணக்கிடு.

| மாதங்கள் | ஆண்டுகள் | | | | |
|---|---|---|---|---|---|
| | 1949 | 1950 | 1951 | 1952 | 1953 |
| ஜனவரி | 997 | 890 | 1219 | 1321 | 2100 |
| பெப்ரவரி | 835 | 1024 | 1123 | 1204 | 1607 |
| மார்ச் | 950 | 1169 | 1297 | 1385 | 1846 |
| ஏப்ரல் | 1049 | 1190 | 1387 | 1465 | 1838 |
| மே | 1100 | 1301 | 1576 | 1673 | 2040 |
| ஜூன் | 1074 | 1256 | 1566 | 1628 | 2003 |
| ஜூலை | 1242 | 1407 | 1638 | 1733 | 2241 |
| ஆகஸ்ட் | 1335 | 1404 | 1787 | 1884 | 2318 |
| செப்டம்பர் | 1357 | 1466 | 1876 | 1960 | 2244 |
| அக்டோபர் | 1436 | 1466 | 1842 | 2010 | 2476 |
| நவம்பர் | 1341 | 1382 | 1668 | 1915 | 2362 |
| டிசம்பர் | 1258 | 1388 | 1568 | 1787 | 2429 |

| 1<br>ஆண்டும் மாதமும் | 2<br>பிறப்புகள் | 3<br>12-மாத மொத்தங்கள் | 4<br>இரு-12-மாத மொத்தங்கள் | 5<br>மாதசராசரி (4)/24 போக்கு மதிப்பு | 6<br>விகிதம் $= \frac{(2)}{(5)} \times 100$ |
|---|---|---|---|---|---|
| 1949—ஜனவரி | 997 | | | | |
| பிப்ரவரி | 835 | | | | |
| மார்ச் | 950 | | | | |
| ஏப்ரல் | 1049 | | | | |
| மே | 1100 | | | | |
| ஜூன் | 1074 | 13974 | | | |
| ஜூலை | 1242 | 13867 | 27841 | 1160 | 107.0 |
| ஆகஸ்ட் | 1335 | 14056 | 27923 | 1163 | 114.8 |
| செப்டம்பர் | 1357 | 14275 | 28331 | 1180 | 115.0 |
| அக்டோபர் | 1436 | 14416 | 28691 | 1196 | 120.0 |
| நவம்பர் | 1341 | 14617 | 29033 | 1210 | 110.9 |
| டிஸம்பர் | 1258 | 14799 | 29416 | 1226 | 102.6 |
| —ஜனவரி | 890 | 14964 | 29763 | 1240 | 103.1 |
| பிப்ரவரி | 1024 | 15033 | 29967 | 1250 | 71.8 |
| மார்ச் | 1169 | 15142 | 30175 | 1257 | 81.9 |
| ஏப்ரல் | 1190 | 15172 | 30314 | 1263 | 93.0 |
| மே | 1301 | 15223 | 30395 | 1267 | 102.6 |
| ஜூன் | 1256 | 15343 | 30566 | 1274 | 98.6 |
| ஜூலை | 1407 | 15672 | 31015 | 1293 | 108.9 |
| ஆகஸ்ட் | 1404 | 15771 | 31443 | 1310 | 108.7 |
| செப்டம்பர் | 1466 | 15899 | 31670 | 1320 | 107.0 |
| அக்டோபர் | 1466 | 16096 | 31995 | 1333 | 111.0 |
| நவம்பர் | 1382 | 16371 | 2467 | 1353 | 110.1 |
| டிசம்பர் | 1388 | 16681 | 33025 | 1377 | 102.1 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| 1951—ஜனவரி | 1219 | 16912 | 33593 | 1400 | 100.8 |
| பெப்ரவரி | 1123 | 17295 | 34207 | 1425 | 87.1 |
| மார்ச் | 1297 | 17705 | 35000 | 1458 | 78.8 |
| ஏப்ரல் | 1387 | 18802 | 36507 | 1521 | 97.8 |
| மே | 1576 | 18284 | 37086 | 1545 | 102.0 |
| ஜூன் | 1566 | 18581 | 36865 | 1536 | 101.9 |
| ஜூலை | 1638 | 18683 | 37264 | 1553 | 103.7 |
| ஆகஸ்ட் | 1787 | 18764 | 37447 | 1560 | 101.8 |
| ஸெப்டம்பர் | 1876 | 18852 | 37616 | 1567 | 105.7 |
| அக்டோபர் | 1842 | 18930 | 37782 | 1570 | 114.9 |
| நவம்பர் | 1668 | 18727 | 37657 | 1569 | 117.2 |
| டிசம்பர் | 1568 | 18727 | 37454 | 1561 | 100.5 |
| 1952—ஜனவரி | 1321 | 18513 | 37240 | 1579 | 98.9 |
| பெப்ரவரி | 1204 | 18578 | 37091 | 1586 | 82 96 |
| மார்ச் | 1385 | 18894 | 37472 | 1592 | 75.3 |
| ஏப்ரல் | 1465 | 19533 | 38437 | 1600 | 86.2 |
| மே | 1673 | 20339 | 39872 | 1608 | 90.6 |
| ஜூன் | 1628 | 20869 | 41208 | 1617 | 102.3 |
| ஜூலை | 1733 | 21191 | 42060 | 1635 | 98.4 |
| ஆகஸ்ட் | 1884 | 21618 | 42809 | 1655 | 102.1 |
| ஸெப்டம்பர் | 1960 | 21599 | 43217 | 1696 | 107.9 |
| அக்டோபர் | 2010 | 21712 | 43311 | 1781 | 110.1 |
| நவம்பர் | 1915 | 21666 | 43378 | 1817 | 110.6 |
| டிஸம்பர் | 1787 | 21746 | 43412 | 1847 | 103.7 |
| 1953—ஜனவரி | 2010 | 21739 | 43485 | 1878 | 113.8 |
| பெப்ரவரி | 1607 | 22065 | 43804 | 1915 | 109.6 |
| மார்ச் | 1846 | 22596 | 44661 | 1954 | 82.3 |
| ஏப்ரல் | 1838 | 26940 | 49536 | 1989 | 93.0 |
| மே | 2040 | 27807 | 54747 | 2291 | 89.5 |
| ஜூன் | 2003 | 28323 | 55130 | 2299 | 87.1 |
| ஜூலை | 2241 | — | — | — | — |
| ஆகஸ்ட் | 2318 | | | | |
| ஸெப்டம்பர் | 2244 | | | | |
| அக்டோபர் | 2476 | | | | |
| நவம்பர் | 2362 | | | | |
| டிசம்பர் | 2429 | | | | |

1949—ம் ஆண்டின் முதல் ஆறுமாதங்களுக்கும், 1953—ம் ஆண்டின் கடைசி ஆறுமாதங்களுக்கும் விகிதங்கள் கிடைக்காது என்பது நகரும் சராசரிகளின் ஒரு தன்மை என்பதை முன்பே அறிவோம். இப்பொழுது இந்த மாதவிகிதங்களை பட்டியலாக்கி மாதசராசரிகளை கணக்கிட்டு, தேவைப்பட்டால் அவைகளை திருத்தியமைக்கவேண்டும். இந்த கணக்குகளை அடுத்த பட்டியலில் காணலாம்.

| மாதம் | | 1949 | 1950 | 1951 | 1952 | 1953 | மொத் தங்கள் | சராசரி | திருத்தப்பட்ட சராசரிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஜனவரி | ... | — | 103.1 | 100.8 | 98.9 | 113.8 | 416.6 | 104.15 | 102.535 |
| பெப்ரவரி | ... | — | 71.8 | 87.1 | 82.96 | 109.6 | 351.4 | 87.85 | 86.235 |
| மார்ச் | ... | — | 81.9 | 78.8 | 75.3 | 82.3 | 318.3 | 79.51 | 77.895 |
| ஏப்ரல் | ... | — | 93.0 | 97.8 | 86.2 | 93.0 | 370.0 | 92.50 | 90.885 |
| மே | ... | — | 102.6 | 102.0 | 90.6 | 89.5 | 384.7 | 96.18 | 94.565 |
| ஜூன் | ... | — | 98.6 | 101.9 | 102.3 | 87.1 | 389.9 | 97.48 | 95.865 |
| ஜூலை | ... | 107.0 | 108.9 | 103.7 | 98.4 | — | 418.0 | 104.50 | 102.885 |
| ஆகஸ்ட் | ... | 114.8 | 108.7 | 101.8 | 102.1 | — | 427.5 | 106.88 | 105.265 |
| செப்டம்பர் | ... | 115.0 | 107.0 | 105.7 | 107.9 | — | 435.6 | 108.90 | 107 285 |
| அக்டோபர் | ... | 120.0 | 111.0 | 114.9 | 110.1 | — | 456.1 | 114.03 | 112 415 |
| நவம்பர் | ... | 110.9 | 110.1 | 117.2 | 110.6 | — | 46.11 | 115.20 | 113.585 |
| டிசம்பர் | ... | 102.6 | 102.1 | 100.5 | 103.7 | — | 448.8 | 112.20 | 110.585 |
| | | | | | | | மொத்தம் | 1219.38 | |

சராசரிகளின் மொத்தம் 1200-ஐவிட 19.38 அதிகமாகவுள்ளது. எனவே ஒவ்வொரு மாத சராசரியையும் $\frac{19.38}{12}$ = 1.615 என்று குறைத்து விட்டால், மொத்தம் திருத்தமாக 1200 என்று வந்துவிடும். இந்தத் திருத் தங்களைக் கடைசி நிரலில் செய்துள்ளோம். மிகக் குறைவான குறியீடு மார்ச் மாதத்தினுடையது = 78; மிக அதிகமானது நவம்பர் = 114. பொதுவாக பிறப்புகள் அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களில் அதிகமாகவும், பெப்ரவரி, மார்ச், ஏப்ரல் மாதங்களில் மிகக் குறைந்தும் ஏற்படும் பருவகால மாறுபாடுடை யவை எனத் துணியலாம்.

எடுத்துக்காட்டு 13

சென்னை மருத்துவ மனையில் 1949—1958 ஆண்டுகளில் நிகழ்ந்த இரட்டைப் பிறப்புகளுக்கு பருவகால குறியீடுகள் கணக்கிடுதல்—நகரும் சராசரி விகித முறையில்.

[விவரங்களுக்கு அட்டவணை -ஐப் பார்க்கவும்]

| ஆண்டும் மாதமும் | இரட்டை பிறவிகள் | 12 மாத மொத்தங்கள் | இரு. 12 மாத மொத்தங்கள் | மாத சராசரி = 2/24 | நகரும் சராசரி விகிதம் = 2/5 × 100 |
|---|---|---|---|---|---|
| 1949 ஜன | 10 | | | | |
| பெப் | 13 | | | | |
| மார்ச் | 12 | | | | |
| ஏப் | 14 | | | | |
| மே | 14 | | | | |
| ஜூன் | 15 | 195 | | | |
| ஜூலை | 20 | 200 | 395 | 16.458 | 121.52 |
| ஆக | 17 | 203 | 403 | 16.792 | 101.24 |
| செப் | 23 | 212 | 415 | 17.292 | 133.01 |
| அக் | 27 | 216 | 428 | 17.833 | 151.40 |
| நவ | 18 | 222 | 438 | 18.250 | 98.63 |
| டிச | 12 | 220 | 442 | 18.417 | 65.16 |
| 1950 ஜன | 15 | 216 | 436 | 18.167 | 82.57 |
| பெப் | 16 | 228 | 444 | 18.500 | 86.49 |
| மார்ச் | 21 | 221 | 449 | 18.708 | 112.25 |
| ஏப் | 18 | 208 | 429 | 17.875 | 100.70 |
| மே | 20 | 202 | 410 | 17.083 | 117.80 |
| ஜூன் | 13 | 205 | 407 | 16.958 | 76.66 |
| ஜூலை | 16 | 204 | 409 | 17.042 | 93.89 |
| ஆக | 29 | 206 | 410 | 17.875 | 162.24 |
| செப் | 16 | 205 | 411 | 17.125 | 93.43 |
| அக் | 14 | 202 | 407 | 16.958 | 82.56 |
| நவ | 12 | 202 | 404 | 16.833 | 71.29 |
| டிச | 15 | 209 | 411 | 17.125 | 87.59 |
| 1951 ஜன | 14 | 219 | 428 | 17.833 | 78.51 |
| பெப் | 18 | 217 | 436 | 18.167 | 99.08 |
| மார்ச் | 20 | 225 | 442 | 18.417 | 108.60 |
| ஏப் | 15 | 240 | 465 | 19.375 | 77.42 |
| மே | 20 | 248 | 488 | 20.333 | 98.36 |
| ஜூன் | 20 | 261 | 509 | 21.208 | 94.30 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜுலை | 26 | 263 | 524 | 21.833 | 119.09 |
| ஆக | 27 | 258 | 521 | 21.708 | 124.38 |
| செப் | 24 | 257 | 515 | 21.458 | 111.85 |
| அக் | 29 | 264 | 521 | 21.708 | 133.59 |
| நவ | 20 | 266 | 530 | 22.083 | 90.57 |
| டிச | 28 | 272 | 538 | 22.417 | 124.91 |
| 1952 ஜன | 16 | 274 | 546 | 22.750 | 70 33 |
| பெப் | 13 | 273 | 547 | 22.792 | 57 04 |
| மார்ச் | 19 | 290 | 563 | 23.458 | 80.99 |
| ஏப் | 22 | 286 | 576 | 23.999 | 91.67 |
| மே | 22 | 299 | 585 | 24.375 | 90 26 |
| ஜுன் | 26 | 287 | 586 | 24.417 | 106.48 |
| ஜுலை | 28 | 287 | 574 | 23.917 | 117.07 |
| ஆக | 26 | 293 | 580 | 24.167 | 107.58 |
| செப் | 41 | 294 | 585 | 24.375 | 168.21 |
| அக் | 25 | 294 | 586 | 24.417 | 102.39 |
| நவ | 33 | 298 | 592 | 24.667 | 133.78 |
| டிச | 16 | 296 | 594 | 24.750 | 64.65 |
| 1953 ஜன | 16 | 303 | 599 | 24.958 | 64.11 |
| பெப் | 19 | 307 | 610 | 25.417 | 74.75 |
| மார்ச் | 18 | 299 | 606 | 25.244 | 71.30 |
| ஏப் | 24 | 316 | 615 | 25.625 | 93.60 |
| மே | 26 | 309 | 625 | 26.042 | 99.84 |
| ஜுன் | 24 | 311 | 620 | 25.833 | 92.90 |
| ஜுலை | 35 | 315 | 626 | 26.083 | 134.19 |
| ஆக | 30 | 311 | 626 | 26.083 | 115.05 |
| செப் | 33 | 313 | 624 | 25.999 | 126.93 |
| அக் | 42 | 316 | 629 | 26.208 | 160.26 |
| நவ | 26 | 321 | 637 | 26.542 | 97.96 |
| டிச | 18 | 326 | 647 | 26.958 | 66.77 |
| 1954 ஜன | 20 | 318 | 644 | 26 833 | 74.54 |
| பெப் | 15 | 327 | 645 | 26.875 | 55.81 |
| மார்ச் | 20 | 324 | 651 | 27.125 | 73.73 |
| ஏப் | 27 | 309 | 633 | 26.375 | 102 37 |
| மே | 31 | 315 | 624 | 25.999 | 119.24 |
| ஜுன் | 29 | 329 | 644 | 26.833 | 108.08 |
| ஜுலை | 27 | 331 | 660 | 27.499 | 98.19 |
| ஆக | 39 | 336 | 667 | 27.792 | 140.33 |
| செப் | 30 | 346 | 682 | 28 412 | 105.59 |
| அக் | 27 | 345 | 691 | 28.792 | 93.78 |
| நவ | 32 | 343 | 688 | 28.667 | 111.63 |
| டிச | 32 | 349 | 692 | 28.833 | 110.98 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1955 ஜன | 22 | 362 | 711 | 29.625 | 74.26 |
| பெப் | 20 | 358 | 720 | 30,000 | 66.67 |
| மார்ச் | 30 | 369 | 727 | 30 292 | 99.04 |
| ஏப் | 26 | 366 | 735 | 30.625 | 84.90 |
| மே | 29 | 361 | 727 | 30.292 | 95.73 |
| ஜூன் | 35 | 363 | 724 | 30.167 | 116.02 |
| ஜூலை | 40 | 365 | 728 | 30.333 | 131.87 |
| ஆக | 35 | 372 | 737 | 30.708 | 113.98 |
| செப் | 41 | 384 | 756 | 31.500 | 130.16 |
| அக் | 24 | 394 | 778 | 32.417 | 74.04 |
| நவ | 27 | 401 | 795 | 33.125 | 81.51 |
| டிச | 34 | 404 | 805 | 33.542 | 101.37 |
| 1956 ஜன | 24 | 398 | 802 | 33 417 | 71.82 |
| பெப் | 27 | 386 | 784 | 32.667 | 82 65 |
| மார்ச் | 42 | 378 | 764 | 31.833 | 131.94 |
| ஏப் | 36 | 391 | 769 | 32.042 | 112.35 |
| மே | 36 | 400 | 791 | 32 958 | 109.23 |
| ஜூன் | 38 | 401 | 801 | 33.375 | 113.86 |
| ஜூலை | 34 | 409 | 810 | 33.750 | 100.74 |
| ஆக | 23 | 415 | 824 | 34.333 | 66.99 |
| செப் | 33 | 403 | 818 | 34.083 | 96.82 |
| அக் | 37 | 400 | 803 | 33.458 | 110.59 |
| நவ | 36 | 400 | 800 | 33,333 | 108.00 |
| டிச | 35 | 392 | 792 | 32.999 | 106.06 |
| 1957 ஜன | 32 | 406 | 798 | 33.250 | 96.24 |
| பெப் | 33 | 421 | 827 | 34.458 | 95.77 |
| மார்ச் | 30 | 421 | 842 | 35 083 | 85.51 |
| ஏப் | 33 | 429 | 850 | 35.417 | 93.18 |
| மே | 36 | 421 | 850 | 35.417 | 101.65 |
| ஜூன் | 30 | 413 | 834 | 34.750 | 86.33 |
| ஜூலை | 48 | 428 | 841 | 35.042 | 136.98 |
| ஆக | 38 | 424 | 852 | 35.499 | 107.05 |
| செப் | 33 | 428 | 852 | 35.499 | 92.96 |
| அக் | 45 | 435 | 863 | 35.958 | 125.15 |
| நவ | 28 | 436 | 871 | 36.292 | 77.15 |
| டிச | 27 | 438 | 874 | 36.417 | 74.14 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| 1958-ஜனவரி | 47 | 426 | 864 | 35.999 | 130.56 |
| பிப்ரவரி | 29 | 439 | 865 | 36.042 | 80.46 |
| மார்ச் | 34 | 757 | 896 | 37.333 | 91.07 |
| ஏப்ரல் | 40 | 465 | 922 | 38.417 | 104.12 |
| மே | 37 | 473 | 938 | 39.083 | 94.67 |
| ஜூன் | 32 | 492 | 965 | 40.208 | 79.59 |
| ஜூலை | 36 | | | — | — |
| ஆகஸ்ட் | 51 | | | | |
| செப்டம்பர் | 51 | | | | |
| அக்டோபர் | 53 | | | | |
| நவம்பர் | 36 | | | | |
| டிசம்பர் | 46 | | | | |

இப்பட்டியலில் 6-வது நிரலில் கொடுக்கப்பட்ட விவரங்களுக்கும் நகரும் சராசரிக்கும் உள்ள விகிதங்கள் கிடைத்துள்ளன. இவைகளை வைத்துதான் பருவகால குறியீடுகளை கணக்கிடுகிறோம். செய்முறைகள் அடுத்தப்பட்டியலில் விளக்கமாக உள்ளன.

அட்டவணை: பருவகால குறியீடுகளைக் கணக்கிடல்

| | 1949 | 1950 | 1951 | 1952 | 1953 | 1954 | 1955 | 1956 | 1957 | 1958 | மொத்தம் | சராசரி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஜனவரி | — | 82.51 | 78.51 | 70.33 | 64.11 | 74.54 | 74.26 | 17.82 | 96.2 | 30.56 | 742.94 | 82.54 |
| பெப்ரவரி | — | 86.49 | 99.08 | 57.04 | 74.75 | 55.81 | 67,80 | 82.65 | 95.77 | 80.46 | 699.85 | 77.75 |
| மார்ச் | — | 112.25 | 108.60 | 80.99 | 71.30 | 73.73 | 99.04 | 131.94 | 85.51 | 91.06 | 854.43 | 94.93 |
| ஏப்ரல் | — | 100.70 | 77.42 | 91.67 | 93.60 | 102.37 | 86.90 | 112.35 | 93.18 | 104.12 | 860.31 | 95.85 |
| மே | — | 117.08 | 98.36 | 90.26 | 99.84 | 119.24 | 95.73 | 109.23 | 101.65 | 94.67 | 926.06 | 102.89 |
| ஜுன் | — | 76.66 | 94 30 | 106.48 | 92.90 | 108.08 | 116.02 | 113.86 | 86.33 | 79.59 | 874.22 | 97.13 |
| ஜுலை | 121.52 | 93.89 | 119.09 | 117.07 | 134.19 | 98.19 | 131.87 | 100.74 | 136.98 | — | 1053.54 | 117.05 |
| ஆகஸ்ட் | 101.24 | 162.24 | 124.38 | 107.58 | 115.02 | 140.33 | 113.98 | 66.96 | 107.05 | — | 1038.81 | 115.41 |
| செப்டம்பர் | 133.01 | 93.43 | 111.85 | 168.21 | 126.93 | 105.59 | 130.16 | 96.82 | 92 96 | — | 1058.96 | 117.65 |
| அக்டோபர் | 151.40 | 82.56 | 133.49 | 102.39 | 160.2 | 93.78 | 74.04 | 1150-9 | 125.15 | — | 1033.76 | 114.86 |
| நவம்பர் | 98.63 | 71.29 | 90.57 | 133.78 | 97.96 | 111.63 | 81.51 | 10 .00 | 77.15 | — | 870.52 | 96.71 |
| டிசம்பர் | 65.16 | 87.59 | 124.91 | 64.65 | 66.77 | 110.98 | 101.37 | 106.06 | 74.14 | - | 801.53 | 89.06 |
| | | | | | | | | | | | மொத்தம் | 1201.55 |

சராசரிகளின் மொத்தம் 1200 ஆக இல்லாததால், ஒவ்வொரு மாத சராசரியையும் $\frac{1200}{1201.55}$ என்ற காரணியால் பெருக்க, பருவ கால குறியீடுகள் கிடைக்கும். அவைகள் யாவன:—

| | |
|---|---|
| ஜனவரி | 82.43 |
| பெப்ரவரி | 77.65 |
| மார்ச் | 94.81 |
| ஏப்ரல் | 95.46 |
| மே | 102.76 |
| ஜூன் | 97.00 |
| ஜூலை | 116 90 |
| ஆகஸ்ட் | 115.26 |
| ஸெப்டம்ர் | 117.50 |
| அக்டோபர் | 114.70 |
| நவம்பர் | 69.58 |
| டிஸம்பர் | 88.95 |

பருவகால குறியீடுகள் ஜூலை—அக்டோபர் மாதங்களில் அதிகரித்தும், டிஸம்பர்—மார்ச் மாதங்களில் மிகக்குறைவாகவும் ள்ளதைக் காண்கிறும்.

பருவகால மாறுபாடுகளின் தோரணியை படத்தில் காண்கிறோம்.

இங்கு மற்றொன்று விஷயத்தையும் குறிப்பிடலாம். கருதப் பட்ட பல ஆண்டுகளில், ஒவ்வொரு மாதத்தின் சராசரியையும் கவனித்தால் அவைகளில் சில மிக அதிகமாகவோ, அல்லது குறை வாகவோ இருக்கும். எடுத்துக்காட்டாக, இரட்டை பிறப்புகள் விவரங்களில், மார்ச் மாத சராசரிதனை மட்டும் பார்ப்போம்-71.30 என்பது மிகக் குறைவானதாகவும், 131 - 94 என்பது மிக அதிகமானதாகவும் உள்ளன எனலாம், எனவே இவை களை நீக்கி, மீதமுள்ள 7-ஆண்டுகளின் சராசரியை மாத்திரம் கூட்டி, மறுபடியும் சராசரியாக்கி —தேவையிருப்பின் திருத்தம் செய்து, பருவகால குறியீடுகளைக் கணக்கிடுவதும் உண்டு. அப்படி கணக்கிடப்படும் சராசரிகளை மாற்றப்பட்ட (modified) சராசரி கள் என்று அழைக்கலாம்.

### 5.12.4 இணைப்பு சார்பிகள் முறை; (Link Relatives method)

பருவகால மாறுபாடுகளை அளவிடும் முறைகளில் மிகக்கடின மான முறை இணைப்பு சார்பிகள் முறைதான். ஒவ்வொரு காலாண்டின் (அல்லது மாதத்தின்) மதிப்பையும் அதற்கு முந்தின

காலாண்டின் (அல்லது மாதத்தின்) மதிப்புடன் இணைத்து சதவீதங்களாக்கவேண்டும். பிறகு அவைகளை சராசரிகளாக்க வேண்டும். பிறகு அவைகளை முதல் காலாண்டின் [100-என்று வைத்து; (அல்லது மாதத்தின்) சார்பிகளாக்க வேண்டும்; அடுத்து முதல் காலாண்டின் சார்பியை கடைசி காலாண்டின் சார்பியைக் கொண்டு மறுபடியும் கணக்கிட வேண்டும். அப்படி கணக்கிட்டு வரும் மதிப்பு நாம் முதலில் கருதிய மதிப்பான 100-லிருந்து சிறிது மாறுபட்டிருக்கக் கூடும். அதற்கான திருத்தத்தைச் செய்ய வேண்டும். இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தை 4-ஆல் (அல்லது பன்னிரண்டால்) வகுத்து, அதை 1, 2, -ஆல் பெருக்கி, முன்பு கணக்கிட்ட சங்கிலி சார்பிகளிலிருந்து கழித்து, திருத்தப்பட்ட சங்கிலி சார்பிகளை கணக்கிட வேண்டும். இவைகளை, அவைகளின் சராசரியுடன் இணைத்து சதவீதங்களாக்க, நமக்கு பருவகால குறியீடுகள் கிடைக்கும். செய்முறைகளை, கணக்கியல் முறையில் அடுத்து விளக்கியுள்ளோம்.

இணைப்பு-சார்பிகள் முறையில் பருவகால குறியீடுகள் கணக்கிடல்

| ஆண்டு | காலாண்டுப் பகுதிகள் | | | |
|---|---|---|---|---|
| | $Q_1$ | $Q_2$ | $Q_3$ | $Q_4$ |
| 1 | $X_1$ | $X_6$ | $X_{11}$ | $X_{16}$ |
| 2 | $X_2$ | $X_7$ | $X_{12}$ | $X_{17}$ |
| 3 | $X_3$ | $X_8$ | $X_{13}$ | $X_{18}$ |
| 4 | $X_4$ | $X_9$ | $X_{14}$ | $X_{19}$ |
| 5 | $X_5$ | $X_{10}$ | $X_{15}$ | $X_{20}$ |

முதல் ஆண்டு

$Q_1$ பகுதிக்கு இணைப்பு சார்பி இல்லை; $Q_2$ பகுதிக்கு சார்பி $= \frac{X_6}{X_1} \times 100 = P_1$ ; $Q_3$ பகுதிக்கு $= \frac{X_{11}}{X_6} \times 100 = P_2$ ; ... கடைசி ஆண்டு $Q_4$ பகுதியின் சார்பி $= \frac{X_{15}}{X_{20}} \times 100 = P_{19}$ ; இவைகளைத்தான் இணைப்பு சார்பிகள் என்று அழைக்கிறோம். அவைகளை அடுத்த அட்டவணையில் காணலாம்.

இணைப்பு சார்பிகள்

| ஆண்டு | $Q_1$ | $Q_2$ | $Q_3$ | $P_4$ | |
|---|---|---|---|---|---|
| 1 | — | $P_1$ | $P_2$ | $P_3$ | |
| 2 | $P_4$ | $P_5$ | $P_6$ | $P_7$ | |
| 3 | $P_8$ | $P_9$ | $P_{10}$ | $P_{11}$ | |
| 4 | $P_{12}$ | $P_{13}$ | $P_{14}$ | $P_{15}$ | |
| 5 | $P_{16}$ | $P_{17}$ | $P_{18}$ | $P_{19}$ | |
| சராசரிகள் | $\frac{P_4+\ldots+P_{16}}{4}=A_1$ | $\frac{P_1+\ldots+P_{17}}{5}=A_2$ | $A_3$ | $A_4$ | |
| சங்கிலி சார்பிகள் | 100 | $\frac{100\times A_2}{100}=C_2$ | $\frac{C_2\times A_3}{100}=C_3$ | $\frac{C_3\times A_4}{100}=C_4$ | $\frac{C_4\times A_1}{100}=C_1{}^1$ |

இப்பொழுது $C_1$-ன் மதிப்பு, நாம் கருதிய முதல் காலாண்டு பகுதியின் சார்பியான 100-ஐ விட மாறுபட்டிருக்கலாம். எனவே $(100-C^1{}_1)/4=d$ என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது திருத்தப்பட்ட சங்கிலி சார்பிகள் கீழ்வருமாறு அமையவேண்டும்.

| | | | | | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| திருத்தப்பட்ட சங்கிலிசார்பிகள் | 100 | $(c_3-d_2)$ | $(c_3-2d)$ | $(c_4-3d)$ | T |
| பருவகாலகுறியீடுகள் | $\frac{100}{T/4}\times 100$ | $\frac{(c_2-d)}{T/4}\times 100$ | $\frac{(e_3-2d)}{T/_4}\times 100$ | $\frac{(c_4-3d)}{T/4}\times 100$ | |

எடுத்துக்காட்டு14: கீழ்கண்ட விவரங்களுக்கு இணைப்பு சார்பிகள் முறையில் பருவ கால குறியீடுகளைக் கணக்கிடு

| | 1964 | 1965 | 1966 | 1967 |
|---|---|---|---|---|
| $Q_1$ | 75 | 86 | 90 | 100 |
| $Q_2$ | 60 | 65 | 72 | 78 |
| $Q_3$ | 54 | 63 | 66 | 72 |
| $Q_4$ | 59 | 80 | 85 | 93 |

1964 - ம் ஆண்டு முதல் $Q_1$—க்கு இணைப்பு சார்பிகிடையாது

$Q_2$......... $= \frac{60}{75}\times 100 = 80$

$Q_3$......... $= \frac{54}{60}\times 100 = 90$

$Q_4$......... $= \frac{59}{54}\times 100 = 109.3$

1965—ம்............ $Q_1$......... $= \frac{86}{59}\times 100 = 145.7$

1967—ம்............ $Q_4$......... $= \frac{93}{72}\times 100 = 129.2$

இவைகளை பட்டியல் படுத்தி மற்ற கணக்குகளை போடுவோம்

| ஆண்டுகள் | $Q_1$ | $Q_2$ | $Q_3$ | $Q_4$ | |
|---|---|---|---|---|---|
| 1964 | — | 80.0 | 90.0 | 109.3 | |
| 1965 | 145.7 | 75.6 | 96.9 | 127.0 | |
| 1966 | 112.5 | 80.0 | 98.7 | 128.8 | |
| 1967 | 117.7 | 78.0 | 92.3 | 129.2 | |
| மொத்தங்கள் | 375.9 | 313.6 | 370.9 | 494.3 | |
| சராசரிகள் $A_1 . A_2 . A_3 . A_4$. | 125.3 | 78.4 | 92.7 | 123.6 | |
| சங்கிலி சார்பிகள் $C_1 C_2 C_3 C_4$ | 100 | 78.4 | 72.68 | 89.82 | $C^1_1 = 112.6$ ; $\therefore d = \frac{112.6-100}{4} = 3.15$ |
| திருத்தப் பட்ட சங்கிலி சார்பிகள் | 100 | 75.25 | 66.38 | 80.37 | T=322 |
| பருவகால குறியீடுகள் | 124.2 | 93.5 | 82.5 | 99.8 | |

குறியீடு முதல் காலாண்டில் மிக அதிகமாகவும், மூன்றுவது காலாண்டில் மிகக் குறைந்தும் காணப்படுகின்றது.

5.13 எந்தமுறை சிறந்தது; நான்கு வேறு முறைகளை வைத்து; பருவகால குறியீடுகளைக் கணக்கிடலாம். இவைகளில் மிக சுலப மானதும், சாதாரண சாரசரி முறைதான், மிக கடினமானது இணைப்பு சார்பிகள் முறை. இவைகளில் குறிப்பிட்ட ஒரு கணக்கில் எந்த முறையை பயன்படுத்துவது? எல்லாவேளைகளிலும் ஒரே முறையே திருத்தமாக அமைந்து விடும் என்று கூறுவதற் கில்லை. உதாரணமாக ஒரு குறிப்பிட்ட தொடரில் நெடுங்கால போக்கு அவ்வளவாக இல்லாமல் எல்லா வித்தியாசங்களுமே பருவகால வித்தியாசங்களாக அமையும் பொழுது, சாதரண சராசரி முறையும் திருத்தமான, நம்பகமான குறியீடுகளைத் தரும். கோழி முட்டை உற்பத்தி சுமாராக இந்த வகையைச் சார்ந்ததே— நெடுங்கால போக்கு குறைவு; பருவகால மாறுபாடுகளே அதிகம். நெடுங்கால போக்கினையும் கருத்தில் கொண்டு செயல்பட வேண்டுமானல்—இரண்டாவது அல்லது மூன்ருவது முறைகளை பின்பற்றலாம். இவைகளில் நகரும் சராசரி—விகித முறையே சிறந்தாகக் கருதப்படுகிறது. சிறிதுகாலம் இணைப்பு சார்பி முறை தான் சிறந்தது என்று கருதப்பட்டு, மிகப்பரவலாக அது பயன் படுத்தப்பட்டது; ஆனால் இன்று அது அவ்வளவு சிறந்தாகக் கருதபடுவதில்லை. ஏனென்ருல் அதுமற்ற மாறுபாடுகளையோ, வித்தியாசங்களையோ நன்கு நீக்குவதில்லை என்று தெரிந்துள்ளது.

5.14 எவ்வளவு ஆண்டுகள்? பருவகால குறியீடுகளைக் கணக்கிட எவ்வளவு ஆண்டுகளுக்கான விவரங்கள் இருக்க வேண்டும் என்பதும் மற்றுமொரு பிரச்சினை. நாம் எடுத்துக் காட்டுகளில் நான்கு அல்லது ஐந்தாண்டு விவரங்களையே கருதினுலும், அந்த கால இடைவெளி பொருத்தமானது என்று கூறுவதற்குற்கில்லை. 8, 10- ஆண்டுகளுக்கும் குறைவான விவரங்களை வைத்து பருவ கால குறியீடுகள் கணக்கிடுவது அவ்வளவு தரமன்று. வெகு குறுகிய கால இடைவெளியில் ஏதாவதொரு சிறப்பான நிகழ்ச்சி நிகழ்ந்திருக்கக்கூடும், இது பருவகால தோரணியை மாற்றியிருக்க க்கூடும். எனவே சுமாரன, விரிவான விவரங்களை வைத்து பருவ கால குடுயீடுகளை அமைப்பதே நல்லது. ஒன்ருே, அல்லது, அதற்கும் அதிகமானதோ, வியாபாரச் சுழல்கள் உள்ளடங்கி யிருத்தல் சிறப்பாகும். அப்பொழுது, விவரங்களில் அந்த சுழல் முழுவதும் அடங்கியிருக்கவேண்டும்.

5.15 எந்த சராசரி? பொதுவாக, சராசரி எடுக்கும் பொழுது கூட்டுச்சராசரியையே பயன் படுத்துவதுதான் வழக்கம். ஏனென் ருல், பல புள்ளியியல் முறைகளிலும் சிறந்ததும், நிலையானதும் கூட்டுசராசரி என்பது தெளிவு. ஆனல் இந்த சராசரி ஏதாவது ஓரிரண்டு மிகஅதிகமான (அல்லது மிகக்குறைவான) மதிப்புகளால்

பெரிதும் பாதிக்கப்படும் தன்மையுடையது, எனவேதான், அத்தகைய மதிப்புகள் இருப்பின் அவைகளை நீக்கிவிட்டு, மற்ற சற்றே நிலையான மதிப்புகளை வைத்து கூட்டுச் சராசரி கணக்கிட வேண்டும் என்று முன்பு கூறியுள்ளோம். இந்த குறையை வேறு மொரு முறையிலும் நீக்கலாம். இடைநிலை (Median) யைச் சராசரியாக்கி கருதுவதால் சில அதிகமான அல்லது குறைவான மதிப்புகளின் பாதிப்பு தடைப்பட்டுவிடும். இவ்விரண்டு முறைகளில், முதல் முறையே சிறந்தது என்று கூறுவர்.

**5.16 எப்படி பருவகால மாற்றங்களை நீக்குவது?**

நம் கருதுகோள் பெருக்கல் மாடல் என்றால், $\frac{Y}{S} = TCI$ என்பது பருவகால மாற்றங்கள் நீக்கப்பட்ட தொடர் ஆகி விடுகிறது. அப்படியில்லாமல் கூட்டுமாடல் (Additive Model) என்றால் (7—5) என்று வித்தியாசமெடுப்பதால் பருவகால மாற்றங்களை நீக்கியாகி விடுகிறது. முதல் மாடலே அதிகமாக பயன்பட்டு வருவதால், அதனையே நாமும் கருதுவோம். கடைசி யான எடுத்துக்காட்டிலுள்ள விவரங்களிலிருந்து பருவகால மாற்றங்களை நீக்குவதை அடுத்த அட்டவணையில் காணலாம்,

| கொடுக்கப்பட்ட விவரங்கள் | | பருவ கால குறியீடுகள் | பருவ நீக்கப்பட்ட விவரங்கள் |
|---|---|---|---|
| $1964Q_1$ = | 75 | 124.2 | 100×(75/124.2)=60.4 |
| | 60 | 93.5 | 100×(60/93.5) =64.2 |
| | 54 | 82.5 | 63.0 |
| | 59 | 99.8 | 59.1 |
| $1965Q_1$ = | 86 | 124.2 | 78.9 |
| | 65 | 93.5 | 69.5 |
| | 63 | 82.5 | 76.4 |
| | 80 | 99.8 | 80.2 |
| $1966Q_1$ = | 90 | 124.2 | 72.5 |
| | 72 | 93.5 | 77.0 |
| | 66 | 82 5 | 80.0 |
| | 85 | 99.8 | 85.3 |
| 1967 $Q_1$ | 100 | 124.2 | 80.5 |
| | 78 | 93.5 | 83.4 |
| | 72 | 82.5 | 87.3 |
| | 93 | 99.8 | 94.2 |

கடைசிநிரலிலுள்ள விவரங்கள் பருவமாற்றங்கள் நீக்கப்பெற்றவை.

5.17 பயன்களும் குறைபாடுகளும்;

பருவ்கால மாற்றங்களை நீக்கிவிட்டு மற்றவகை ஏற்ற விளக்கங்களை அளவிடுவதும், பருவகால மாற்றங்களை அளவிடும் முறைகளில் ஒருபயனாகும். அவ்வாறே அன்றி, பருவகால குறியீடுகளும் தனிப்பட்ட முறையில் பயன்தரும். உதாரணமாக ஒரு வியாபாரிக்கு குறிப்பிட்ட மாதத்தின் பருவகால குறியீடு 150 என்று தெரிந்தால், அவன் அந்த மாதத்திற்கு தன் கையிருப்பு சரக்கை 50 சத வீதம் அதிகமாக்கி, வரும் கூட்டத்தையும். ஜனங்களின் தேவையையும் சமாளிக்கலாம். மற்றுமொரு மாதத்தின் குறியீடு 75 தான் என்றால், அந்தமாத வியாபாரம் 25சதவீதம் குறையக்கூடும் என்று பொருள்; எனவே, அவன் வேறு ஏதாவது வியாபார முறைகளை — விளம்பரம், விலைகுறித்தல் அறிவிப்புகள், பரிசுதிட்டம் வழங்குதல் முதலியன — பின்பற்றி, குறையக்கூடிய வியாபாரத்தை சரிக்கட்டலாம். எனவே பருவகால குறியீடுகள் வியாபாரிகள், தொழிற்சாலை அதிகாரிகள், முதலிய பலதர மக்களுக்கு பெரிதும் பயன்படுபவை. ஒரு குறிப்பிட்ட பொருளை மட்டுமே தயாரிக்கும் தொழிலதிபரும், வேறு பொருளையும் தயாரிப்பதன் மூலம், தன் உற்பத்தியை ஒரே சீராக அமையுமாறு செய்ய முடியும் – முதல் பொருளின் வியாபாரம் குறையும் பொழுது இரண்டாம் பொருளின் வியாபாரம் அதிகமானால், மொத்தமாக அந்த தொழிலதிபருக்கும், ஒருநிலையான வியாபாரம் நிகழக்கூடும்.

நாம் கணக்கிடும் குறியீடுகள் தோராயமானவைகளே என்பதை நன்கு நினைவில் வைத்து கொள்ள வேண்டும். அவைகள் பல ஆண்டு விவரங்களை கொண்டு அமைக்கப்பெற்றவையாதலால் ஏதாவதொரு குறிப்பிட்ட ஆண்டிற்கு அவை திருத்தமாக அமையாது போகக்கூடும். வேறுவித ஏற்றயிறக்கங்கள் அதிகமாக நிகழ்ந்து, பருவகால குறியீடுகள் நிலையானவைளாக இல்லாவிடில் அவைகளின் பயனும் வெகுகுறைவுதான். பொதுவாக, எல்லா குறியீடுகளும் ஏறக்குறைய 100 ஆகவே இருப்பின். பருவ்கால தோரணி இல்லையென்று கொள்வதே நல்லது.

5.18 சுழல் ஏற்றயிறக்கங்களும் அவைகளை அளவிடுதலும்

தனிப்பட்ட வியாபாரியின் சக்தியால் அடக்க முடியாத வியாபார மாற்றங்களை வியாபாரச் சுழல்கள் என்று அழைக்கிறோம். சாதாரணமாக ஒரு நாட்டில் பொருளாதாரத் துறையில், அவ்வப்பொழுது ஏற்றவிறக்கங்கள் ஏற்படும். சில வேளைகளில் வியாபாரம் பொதுவான பொருளாதார செயல் திறனில் மந்தமான நிலையில் இருக்கும், பிறகு இந்த மந்தநிலைப்

படிப்படியாக மாறி, ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டு, சிலகாலம் சென்றபின் ஒரு பொருளாதார வீக்கம் நிகழும். இந்த வீக்கத்திலேயிருந்தே தோன்றினர் போல் ஒரு பின்னிறக்கம் (Recession) தோன்றி, அதன் முடிவாக மறுபடியும் ஒரு மந்தநிலை (depression) ஏற்படும். இப்படியான சுழற்சிகள் அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். இவைகளை கீழ்கண்ட படம் மூலம் விளக்குவார்கள்.




இத்தகையச் சுழல்களை வியாபாரச் சுழல்கள் அல்லது வணிகச் சுழல்கள் என அழைப்பது வழக்கம், இவைகள் பருவகால மாறுபாடுகளைப் போல் குறித்த கால இடைவெளியிலேயே அடிக்கடி நிகழாதவைகள். ஒரு சமயம் வியாபாரச் சுழலின் இடைவெளி 5-ஆண்டுகளாக இருக்கலாம்; அதே காலத் தொடர் வரிசையில் வியாபாரச்சுழல் 7-ஆண்டு இடைவெளியுள்ளதாக இருக்கலாம். எனவே அத்தகையச் சுழல்கள் ஏற்படுவதை முன் கூட்டி சொல்வது கடினமானாலும், அவைகளை அளந்து, அவைகளை நீக்கலாம் ஒரு குறிப்பிட்ட காலத்தொடர் வரிசை ஆண்டுதோறும் மட்டுமே கொடுக்கப் பட்டிருந்தால், அந்த வரிசையில் பருவமாறுபாடுகள் இல்லை என்று கொள்ளலாம் [ஏனென்றால் ஓர் ஆண்டு இடைவெளியில் எல்லா பருவங்கள் நிகழ்ந்து போகும்] அப்படிப் பட்ட நிலையில் $Y = TCI$ என்று கொள்ளுதல் பொருத்தமாக இருக்கும். எனவே $\frac{Y}{T} = CI$ என்று எழுதுவதால் நமக்கு$CI$— அதாவது சுழல் ஏற்ற விறக்கங்கள், மற்றும் ராண்டம் ஏற்றவிறக்கங்கள் கிடைக்கும். $I$- என்பது குறைவாக இருப்பின் $\frac{Y}{T}$ என்பதே சுழல் ஏற்ற விறக்கங்களின் அளவு ஆகிவிடும். இவைகளை சத வீதங்களாக்கினுல் சுழல் குறியீடுகள் கிடைக்கும்.

சுழல் ஏற்ற விறக்கங்கள் கணக்கிடுவதற்கு தொடர் வரிசை அதிகமானகால இடைவெளிக்கு கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். ஐந்தாறு அல்லது பத்து ஆண்டிற்கான காலத்தொடர் வரிசைகளிலிருந்து சுழல் குறியீடுகள் கணக்கிடுவது நல்லதல்ல. சுமாராக 25-40 ஆண்டு விவரங்கள் கிடைத்தால் சுழல் குறியீடுகள் கணக்கிட முயல்வது சரி எனலாம்.

கீழ்கண்ட எடுத்துக் காட்டில் நெடுங்கால போக்கு $Y = 4.76 + 1.714X$ என்பது. இங்கு 1928-ம் ஆண்டுதான் மூலம் இந்தப் போக்குக்கொண்ட விவரங்கள் (ஒரு பகுதி மட்டும்) கீழுள்ளபட்டியலில் உள்ளன. அமெரிக்க நாட்டில் நிலக்கரி யுற்பத்தி (மில்லியன் டன் அளவில்) விவரங்கள் அவை.

| 1<br>ஆண்டு | 2<br>உற்பத்தி y | 3<br>போக்கு மதிப்பீடு<br>yT | 4<br>சுழல்குறியீடுகள்<br>100×(2) / (3) |
|---|---|---|---|
| 1924 | 484 | 469 | 103.2 |
| 1925 | 520 | 471 | 110.4 |
| 1926 | 573 | 473 | 121.1 |
| 1927 | 518 | 474 | 109.3 |
| 1928 | 501 | 476 | 105.3 |
| 1929 | 535 | 478 | 111.9 |
| 1930 | 468 | 479 | 97.7 |
| 1931 | 382 | 481 | 79.4 |
| 1932 | 310 | 483 | 64.2 |
| 1933 | 334 | 485 | 68.9 |
| 1934 | 359 | 486 | 73.9 |
| 1935 | 372 | 488 | 76.2 |
| 1936 | 439 | 490 | 89.6 |
| 1937 | 446 | 491 | 90.8 |
| 1938 | 349 | 493 | 70.8 |
| 1939 | 395 | 495 | 79.8 |
| 1940 | 461 | 497 | 92.8 |
| 1941 | 514 | 498 | 103.2 |
| 1942 | 583 | 500 | 116.2 |
| 1943 | 590 | 502 | 117.5 |
| 1944 | 620 | 503 | 123.3 |
| 1945 | 578 | 505 | 114.5 |

(4) — வது நிரலை மாத்திரம் நோக்குவோம். 1924-ம் ஆண்டு மறுமலர்ச்சி நிகழ்ந்து வரும் ஆண்டு; அடுத்த இரு ஆண்டிலும் ஒரு வீக்கம் (மிகஅதிகமான உற்பத்தி) நிகழ்ந்துள்ளது. இதற்கு பிறகு ஒருவகை பின்னிறக்கம் ஏற்பட்டு, உற்பத்தி படிப்படியாக 1932-ம் ஆண்டுவரை குறைந்து வந்துள்ளது. மறுபடியும் ஒரு மறுமலர்ச்சி (சற்றே தேக்கத்திற்கு பிறகு) உண்டாகி, 1943-45 ஆண்டுகளில் இரண்டாம் முறையாக ஒரு வீக்கம் ஏற்பட்டுள்ளதை காண்கிறோம்.

இத்தகைய முறையை பொதுவாக ஒரு தொடரிலும் உபயோகிக்கலாம். Y = TSCI என்றால் $\frac{Y}{TS} = CI$ அதாவது சுழல் ஏற்ற விறக்கங்களும், ராண்டம் மாற்றங்களும் உள்ள ஒருநிலை. இவைகளை சதவீதங்களாக்கினால், அவைகளை கழல்—முறையற்ற குறியீடுகள் எனலாம்

குறிப்புச் சுழல் முறை (Reference cycle method) என்று அழைக்கிறார்கள்.

இந்த முறையை அந்த நிறுவனம் 1000க்கு மேலான தொடர் வரிசைகளை நன்கு ஆராய்ந்த பிறகு வரையறுத்துள்ளது. இது கடந்தகால சுழல்களைப்பற்றிய ஆய்வுதான். முக்கியமாக இரண்டு பிரச்சினைகளுக்கு தீர்வு காணும் வகையில் இந்த முறையுள்ளது. அவை யாவன:-

(1) பொதுவாக, வியாபாரத்திலுள்ள அடுத்தடுத்தச் சுழல்களில் (குறைவான அல்லது அதிகமான மாற்றங்களுடன்) திரும்ப திரும்ப நிகழ்கின்ற மாற்றங்களின் தோரணி குறிப்பிட்ட இந்த தொடர் வரிசையிலும் உள்ளதா? இருப்பின் அதன் தனித்தன்மை யாவை?

(2) இந்த தொடர் வரிசைக்கு மட்டும் சிறப்பான அலைஅசைவுகள் உள்ளனவா? இருப்பின் அவற்றின் தனித்தன்மை யாவை?

பொதுவாக, பொருளாதாரத் துறையில் அடுத்தடுத்து நிகழக்கூடிய விரிவு – சுருக்கங்களின் அலைகள் ஏற்படும் பொழுது, குறித்த தொடர் வரிசையின் நடக்கையை (behaviour) பற்றிய பிரச்சினைகள் (1)-ல் உள்ளன. வேறு விரிவான எந்த சட்டத்திற்கும் (framework) ஒப்பிடாது, அந்தத் தனித்த தொடர் வரிசையில் மட்டும் நிகழும் காலச் சுழற்சியுடைய அல்லது சுமாராக காலச் சுழற்சியையுடைய (Periodic and semiperiodic) அசைவுகளுக்

காணலை (2)-ல் இடம் பெற்றுள்ளன. இந்த ஆய்வின் மூலம் "மேற்கோள் தேதிகளை" (Reference dates) நிர்ணயிக்க முடியும். பிறகு அந்த தேதிகளை வைத்து பல வகையான காலத் தொடர் வரிசைகளை ஒப்பிட முடியும், மற்றும் ஏற்றவிறக்கங்களை அளவிட, தொடர் வரிசைகளின் முடிவுகளை நிர்ணயிக்கவும் அந்த முறை உதவும்.

முதலாவதாக, வியாபாரச் சுழல்களிலுள்ள சிறுமப்பெருமங் களின் தேதிகள் நிர்ணயிக்கப்படும். ஓர் ஆண்டைவிட அதிகமான, மற்றும் பத்து அல்லது பன்னிரண்டு ஆண்டுகளைவிட குறைவான கால அளவுள்ளவாறு அந்த தேதிகள்,— அதிக காலதொடர் வரிசைகளின் தன்மையை ஆராய்ந்தபிறகும், மற்றும் வியாபாரச் சுழல்களைப்பற்றிய பற்பல அறிக்கைகளை ஆராய்ந்த பிறகும்,— நிர்ணயிக்கப் பெற்றன.

பிறகு, குறிப்பிட்ட அல்லது தனித்த தொடர் வரிசையில் உள்ள, ஒருசிறும(trough)ங்களிடையே உள்ள சுழல் ஊசலாட்டங் களை கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களிருந்து பகுத்துஆய வேண்டும். மேற்கோள் கால அளவு எல்லா தொடர் வரிசை களுக்கும் பொதுவானதால், ஒப்பிடுவது சாத்தியமாகிறது. கீழ் கண்ட அலைகளிலிருந்து முறையற்று மாற்றங்களை நீக்குவதைப் பிறகு விவரிப்போம்.

கீழ் கண்ட பட்டியலில் ஒரு கணக்கின் விவரங்கள் உள்ளன. ஒரு குறிப்பிட்ட அமெரிக்க கம்பெனியின் மாதாந்திர விற்பனை அளவுகள் கீழே முதல்இருநிரலில் தரப்பட்டுள்ளன. (அளவு-மில்லியன் டாலர்கள்) முடிவிவரங்களில் ஒருபகுதி மட்டுமே இங்குள்ளது.

(அடுத்த பக்கத்திலுள்ள பட்டியலைப் பார்க்கவும்)

பொருத்தப்பட்ட போக்கு சமன்பாடு $Y = 176.252 + 13.7782X$ இங்கு 1947 - 0 என்று கருதப்பட்டுள்ளது. இந்த சமன் பாட்டை மாத மதிப்புகளுக்கு மாற்ற வேண்டும். 1946—ம் ஆண்டு ஜனவரி மாதத்தை மூலமாகக் கொண்டால் சமன்பாடு

$$Y = 176.252 + \frac{13.7782}{12}(x \times 17.5)$$ என்று வருகிறது.

அதாவது $Y = 156.159 + 1.14818 \times$ இந்த சமன் பாட்டிலிருந்து போக்கு மதிப்புகளை கணக்கிட்டு 3-நிரலில் எழுதியுள்ளோம்.

அட்டவணை: CI- மதிப்புகளை அளவிடுதல்.

| 1<br>ஆண்டும் மாதமும் | 2<br>விற்பனை<br>y | 3<br>போக்கு<br>T | 4<br>பருவ கால<br>S | 5<br>TS | 6<br>100 (y/TS) = CI |
|---|---|---|---|---|---|
| 1947<br>ஜன | 134.0 | 169.9 | 83.0 | 141.1 | 95.0 |
| பெப் | 114 6 | 171.1 | 72.0 | 123.2 | 93.0 |
| மார்ச் | 151.7 | 172.2 | 94 0 | 161.9 | 93 7 |
| ஏப் | 160.7 | 173.4 | 100.0 | 173.4 | 92.7 |
| மே | 171.6 | 174.5 | 99.5 | 173.7 | 98.8 |
| ஜூன் | 163.5 | 175.7 | 98.0 | 172.7 | 94.9 |
| ஜூலை | 147.6 | 176.8 | 90.0 | 159.1 | 92.8 |
| ஆக | 157.4 | 177.9 | 96.5 | 171.7 | 91.7 |
| செப் | 189.1 | 179.1 | 106.0 | 189.9 | 99.6 |
| அக் | 206.0 | 180.3 | 113.0 | 203.7 | 101.8 |
| நவ | 226.0 | 181.4 | 116.5 | 211 4 | 106.9 |
| டிச | 267.6 | 182.6 | 141.0 | 257.4 | 104.0 |
| 1948<br>ஜன | 156.7 | 183.7 | 81.0 | 148 8 | 105.3 |
| பெப் | 139 9 | 184.9 | 72.0 | 133.1 | 105.1 |
| மார்ச் | 194.5 | 186.0 | 93.0 | 173.0 | 112,4 |
| ஏப் | 204.0 | 187.2 | 99.0 | 185.3 | 110.1 |
| மே | 193.3 | 188 3 | 100.0 | 188.3 | 102.7 |
| ஜூன் | 203 5 | 189.5 | 99.0 | 187.6 | 108 5 |
| ஜூலை | 186.8 | 190.6 | 89.0 | 169.6 | 110.1 |

இந்ததொடருக்கு கணக்கிடப்பட்ட பருவகால தோரணிகளை (4)-ம் நிரலில் காண்கிறோம்; TXS என்பது (5)-ம் நிரல் விவரங்கள் (6)-ம் நிரலில் CI விவரங்கள் உள்ளன. (சதவீத அளவில்)—இவைகளே சுழல் குறியீடுகள். ஜனவரி—ஏப்ரல் மாதங்களில் பின்னிறக்கமும் தேக்கமும், மே—மாதத்திலிருந்து மறுமலர்ச்சி ஏற்பட்டு, நவம்பர் மாதத்தில் வீக்கம் வந்துள்ளதைக்காண்கிறோம், இவ்வாறு மாத-விவரங்களுக்கும் சுழல் குறியீடுகள் கணக்கிடலாம். இந்த முறைக்கு மீத- முறை அல்லது எச்சமுறை (Residuals method) என்று பெயர்.

**5.18.1 குறிப்புச் சுழல் முறை:-**

நேஷனல் ப்யூரோ ஆஃப் எக்கனமிக் ரிஸர்ச் என்ற நிறுவனம், சுழல் ஏற்ற விறக்கங்களை அளவிட ஒரு முறை வகுத்துள்ள,

படிகளை வைத்து ஒவ்வொரு தொடர் வரிசையும் ஆயப்படும்

(1) போக்கு நீக்குதல் சாதாரணமாக செய்யபடுவதில்லை. விவரங்கள் முதலில் பருவகால மாற்றங்களுக்கு திருத்தப்படும்.

(2) பிறகு, இரு சிறுமங்களை வைத்து, தொடர் வரிசை சிறப்பு சுழல் பகுதிகளாக பிரிக்கப்படும்.

(3) இப்படி பிரிக்கப்பட்ட ஒவ்வொரு பகுதியிலுமுள்ள மாத மதிப்புகள், அந்த பகுதியின் சராசரியின் சதவீதங்களாக மாற்றப்படும். இவைகளை "சிறப்பு-சுழல் சார்பிகள்" எனப்படும். இவ்வாறு செய்வதனல் தனித்த தொடர் வரிசையின் அலகுகள் (unit) எவ்வாறாக இருந்தாலும், சார்பிகள் சதிவீத அளவிலேயே அமைவதால், ஒப்பிடுதல் எளிதாகிறது.

(4) ஒவ்வொரு சிறப்புச் சுழலும் 9- பகுதிகளாக பிரிக்கப்படும்—அந்தந்த பகுதிகளுக்குத் தனியாக சராசரிகள் கணக்கிடப்படும். இந்த ஒன்பது பகுதிகள் வியாபாரச் சுழலின் ஒன்பது பகுதிகளை ஒத்தது. அவைகள்:—

(i) தொடக்க சிறுமத்தை மையமாக கொண்ட மூன்று மாதப்பகுதி.

(ii) விரிவு காலத்தின் முதன் மூன்றில் ஒரு பங்கு பகுதி.

(iii) விரிவு காலத்தின் இரண்டாம் மூன்றில் ஒரு பங்கு பகுதி

(IV) விரிவு காலத்தின் கடைசி மூன்றில் ஒரு பங்கு பகுதி

(V) பெருமத்தை மையமாகக் கொண்ட மூன்று மாதப் பகுதி

(Vi) –(Viii) சுருக்கக் காலத்தின், முதல், இரண்டாம், கடைசி மூன்றில் ஒரு பகுதிகள்

(IX) கடைசி சிறுமத்தை மையமாகக் கொணடு மூன்று மாதப் பகுதி.

இத்தகைய 9—நிலை சராசரிகள், காலத்தொடர் வரிசையிலுள்ள முறையற்ற ஏற்ற விறக்கங்களை நீக்கி, குறிப்பிட்ட ஒரு தொடர் வரிசையிலுள்ள ஒரு குறிப்பு - சுழல் தோரணியின் அமைப்பை நன்கு எடுத்துக் காட்டும்.

முறை விரிவானதாகவும், சற்று கடினமானதாகவும் உள்ளது. இருப்பினும், இந்த முறை பல தொடர்வரிசைகளை ஒப்பிடுவதற்கு சிறந்ததாகவே உள்ளது. போக்கு பொருத்துதல் சரிவர அமையாவிட்டால் ஏற்படக்கூடிய இன்னல்களையும் இந்த முறை தவிர்க்கிறது. இது ஒரு முக்கியமான அம்சமாகும்,

இந்த முறையின் குறைபாடு. அதனை அமைக்க, ஒரு தொடர் வரிசை முற்று பெற்றிருக்க வேண்டும் என்பதே. நடப்பில் இருக்கும் தொடர் வரிசைகளுக்கு இது அவ்வளவாக பயன்தராது.

**5.18.2 ஹார்மானிக் முறை**

சுழல் ஊசலாட்டங்களை அளவிடுவதற்கு மற்றுமொரு முறையும் உள்ளது. இது கணக்கியல் அமைப்புக் கொண்டது; எனவே செய் முறைகள் கடினமாக இருக்கும். இந்த முறையைப் பற்றிய சிறு குறிப்புகள் மட்டும் இங்கு தரப்படும்.

நெடுங்கால போக்கும், பருவகால மாறுபாடுகளும் நீக்கியபின் உள்ள தொடர் எச்சத்தொடர் எனப்படும். அதனை $u_t$ என்று குறிப்போம். அதற்கு $\mu$ என்ற காலஅளவு (period) உள்ள ஒரு ஹார்மானிக் பகுதியிருக்கிறதா என்பதனை ஆருய வேண்டும்.

$$\text{அப்பொழுது } u_t = a \sin\frac{2\pi t}{\lambda} + bt = 1\ S$$

என்று ஒரு கருதுகோள் வைத்துக் கொள்ளலாம். இங்கு $b_t$ என்பது ஒரு முறையற்ற ராண்டம் மாறி; $\lambda$ என்பது காலஅளவு i

a என்பதனை 'விரிவு'' அல்லது ஆம்ப்ளிட்யூட் (amplitude) என்பார்கள். மற்றும் $b_t$ என்பதும், a Sin $\frac{2\pi t}{\lambda}$ என்பதும் தொடர்பற்ற (uncorrelated) உறுப்புகள் எனபோம்.

இப்பொழுது
$$A = \frac{2}{n} \sum_{t=1}^{n} U_t . \text{Cos} \left(\frac{2\pi t}{\mu}\right)$$
$$B = \frac{2}{n} \sum_{t=1}^{n} Ut.\text{Sin} \left(\frac{2\pi t}{\mu}\right)$$
(2) என்று வைத்துக் கொண்டால்,

$R^2 = A^2 + B^2$ என்பதனை $\mu$ என்ற கால அளவு "கொண்ட ஆழம்" (intensity) என்பார்கள்.

எனவே (1) —லிருந்து $U_t$- க்கு மதிப்புகளை பொருத்தினுல்

$$A = \frac{2a}{n} . \sum_t \text{Sin} \left(\frac{2\pi t}{\lambda}\right) . \text{Cos} \left(\frac{2\Sigma t}{\mu}\right) + \frac{2}{n} . \Sigma b_t . \text{Cos} \left(\frac{2\pi t}{\mu}\right)$$
$$= \frac{2a}{n} . \sum_t . \text{Sin} (\alpha t) \text{Cos} (\beta t)$$

இங்கு $\alpha = \frac{2\pi}{\lambda}$ , $\beta = \frac{2\pi}{\mu}$ என்று வைத்து, இரண்டாம் உறுப்பினை விட்டுவிட்டோம்.

$$\text{அதாவது } A = \frac{a}{n} \Sigma \left[ \left\{ \text{Sin} (\alpha - p)t + \text{Sin} (\alpha + \beta)t \right\} \right]$$

$$A = a . \text{Sin} \left(\frac{\alpha - \beta}{2}\right) (n + 1) \qquad ( )$$

என்ற தோராயம் கிடைக்கின்றது.

இதேபோல் B க்கு தோராயம் $B = a \text{ Cos} \left(\frac{\alpha - \beta}{2}\right) (n+1)$

(4)

இதனை $\beta \rightarrow \alpha$ என்ற கருத்தில் எளிதாக்கினுல்,

எனவே $R^2$ என்பது $a^2$ என்ற முடிவுக்கு செல்கிறது.

$\beta \rightarrow \alpha$ என்றுல் $\mu$ என்பது $\lambda$- வை எட்டும் என்று பொருள். அதாவது நாம் (2)-ல் எடுத்துக் கொண்ட கால அளவு, உண்மையான கால அளவான $\lambda$- வை எட்டும்.

CI என்ற மதிப்புகளை ஒரு வரை படத்தில் வரைந்தால் $\mu$ என்ற கால அளவிற்கு ஒரு தோராயம் கிடைக்கும். அந்த மதிப்புக்கு அருகே உள்ள சில மதிப்புகளைக் கருதி, ஒவ்வொன்றிற்கும் $R^2$ என்பதனை கணக்கிட வேண்டும். இந்த இருமதிப்புகளையும் ஒரு வரை படத்தில் குறிப்பிட்டால் கிடைக்கும் வரை படத்திற்கு பீரியோடோகிறும் (Periodogram) என்று பெயர் இந்த படத்திருந்து $R^2$ - எப்பொது ஒரு பெருமத்தை (Maximum) அடைகிறதோ அந்த $\mu$ - மதிப்புதான் உண்மையானவாகும் என்பது முடிவு. இங்கு தொடரில் ஒரே ஒரு காலஅளவுள்ள பகுதி யுள்ளது என்று கருதுவதால் $\mu$-விற்கு ஒரே ஒரு மதிப்பீடு கிடைகின்றது. காலத் தொடரில் வெவ்வேறு காலஅளவுகள் கொண்ட பகுதிகளும் இருக்கலாம், அப்பொழுது, செய்முறைகள் இன்னமும் கடினமாகிவிடும்.

## 5.19 முறையற்ற ஊசலாட்டங்கள்: (Random fluctuation)

சுழல் ஏற்ற விறக்கங்களையும் நீக்கியபின் எஞ்சியுள்ளவை, முறையற்ற ஊசலாட்டங்கள் தாம். பெயருக்கேற்ப இவைகள் எந்த ஒரு ஒழுங்கிற்கும் கட்டுப்படாதவை. சிலவேளைகளில், இவை மிக அதிகமானதாகக்கூட இருக்கலாம். திடிரென்று ஏற்படும் வேலை நிறுத்தம் ஒன்றினல் உற்பத்தி பெருமளவு பாதிக்கபடு மல்லவா? அதனை அளவிடுவதோ, எதிர்நோக்கவதோ இயலாத காரியம். அதேபோல், பூகம்பங்கள், வெள்ளம், போர்கள், வரட்சி காலங்கள் என்பவை ஏற்படும் பொழுதும், நாட்டின் பொருளாதாரத்தில் பெருவாரியான மாற்றங்கள் நிகழக்கூடும். அவைகளை தனித்தனியேதான் கணக்கிட வேண்டும்—அல்லது ஆருய'வேண்டும். அது போன்றவைகளை விட்டுவிட்டால், மீதி இருப்பவை ராண்டம் ஊசலாட்டங்களே, இவைகள் பற்பல காரணங்களால் ஏற்படுபவைகள்; ஒவ்வொரு காரணத்தின் விளைவும் மிகச்சிறியதாக விருப்பினும், அவைகள் அனைத்தின் மொத்தமும் சிறியதாக இருக்காது. அத்தகைய காரணங்களின் விளைவுகள் நார்மல் அல்லது இயல்நிலை பரவல் அமைப்பில் இருக்கும் என்பது புள்ளியல் முடிவுகளில் ஒன்று. எனவே $\frac{Y}{TSC}$ என்ற மதிப்புகளை ராண்டம் ஊசலாட்டங்கள் தாம் என்று கருதி அவைகள் நார்மல் பரவலில் அமைந்துள்ளனவா என்று ஆருயலாம். அப்படி செய்வதற்குமுன், அவைகளிலுள்ள சுருக்கம் சிறக்க வேண்டும். அதற்கு நகரும் சராசரிகளை பயன் படுத்துவது வழக்கம். மூன்று, அல்லது ஐந்து—மாத சராசரிகளை கணக்கிடுவது வழக்கம்—ஆனல் இவைகள் அவ்வளவு திட்பமான மதிப்புகளைத் தரும் என்று கூற முடியாது. அதிக மானமாத நகரும் சராசரிகளைக்

கணக்கிட்டால் அவைகளும் நல்ல முறையில் விவரங்களை தருவ தில்லை என்று கணக்கிடப்பட்டுள்ளது.

சாதாரணமான நகரும் சராசரி எடுக்காமல் நிறையிட்ட நகரும் சராசரி எடுக்கும் வழக்கம் உண்டு. இந்த நிறையிடும் முறையை சற்று விளக்குவோம்.

5.19.1 நிறையிட்ட நகரும் சராசரி முறை:

மூன்று வகையான நிறையிடும் முறைகள் உண்டு:—

(i) எளிதானது:— எல்லா உறுப்புகளுக்கும் ஒரே வகையான நிறை களைத்தருவது. இது சாதாரண நகரும் சராசரியாகி விடும்.

(ii) ஈருறுப்பு (Biromial)—மூன்று மாத நகரும் சராசரி கணக்கிட, முதல் மாதத்திற்கு நிறை = 1, இரண்டாம் மாதத்திற்கு = 2) மூன்றும் மாதத்திற்கு = 1 என்று வைப்பது (1.2,1) என்பவை ஓர் ஈறுருப்புக் கோவையில். நிகழும் கெழக்கள் (Coefficients அதே போல்'-n உருப்புகளுக்கு வரும் சராசரி கணக்கிட வேண்டு மானால், நிறைகள் முறையே, $1, \binom{n}{1}, \binom{n}{2}, \ldots, \binom{n}{n}$ என்று இருக்க வேண்டும். இந்த நிறைகளின் மொத்தம் $1+\binom{n}{1}+ \ldots + \binom{n}{n} = 2^n$. எனவே நிறைகளை விகிதங்களாக்கினால் அவைகள் முறையே $\frac{1}{2^n}, \frac{\binom{n}{1}}{2^n}, \frac{\binom{n}{2}}{2^n}, \ldots \frac{\binom{n}{n}}{2^n}$ என்று வரும்; அவை களின் மொத்தம் = 1 ஆகிவிடும்; கணக்கு போடுதல் சற்று எளிதாகும்.

எடுத்துக்காட்டாக, 5- மாத நகரும் சராசரி கணக்கிட நிறைகள் 1,4,6,4,1; மொத்தம் = $\frac{1}{2^4}$ = 16; விகிதமாக்கப் பட்ட நிறைகள் முறையே .0625, .2500, .3750, .2500, 0.625, என்பவை சுருக்க நீக்குதலை இரண்டு அல்லது மூன்று அடுக்கு களிலும் செய்யலாம்.

ஓர் ஈருறுப்பு சராசரியை 3-மாதங்களுக்கு கணக்கிட்டு. கிடைக்கும் விவரங்களுக்கு மறுபடியும் 3...மாத ஈருறுப்புச் சராசரியை கணக் கிடலாம்; அப்படி செய்வது முதல் விவரங்கலுக்கு 5—மாத ஈறுருப்புச் சராசரிகளைக் கணக்கிட்டுதலுக்கு சமம். அதே போல், ஒரு 5—மாத ஈருறுப்புச் சராசரி கணக்கிட்டு, பிறகு 3—மாத சரா சரி கணக்கிடுவது, முதல் நிலையில் 7—மாத ஈருறுப்பு சராசரி கணக்

கிடுதலுக்கு சமமாகும். பொதுவாக, இந்த முறை சாதாரண சராசரியைவிட சுருக்கமற்ற முடிவுகளை தரும் எனலாம்.

(iii) பல்லுறுப்புக்கோவை பொருத்துதல்

CI என்று மதிப்புகள் கிடைத்திருக்கும் பொழுது, அவைகளை சுருக்க மற்றவைகளாக்கி, சுழல் ஏற்றவிறக்கஙகளைக் கணக்கிடுவதற்கு இந்த முறை மிகவும் சிறந்தது $Y_1, Y_2, Y_3$ $Y_t$ .. என்ற மதிப்புகள் இருக்கும் என்று கொள்வோம். இவைகளை r—எண்ணிக்கை கொண்ட பகுதிகளாக்கி, ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு பல்லுறுப்புக் கோவையை பொருத்தி, அதநின்று கிடைக்கும் போக்குமதிப்பை சுழலின் நடுப்பகுதிக்கான மதிப்பீடாகக் கருதுவோம்.

$Y_t = a_0 + a_1t + a_2t^2 + \dots + a_qt^p$ என்பதுதான் பல்லுறுப்புக் கோவை. $a_0, a_1, .. a_p$களை மதிப்பிட குறைந்தவர்க்க முறையை பயன்படுத்துவோம். நமக்கு கிடைத்துள்ள விவரங்கள் ஒற்றைப் படை என்று வைத்துக் கொண்டு, இவைகளை:$Y_{m}-, Y(_m), \dots Y_0, \dots Y_{m-1}. Y_n$ என்று எழுதுவோம்; அதாவது (2n+1) மதிப்புகளுக்கு ஒரு P- அடுக்கு பல்லுறுப்புக் கோவையை பொருத்துகிறோம்.

கிடைக்கும் நார்மல் சமன்பாடுகள்:

$$\frac{\sigma}{\sigma a^j}\left\{\Sigma\,[Y_t - (a_0 + a_1t + \dots + a_pt^6)\,]\right\}^{*} = 0$$

$$j = 1, 2, \dots p$$

அல்லது

$$\Sigma t^j\, Yt - a_0\,.\,\Sigma t^j - a_1\,.\,\Sigma t^{j+1} - \dots - a_u\,\Sigma t^{j+p} = 0$$

$$j = 1, 2, = \dots p,$$

என்ற (P+I) சமன்பாடுகள். இவைகளிலிருந்து நமக்குத் தேவையானது மைய உருப்பான $Y_0$-ன் மதிப்புதான். t=o, என்று வைத்தால் $Y_0 = a_0$ என்று வருகிறது. எனவே$a_0$-ஐ மட்டுமே கணக்கிட வேண்டும். அதன் மதிப்பு $a_0 = C_0 + C_1\,y_{m} + \dots + C_{2m+1}\,\delta_m$ என்று எழுதலாம்; அதாவது, $a_0$- என்பது, $y_{-m}, y(_{m-1}) \dots y_m$ என்பவைகளின் ஒரு நிறையிட்ட சராசரியாகும்.

எடுத்துக்காட்டாக, $u_{-3}, u_{-2}, u_1, u_0, u_1 . u_2, u_3$ என்ற 7—அடுத்தடுத்த மதிப்புகளுக்கு ஒரு 3—ம் அடுக்கு பல்லுறுப்புக்கோவையான $Y_t = a_0 + a_1t + a_2t^2 + a_3t^3$ என்பதனை பொருத்துவோம்.

$\Sigma u = 7a_0 \quad + 28a_2$

$\Sigma tu = \quad 28\,a^1 \quad + 196a_3$

$\Sigma t^2u \cdot 28_0 \quad + 196_2$

$\Sigma t^3u = \quad 196a_1 + 588a_3$

என்று வரும். [இங்கு t-ன் மதிப்புகள் — 3, —2, —1, 0, 2, 3 என்பவை; எனவே n =73 $\Sigma t = \Sigma t = 0\ \Sigma t^5 = ... = 0$ ; மற்றும்

$\Sigma t^2 : 2. \sum_{i-1}^{3} i^2 = 28; \Sigma t^4 = 2 \sum_{1}^{3} t^4 = 196$ என்று வரும்.]

$a_0$ — ஐ மட்டும் கணக்கிட $a_0 = \frac{1}{21}[7\ \Sigma u - \Sigma t]$

எனவே $a_0 = \frac{1}{21}\ [-2u=+3u_2+6u_{1-}+7u_0+6u_1+3u_2-2u_3]$

அதாவது, மைய மதிப்பைக் கணக்கிட நாம் பயன்படுத்த வேண்டிய நிறைகள் — முறையே

$\frac{-2}{21}, \frac{3}{21}, \frac{6}{21}, \frac{7}{21}, \frac{6}{21}, \frac{3}{21}, \frac{-2}{21}$

என்பவை; அதாவது;-. 0952,. 1459,. 2875,. 3333,. 2875 .1459, —.0952.

இவைகளின் மொத்தம் 1 தான். நிறைகள் இடமிருந்து வலமும் வலமிருந்து இடமும் ஒன்றேயாக உள்ளதால், சுருக்கமாக அவை களை $\frac{1}{22}$(— 2, 3, 6. 7 ) என்று எழுதுவது வழக்கம் கடைசி, எண்ணை 7—ஐ மட்டும் தடித்தானதாக எழுதுவதால், அதற்கு பிறகு 6, 3, — 2 என்று முதலுள்ள எண்களே தலைகீழாக வரும் என்று அறியலாம். 7— மதிப்புகளை கருதியுள்ளதால், முடிவை கீழ் வருமாரும் எழுதலாம்.

[7] $\frac{1}{21}$ [—2, 3, 6, 7]

இதேபோல் வெவ்வேரு எண்களுள்ள பல்லுறுப்புக்கோன் களுக்கான நிறைகளை கீழ்கண்ட பட்டியலிருந்து பெரலாம்.

| தொடரின் அடுத்தடுத்த மதிப்புகளின் எண்ணிக்கை | நிறைகள் |
|---|---|
| [5] | $\frac{1}{35}$ [—3, 12, 17 |
| [7] | $\frac{1}{21}$[ -21, 3, 6, 7] |

*[9]* $\frac{1}{231}$ *[--21, 14, 39' 54, 59]*

*[11]* $\frac{1}{429}$ *[—36, 9, 44, 69, 84, 89]*

*[13]* $\frac{1}{143}$ *[—11, 0, 9, 16, 21, 24, 25]*

*[15]* $\frac{1}{1105}$ *[—78, — 13, 42, 87, 122, 147, 152, 167]*

**எடுத்துக்காட்டு 14** முன்பு குறிப்பிட்டுள்ள அமெரிக்க கம்பெனி யொன்றின் மாதந்திர விற்பனைகளுக்கு I—மதிப்புகளைகணக்கிடல்

**அட்டவணை**

| 1<br>ஆண்டும்,<br>மாதமும் | 2<br>CI<br>மதிப்பு<br>கள் | 3<br>$C_1$ | 4<br>$C_2$ | 5<br>$100\times\left(\frac{CI}{C2}\right)$ | 6<br>சதவீத<br>விலக்கம் |
|---|---|---|---|---|---|
| 1947 ஜன | 94.0 | ... | ... | ... | ... |
| பெப் | 93.0 | ... | ... | ... | ... |
| மார் | 93.7 | ... | ... | ... | ... |
| ஏப்ரய் | 92.7 | 94.9 | ... | ... | ... |
| மே | 98.8 | 95.6 | ... | ... | ... |
| ஜூன் | 94.9 | 94.3 | ... | ... | ... |
| ஜூலை | 92.8 | 94.1 | 94.0 | 98.7 | —1.3 |
| ஆக | 91.7 | 93.9 | 95.1 | 96.4 | —3.6 |
| செப் | 99.6 | 97.9 | 98.0 | 101.6 | +1.6 |
| அக் | 101.1 | 101.8 | 101.1 | 100.0 | 0.0 |
| நவ | 106.9 | 104.8 | 103.8 | 103.0 | +3.0 |
| டிஸ | 104.0 | 104.6 | 105.4 | 98.7 | —1.3 |
| 1948 ஜன | 105.3 | 106.1 | 106.5 | 98.9 | —1.1 |
| பிப்ர | 105.1 | 107.9 | ... | | |
| மார் | 112.4 | 108.4 | ... | | |
| ஏப் | 110.1 | 108.2 | ... | | |
| மே | 102.7 | ... | | | |
| ஜூன் | 108.5 | ... | | | |
| ஜூலை | 110.1 | | | | |

இரண்டாம் நிரலில் CI மதிப்புகள் உள்ளன. இவைகளுக்கு முதலில் 7- மாத அளவில் நிறைகளிட்டு, அடுத்த நிரலிலுள்ள (3) $C_1$—மதிப்புகளைப் பெற்றுள்ளோம். நிறைகள் முறையே *[7]*

அல்லது $\frac{1}{21}[-2, 3, 6, 7, 6, 3, -2]$ எனவே, (3)—ல் நிரலில்

$$94.9 = \frac{(-2)(95.0) + (3)(93.0) + (6)(93.7) + (7)(92.7) + (6)(98.8) + (3)(94.9) + (-2)(92.8)}{21}$$

இந்த CI—மதிப்புகளை மறுபடியும் 7—மாத நிறையிட்ட நகரும் சராசரிகளாக்கினால் $C_2$- மதிப்புகள் [(4)-ம்நிரல்] கிடைக்கும். அதாவது $C_2$- முதல் மதிப்பான 94.0 கணக்கிட

$$94.0 = \frac{(2)(94.9) + (3)(95.6) + (6)(94.3) + 7(9.11) + 6(93.3) + (3)(97.9) + (-2)(10:8)}{21}$$

இது போலவே மற்ற $C_1$—, $C_2$—. மதிப்புகளும் கணக்கிடப் பட்டுள்ளன. (5)—ம் நிரலில் சுழல் வீக்கங்களை CI- மதிப்பு களிலிருந்து நீக்கியுள்ளது. கடைசி நிரலில் I-யின் மதிப்புகள், சதவீத அளவில் உள்ளன. இந்த மதிப்புகள் பொதுவாக நார்மல் பரவல் அமைப்பில் அடங்கும் எனக்கூறலாம்.

**5.20** மாறி—வேறுபாடுமுறை (Variable difference method)

I என்ற முறையற்ற, ராண்டம் வடிவமான மாற்றங்களை வைத்து இவைகளின் மாறுபாட்டை (Variance) கணக்கிடுவோம். அவைகள் நார்மல் பரவல் அமைப்பில் இருந்தால், அவைகளின் கூட்டுச்சராசரி பூஜ்யமாக இருக்கும். எனவே, மாறுபாட்டை கணக்கிட்டு விட்டால் அவைகளின் தன்மையை நன்கு அறியலாம். அவைகளின் வீச்சு $(0+3\sigma)$ என்றால், $\sigma$- என்பது = மாறுபாடு. எனவே மாறுபாட்டை கணக்கிட்டு, $+3\sigma$ என்ற எல்லைகளை வகுத்து, முன்னுள்ள அட்டவணையில் 6—ம் நிரலிலுள்ள சதவீத விலக்கங்களையும், $+3\sigma$ எல்லைக் கோடுகளையும் ஒரு வரை படத்தில் வரைந்தால், ஏறக்குறைய எல்லா புள்ளிகளுமே அவ்விரு எல்லைகளுள் அடங்கியிருக்க வேண்டும் அப்படி ஓரிருபுள்ளிகள் எல்லைகளுக்கு வெளியே இருக்குமாயின், அவை எந்த மாதத்தின் அளவுகள் என்பதை கண்டறிந்து, முதல்நிலை விவரங்களை ஆராய்ந்து, அந்த காலத்தில் ஏதாவதொரு முக்கிய நிகழ்ச்சி நடந்ததா என்பதையும் பரிசீலிக்க வேண்டும்.

மாறுபாட்டை கணக்கிடுவதற்கு கீழ் கண்ட முறையை பயன் படுத்த வேண்டும்.

முறையற்ற மாறியை $C_t$ என்று குறிப்பிடுவோம். அப்பொழுது $E(E_t = O$ , $Var(t_t) + = O^2 = v$ என்று வைத்துக் கொள்வோம் மற்றும் $E(t_t t_t^1) = 0$; இங்கு $t_1\ t^1$ என்பது இருகால அளவுகளை (மாதங்களோ, வாரங்களோ) குறிப்பிடும். ஏனென்றால் t- என்ற

காலத்தில் ஏற்படும் ராண்டம் மாற்றமும், $t^1$ காலத்தில் ஏற்படும் ராண்டம் மாற்றமும் தொடர்பற்றவை.

இப்பொழுது $\epsilon_t$ என்பதன் வேறுபாடுகளைக் கணக்கிடுவோம்.

$$\Delta\epsilon_1 = \epsilon_{t+1} - \epsilon_t$$

$$\Delta^2\epsilon_t = \Delta(\epsilon_{t+1} - \epsilon_t) = \epsilon_{t+2} - 2\epsilon_{t+1} + \epsilon_t \ ..$$

$$\Delta^r \epsilon t = \epsilon_{t+r} - \left(\frac{r}{1}\right)\epsilon_{t+r-1} + \left(\frac{r}{2}\right)$$

$$\epsilon_{t+r-2} + \ldots + (-1)^r \ \epsilon_t.$$

எனவே, $E[\Delta^r \epsilon_t] = E(\epsilon_{t+r}) - \left(\frac{r}{1}\right)E(\epsilon_{t+r-1})$

$$+ \left(\frac{r}{2}\right)E(\epsilon_{t+r-2}) - + \ldots + E(\epsilon_1)^r \epsilon) = 0$$

$$\text{var}\left[\Delta^r \epsilon_t\right] = E\left[\left(\Delta^r \epsilon_t\right)^2\right] = E$$

$$\left[\left(\epsilon_{t+r} - \binom{r}{1}\epsilon_{t+r-1} + \binom{r}{2}\epsilon_{t+r-2} - + \ldots + (-1)^r \epsilon t\right)^2\right]$$

$$= E\left[\epsilon^2_{t+r}\right] + \binom{r}{1}E\left(\epsilon^2_{t+r-1}\right) + \binom{r}{2}^2 E$$

$$\left(\epsilon^2_{t+r-2}\right) + \ldots\ldots + E\left(\epsilon^2\right)$$

மற்ற உறுப்புகள் பூஜ்யமாகிவிடும்; ஏனென்றால் $E(\epsilon_t \epsilon_t') = 0$ என்று கருதியுள்ளோம். மற்றும் $E(\epsilon^2) = \nu - \sigma^2$ ஆதலால்

$$\text{var}\left[\Delta^r \epsilon_t\right] = \nu\left[1 + \binom{r}{1}^2 + \binom{r}{1}^2 + \ldots\ldots + 1\right]$$

[ ] அடைப்புகளிலுள்ள மொத்தத்தைக் கணக்கிட வேண்டும்.

$$(1+x)^{2r} = (1+x)^r(1+x)^r = \left[1 + \binom{r}{1}x + \binom{r}{2}x^2 + \ldots + x^r\right]$$

$$\left[x^r + \binom{r}{1}x^{r-1} + \binom{r}{2}x^{r-2} + \ldots 1\right]$$

எனவே, இடது பக்கத்திலுள்ளதில் $x^r$-ன் கெழு $= \left(\frac{2r}{r}\right)$

வலது பக்கத்திலுள்ளதில் $x^r$-ன் கெழு$=1+\binom{r}{1}^2+\binom{r}{2}^2+\dots+1$

அதாவது $1+\binom{r}{1}^2+\binom{r}{2}^2+\dots+1=\binom{2r}{r}$ என்று

வருகின்றது. எனவே $\text{var}\left[\Delta^r \epsilon_t\right]=\left[\binom{2r}{r}\right]\nu$

அல்லது $\nu=\dfrac{\mu^1{}_2\,[\Delta^r \epsilon_t]}{\binom{2r}{r}}$ ★

இங்கு மாறுபாட்டைக் கணக்கிட நாம் இரண்டாம் மொமென்டை (Moment)மாத்திரம் கணக்கிடுவதால் $\mu'_2$-என்று எழுதியுள்ளோம். இந்த [★] மதிப்பை உபயோகித்து $\nu$-ன் மதிப்பீடுகளைக் படிப் படியாகத திருத்தமாகப் பெறலாம். அம் முறை பின்வருமாறு ;

கொடுக்கப்பட்ட $\epsilon_t$ தொடரின் முதல் வேறுபாடுகளைக் (first differences) கணக்கிட வேண்டும்; அவைகளின் $\mu^1{}_2$ (இரண்டாம் மொமென்டைக் கணக்கிட்டு, அதனை $\binom{2}{1}=2$ என்பதால் வகுக்க வேண்டும். இது $\nu$-ன் முதல் நிலை மதிப்பீடு. இப்பொழுது, $\epsilon_t$-தொடரின் இரண்டாம் வேறுபாடுகளைக் (second differences) கணக்கிட்டு அவைகளின் $\mu^1_2$-ஐக் கண்டு, அதனை $\binom{4}{2}=6$ என்ப தால் வகுக்க, $\nu$-ன் இரண்டாம் நிலை மதிப்பீடு கிடைக்கும். இப்படியே பல முறை செய்ய வேண்டும். பொதுவாக, ஒவ்வொரு நிலையிலும் கிடைக்கும் மதிப்பீடு முந்திய மதிப்பீட்டினைவிடக் குறைவாகவே இருக்கும். ஒரு நிலையில், அவ்விதம் குறைவது நின்றுவிட்டு, சுமாராக ஒரே அளவு மதிப்பீடுகள் கிடைக்கும். அந்த நிலையின் மதிப்பீட்டையே தரமான மதிப்பீடாகக் கருதுவோம். இந்த முறை, முறைப்படியாக ஏற்படும் (periodic terms) மாற்றங்களை நீக்காது என்று கெண்டால் (M.G. Kendall) கூறுகிறார்.

இந்த முறையைப் பயன்படுத்த, கொடுக்கப்பட்ட விவரங் களின் எண்ணிக்கை அதிகமாக இருத்தல் வேண்டும். 10,—15 மதிப்புகளைக் கொண்ட வரிசைகளிலிருந்து கணக்கிடுதல் நல்ல தன்று.

முந்திய எடுத்துக்காட்டில் செய்ததுபோல் சதவீத விலக்கங் களைக் கணக்கிட்டுவிட்டால் [அட்டவணை —நிரல் (6)]. அந்த விலக்கங்களை ஒரு பரவலாக அமைத்து. அந்தப் பரவலிலிருந்தும் வேறுபாட்டின் மதிப்பீட்டைப் பெறலாம். இம்முறையில் கணக் கிடவும் மிக அதிக எண்ணிக்கையுள்ள விவரங்கள் தேவை.

5.21 வரிசைத் தொடர்புக் கெழுக்கள் (Serial Correlations)

ஒரு காலத் தொடர் வரிசையிலுள்ள மதிப்புகளிடையே ஏதாவதொரு தொடர்பு உள்ளதா என்பதனை ஆராய்வதே இந்தப் பகுதியின் நோக்கம். காலத் தொடர் வரிசையில் பற்பல காரணங்களால் ஏற்றவிறக்கங்கள் ஏற்படக்கூடும்—அது சுழல் ஏற்றவிறக்கங்களைக் கொண்ட பல பகுதிகளின் மொத்தமாக இருக்கலாம். அல்லது, நாம் நகரும் சராசரியைப் பயன்படுத்துவதால் அத் தொடர் வரிசையில் பல மாற்றங்கள் ஏற்பட்டிருக்கலாம்; அல்லது அந்த வரிசையில் ஒரு வகை தற்போக்கு (auto regression) இருக்கலாம். அதாவது, $u_{t+1} = au_t + \epsilon_{t+1}$ அல்லது $u_{t+2} = au_t + bu_{t+1} + \epsilon_{t+2}$. இங்குத் தொடர் வரிசையின் மதிப்புகள்

$u_1$, $u_2$, $u_3 \ldots \ldots u_t$, $u_{t+1}$, $u_{t+2}$ ... என்பவை; a, b கள் மாறிலிகள்; $\epsilon_{t+1}$, $\epsilon_{t+2} \ldots$ போன்றவை ராண்டம் மாறிகள். இது போன்ற பிரச்சினைகளுக்குத் தீர்வுக் காண்பதற்கு வரிசைத் தொடர்புக் கெழுக்கள் பயன்படுகின்றன.

அடுத்தடுத்த மதிப்புகளை ஒரு ஜோடியாகக் கருதித் தொடர்புக் கெழு கணக்கிட்டால் நமக்கு வரும் கெழுவை $r_1$ என்று குறிப்பிடுவோம்.

$$\text{அதாவது} \quad r_1 = \frac{\text{cov}\,(u_t,\ u_{t+1})}{\sqrt{[(\text{var}\ u_t)(\text{var}_{+1})\ u_{t+1}]}} = \frac{\text{cov}\ (x, y)}{\sqrt{(\text{var}\ x)(\text{var}\ y)}}$$

| இங்கு | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| $x = u_1$ | $u_2$ | $u_3$ | $u_4$ | ... | $u_t$ | $u_{t+1}$ | ... |
| $y = u_2$ | $u_3$ | $u_4$ | $u_5$ | ... | $u_{t+1}$ | $u_{t+2}$ | ... |

| மாறிகளை | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| $x = u_1$ | $u_2$ | $u_3$ | ... | $u$ | $u_{t+1}$ | ... |
| $y = u_3$ | $u_4$ | $u_5$ | | $u_{t+2}$ | $u_{t+3}$ | |

என்று கருதி, அவைகளிடையே தொடர்புக் கெழு கணக்கிட்டால் $r_2$ கிடைக்கும்.

$$\text{அதாவது} \quad r_2 = \frac{\text{cov}\,(u_i,\ u_{i+2})}{\sqrt{(\text{var}\ u_i)\,(\text{var}\ u_{i+2})}}$$

இப்படியே, பொதுவாக:

$$r_k = \frac{(\text{cov}\ u_j\ ,\ u_{j+k})}{\sqrt{(\text{var}\ u_j)\,(\text{var}\ u_{+k})}}$$

இந்தக் கெழுக்கள் வரிசைத் தொடர்புக் கெழுக்கள் எனப்படும். இவைகளையே தற்போக்குத் தொடர்புக் கெழுக்கள் (auto-correlations) என்று கூறுவதும் உண்டு.

பொதுவாக $r_0=1$ , $r_{-k}=r$ என்று கருதுவது வழக்கம். இந்தக் கெழுக்களை ஒரு வரைபடமாக அமைத்தால் கிடைக்கும் படத்தைத் 'தொடர்புப்படம்' (correlogram) என்று கூறுவோம். அதாவது இடை வரிசையில் $k=0, 1, 2$ .. என்ற மதிப்புகளும் குத்து வரிசையில் $r_0, r_1, r_2, \ldots r_k$ என்ற மதிப்புகளும் அமைக்கப்பெறும். இந்தப் படத்தின் தன்மையை ஆராய்வதால் காலத்தொடர் வரிசையின் தன்மையை அறிய முடியும். [முழு விவரங்களுக்கு ஏனைய நூல்களைப் பார்க்க வேண்டும்.] இந்தப் படம் வரைவதற்கும் வரிசைத் தொடர் நீண்டதாக இருப்பது அவசியம்; சுமார் $r_{30}$ — $r_{50}$ வரை கணக்கிடக்கூடிய விவரங்கள் இருப்பது நலம்.

இரு மாறிகளும் காலத்தொடர்வரிசையாக இருப்பின் அவைகளிடையே ஒரு தொடர்புக் கெழு கணக்கிடுவது சிறந்ததன்று. ஏனென்றால், இரு மாறிகளிடையேயும் காலம் என்ற மாறி தொடர்பு கொண்டுள்ளது அல்லவா? எனவே, ஒரு சிறைத் தொடர்பு முறைகளைக் கொண்டு (partial correlations) மாறியின் தன்மையை அகற்றி, தொடர்புக் கெழு கணக்கிடலாம். அப்படிச் செய்தாலும் அவ்வளவு சிறப்பாக இருக்காது. இரு தொடர் வரிசைகளிலும் உள்ள சுழல் ஏற்றவிறக்கங்கள், முறையற்ற மாறுபாடுகள் இவைகளினால் தொடர்புக் கெழுவின் மதிப்பு அதிகமாக ஆகிவிடலாம். அவ்வகைத் தொடர்புகளைப் 'பொருளிலாத் தொடர்பு' (nonsense correlation) என்பர். உதாரணமாக, நம் நாட்டில் எஃகு உற்பத்திக்கும் இறப்பு வீதங்களுக்கும் ஒரு தொடர்புக் கெழு கணக்கிட்டால் அது எதிரிடைத் தொடர்பாக இருக்கலாம்.

எனவே, திருத்தமான முடிவுகள் கிடைப்பதற்காக, இரு மாறிகளிலேயும் 'காலம்' என்ற மாறியின் பாதிப்பை நீக்கிய பின்பு தொடர்பு கணக்கிடலாம். இதற்குப் போக்கு மதிப்புகளையோ இணைப்புச் சார்புகளையோ பயன்படுத்தலாம். $x_i$—$y_i$ என்ற இரு மாறிகளுக்குப் போக்கு மதிப்புகள் முறையே $Tx_i$, $Ty_i$ என்று இருப்பின், புதிதாக $X_i = \frac{x_i}{Tx}$ ; $Y_i = \frac{y_i}{Ty_i}$ என்ற மாறிகளைக் கணக்கிட்டு, $(X_i, Y)$ -களிடையே தொடர்பு அளவிடலாம். வேறு ஒரு பிரச்சினையும் உள்ளது. சில வேளைகளில் இரு மாறிகளிடையே பின்னடைவுத் தொடர்பு (Lag correlation) இருக்கலாம். அதாவது, ஒரு மாறியின் t என்ற காலத்தின்

மதிப்பு, மற்ருெரு மாறியின் t + k என்ற காலத்தின் மதிப்புடன் தொடர்பு கொண்டதாக அமையலாம். எடுத்துக்காட்டாக, ஓர் ஆண்டு பருத்தி உற்பத்தியின் அளவு, அடுத்த ஆண்டு துணிமணி கள் உற்பத்தியுடன் தொடர்பு கொண்டதாக இருக்கலாம். எனவே, அந்த வகை தொடர்புகளைக் கணக்கிட $x_t$-ஐயும், $y_{t+k}$ -ஐயும் பயன்படுத்த வேண்டும்.

சுருங்கக் கூறின், இரு காலத் தொடர் வரிசைகளிடையே தொடர்புகளை அளவிடுவது கடினமான காரியம்.

## பயிற்சிக் கணக்குகள்

1. காலத்தொடர் வரிசை ஆய்வுகளைப்பற்றிய ஒரு சிறு கட்டுரை வரைக. (எம்.ஏ.)

2. காலத்தொடர் வரிசைகளுள் காணப்பெறும் நெடுங்காலப் போக்கினை வேறுபடுத்தும் முறையையும், மற்ற போக்குகளைப் பகுக்கக் கையாளப்படும் புள்ளியியல் முறைகளையும் விரிவாக எழுது. (எம்.ஏ.)

3. காலத்தொடர் வரிசை, வணிகவியலில் எவ்வாறு பெரும் பங்கு வகிக்கிறது என்பதை ஒரு விரிவான கட்டுரைமூலம் விளக்கு. காலத் தொடர் வரிசை என்ருல் என்ன என்பதைத் தெளிவாக்கு. (பி.காம்.)

4. காலத்தொடர் வரிசைகளுள் (அ) நெடுங்காலப் போக்கினை நீக்கும் முறையையும் (ஆ) பருவகால மாறுபாட்டு அளவீட்டு முறையையும்பற்றி, ஏதாவது ஒரு முறையை அனுசரித்து விளக்கு. பருவகால மாறுபாடுகளை அளவிடும்போது சுழல் மற்றும் முறையற்ற போக்குகளை நீக்குவது எவ்வாறு? (ஐ.ஏ.எஸ்.)

5. நெடுங்காலப் போக்கு என்பது யாது? கொடுக்கப்பட்ட நெடுங்காலப் போக்குள்ள காலத்தொடர் வரிசையுள் காணப்பெறும் பருவகால, சுழல் மாருட்டங்களைப் புள்ளியியல் முறைகளைக் கொண்டு எவ்வாறு நீக்குவது என்பதை விளக்கு.

6. நகரும் சராசரிகளைப் பயன்படுத்துவதால் ஏற்படும் சாதக பாதகங்களைப்பற்றிய விரிவான கட்டுரை ஒன்று எழுது.

7. காலத் தொடர் வரிசைகளில் முறையான, முறையற்ற மாறு பாடுகளை வித்தியாசப்படுத்திக் காட்டு.
காலத் தொடர் வரிசைகளைப் பகுப்பதால் அடையும் நன்மை கள் யாவை?

8. நெடுங்காலப் போக்கு, பருவகால மாறுபாடுகள் மற்றும் சுழல் மாறுபட்டங்களுக்கான வேறுபாடுகள் யாவை? கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து நெடுங்காலப் போக்கினை அளவிடுவதெப்படி என்பதைத் தெளிவாக்கு.

9. குறைந்த வர்க்க முறையின்மூலம் நெடுங்காலப் போக்கின் மதிப்புகளை அளவிடுவதெப்படி? குறைந்த வர்க்க முறையின் மூலம் நாம் அனுசரிக்கும் கணித முறைகள் யாவை?

10. இரண்டாம் படி பல்லுறுப்புக் கோவை என்றால் என்ன? இரண்டாம் படி பல்லுறுப்புக் கோவையைப் பயன்படுத்தி, கொடுக்கப்பட்ட தொடரிலுள்ள நெடுங்காலப் போக்கின் அளவுகளை மதிப்பிடுவதெப்படி?

11. கீழே கொடுக்கப்பட்டுள்ள தொடர்கள் எத்தகைய போக்கு களை உள்ளடக்கியவை என்பதை விளக்கு.

(அ) தீயின் காரணமாக, ஒரு தொழிற்சாலை தன் உற்பத்தி யைத் தாமதமாக்கி வருதல்.

(ஆ) வணிகத் துறையில் மந்தமான கால அளவுகள்.

(இ) கிருஸ்துமஸ் விழா காரணமான பெரும் விற்பனைகள்.

(ஈ) மக்கள் பெருக்கம் காரணமாகத் தேவைப்படும் அதிக உணவு உற்பத்திகள்.

(உ) மே, ஜூன் மாதங்களில் இந்தியாவில் காணப்பெறும் அதிக அளவு திருமணங்கள்.

(ஊ) குடும்ப நலத்திட்ட முறைகளினால் ஏற்படும் மக்கள் தொகை இறங்கி வரும் நிலை.

(எ) சிறிய கார்களுக்கான அதிக அளவு தேவைகள் (demand).

(ஏ) சிமெண்ட் தொழிற்சாலையில் ஏற்படும் வேலை நிறுத்தம்.

12. (அ) காலத்தொடர் வரிசை என்றால் என்ன? காலத்தொடர் வரிசைகளுள் காணப்பெறும் பகுப்புகள் யாவை?

(ஆ) கீழ்க்கண்ட தொடரிலிருந்து நெடுங்காலப் போக்கினை அளவிடுவதெப்படி ?

(i) அடுக்கு வளைகோடுகள்
(ii) பல்லுறுப்புக் கோவைகள் கொண்ட வளைகோடுகள்.
(பி.எஸ்ஸி.75)

13. (அ) காலத் தொடர் வரிசைகளுள்ள பெருக்கல் மாடல் என்றால் என்ன? அத்தகு மாடலிலுள்ள பருவ கால மாறுபாடுகளை அளவிடுவதெப்படி?

(ஆ) காலத் தொடர் வரிசைகளுள்ள கூட்டல் மாடலை உபயோகித்து, சுழல் மாறுபாடுகளுக்கு நகரும் சராசரிகளை உபயோகிப்பதால் ஏற்படும் மாற்றங்களை விவரி.
(பி.எஸ்ஸி.75)

14. (அ) சுழல் மாறுபாடுகளை அளவிடுகையில் ஏற்படும் பிரச்சினைகள் யாவை? ஏதாவதொரு முறையின்மூலம் சுழல் மாறுபாடுகளை அளவிடும் முறையை விளக்கு.

(ஆ) வித்தியாச மாறிகள் (variate difference) முறையை விளக்கு. இவைகளின் உபயோகங்கள் யாவை? (பி.எஸ்ஸி.74)

15. காலத் தொடர் வரிசைகளை ஆராய்கையில் பயன்படுத்தப் படும் வெவ்வேறு வகை கணித மாடல்கள் யாவை? நெடுங் காலப் போக்கு நீங்கிய காலத் தொடர் வரிசைகளில் பருவ காலக் குறியீட்டெண்களைப் பெறுவதெப்படி?

16. சுழல் மாற்றங்களுக்கும், பருவகால மாறுபாடுகளுக்குமுள்ள வித்தியாசங்கள் யாவை?
பருவ கால மாறுபாடுகளை அளவிடும் முறைகளைப்பற்றியும், பருவ கால மாறுபாடுகளை நீக்கும் முறைகளைப்பற்றியும் விரிவாக எழுது. (பி.எஸ்ஸி.74)

17. (அ) காலத் தொடர் வரிசையிலுள்ள பகுப்புகள் யாவை?

(ஆ) பெருக்கல் மாடல் கொண்ட காலத்தொடர் வரிசையுள் பருவகாலச் சுழல் மாற்றங்களை அளவிடும் ஏதாவது இரு முறைகளைப்பற்றி விரிவாக எழுது.

18. (அ) காலத் தொடர் வரிசை ஆய்வுகளில் பெருக்கல் மற்றும் கூட்டல் மாடல்களுக்கான வேறுபாடுகள் யாவை? ஒவ்வொரு மாடலிலுள்ள சாதக பாதகங்களை விவரி.

(ஆ) சுழல் மற்றும் ராண்டம் பகுப்புகளில் நகரும் சராசரிகளை உபயோகிப்பதால் ஏற்படும் மாற்றங்கள் யாவை? (பி.எஸ்ஸி.)

19. அரைச் சராசரி முறையை உபயோகித்துக் கீழே கொடுக்கப் பட்டுள்ள விவரங்களுக்கு, நெடுங்காலப் போக்கின் நேர் கோட்டை வரை. வரையும் நேர்கோட்டின் உதவி கொண்டு 1968ஆம் ஆண்டிற்கான ஜனத் தொகையை மதிப்பிடு.

| ஆண்டுகள்: | 1960 | 1961 | 1962 | 1963 | 1964 | 1965 | 1966 | 1967 |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஜனத்தொகை: | 412 | 438 | 444 | 454 | 470 | 482 | 499 | 500 |

20. ஒரு தொழிற்சாலையில், 1967-69 ஆண்டுகளுக்கிடையிலான இரும்பு உற்பத்தியின் (நூறு டன் அளவுகளில்) விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| ஆண்டுகள் | 1967 | 1968 | 1969 |
|---|---|---|---|
| மாதங்கள்: | | | |
| ஜனவரி | 455 | 497 | 543 |
| பிப்ரவரி | 432 | 441 | 496 |
| மார்ச் | 395 | 422 | 465 |
| ஏப்ரல் | 360 | 393 | 420 |
| மே | 342 | 370 | 398 |
| ஜூன் | 328 | 356 | 382 |
| ஜூலை | 347 | 365 | 391 |
| ஆகஸ்ட் | 362 | 389 | 417 |
| செப்டம்பர் | 395 | 408 | 449 |
| அக்டோபர் | 423 | 463 | 496 |
| நவம்பர் | 458 | 490 | 522 |
| டிசம்பர் | 488 | 527 | 558 |

12 மாத நகரும் சராசரிகளைப் பயன்படுத்தி நெடுங்காலப் போக்கினையும், பருவகாலக் குறியீட்டெண்களையும் கணக்கிடு. (பி.எஸ்ஸி. 70)

21. பின் காணும் விவரங்களுக்கு 5 ஆண்டு நகரும் சராசரிகளைக் கணக்கிடுக. (இந்தியாவில் தேயிலை பயிராகும் நிலப்பரப்பு 1000 ஏக்கர்களில்.)

